# அற நூல்

(மூலமும் உரையும்)

ஆக்கியோன்

*சுவாமி சுத்தானந்த பாரதி*

யாதும் ஊரே யாவரும் கேளிர்
INTERNATIONAL INSTITUTE OF TAMIL STUDIES

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.ஐ.டி. வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Title | : | **Aranūl** |
| Author | : | **Swami Suthanandha Bharathi** |
| Publisher | : | **International Institute of Tamil Studies,**<br>C.I.T. Campus, Tharamani,<br>Chennai - 600 113. |
| Publication No. | : | 338 |
| Language | : | Tamil |
| Date of Publication | : | 1999 |
| Edition | : | First |
| Paper used | : | 60 GSM Creamwove |
| Size of the book | : | 1/8 Demy |
| Printing types | : | 10 points |
| No. of Pages | : | xiv + 154 |
| Price | : | **Rs. 38/-** |
| No. of Copies | : | 1200 |
| Printed by | : | **M/s. PAVAI PRINTERS (P) LTD.,**<br>142, Jani Jan Khan Road,<br>Royapettah, Chennai - 600 014. |
| Subject | : | Ethical Literature |

தமிழ் வளர்ச்சி இயக்ககத்தின் அரிய நூல்களை வெளியிடும் திட்டத்தில் நிதியுதவி பெற்று இந்நூல் வெளிவருகின்றது.

முனைவர் ச.சு. இராமர் இளங்கோ
இயக்குநர்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

# அணிந்துரை

கவியோகி சுத்தானந்த பாரதியார் 11-5-1897-இல் வெள்ளையர் ஆதிக்கத்தை எதிர்த்துப் போரிட்டு மடிந்த மருது பாண்டியர்கள் ஆண்ட சிவகங்கையில் பிறந்தவா. இவர் பல்திறப் புலமையாளர். இவர் காப்பியங்களை புனைந்தும் கட்டுரைகளை எழுதியும் நாவல்களைப் படைத்தும், மொழியாக்கம் செய்தும் நவீன இலக்கியத்தில் சாதனை புரிந்துள்ளார். உலகம் முழுவதும் சுற்றித் திரிந்த இவர் உலகத் தத்துவங் களை நுணுகி அறிந்தவ ரமண மகரிஷி, அரவிந்தர், ஞான சித்தர், பாரதியார், பரலி சு. நெல்லையப்பர் முதலியோரோடு பழகியவர்.

இவர் ஐம்பெருங் காப்பியங்களில் இன்று நமக்குக் கிடைக் காமல் போன குண்டலகேசி, வளையாபதி ஆகிய இரு நூல்களையும் அகவல் யாப்பில் செய்து தமிழுக்குத் தந்தவர். தம் சமகாலத்து மகாகவி பாரதி குறித்து 'கவிக்குயில் பாரதியார்' என்றதொரு நூலை எழுதிய சுத்தானந்த பாரதியார், தான் தோய்ந்து படித்த பண்டைய இலக்கி யங்கள் குறித்தும் நூல்கள் எழுதியுள்ளார். அவ்வகையில் சிலம்புச் செல்வம், திருக்குறளின்பம் என்பன குறிப்பிடத்தக்கன.

விக்டர் யூகோ எழுதிய நாவலைத் சமிழில் யாவரும் படித்தின் புறும் நடையில் 'ஏழை படும் பாடு' என்கிற தலைப்பிட்டு கவியோகி அவர்கள் மொழிபெயர்த்துள்ளார். மேலும், இவர் மேலைநாட்டு இலக்கியவாதிகளான தாந்தே, வால்ட் விட்மன் குறித்த வாழ்க்கை வரலாற்றையும் அவர்களது இலக்கியப் பணிகளையும் தமிழர்களுக்கு அறிமுகம் செய்து வைத்துள்ளார்.

கவியோகி, தான் வாழும் காலத்திலேயே மிகப் பெரிய அறிஞர் களால் பாராட்டப் பெற்றவர் ஆவார். இந்திய விடுதலை வேள்வியில்

ஈடுபாட்டுடன் உழைத்த அரவிந்தர், பாரதியார், பரலி சு. நெல்லையப்பர் ஆகியோர் இவரது தமிழ்ப் புலமையையும், தேசிய உணர்வையும் தத்துவப் பாங்கையும் பாராட்டியுள்ளார்கள்.

இவரது 'பாரத சக்தி மகாகாவியம்' என்ற மிகப் பெரிய நூல் 1984-ஆம் ஆண்டில் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் மாமன்னன் ராசராசன் விருதைப் பெற்றது. மேலும் கவியோகி அவர்கள் சோவியத் நாடு நேரு நினைவுப் பரிசையும் பெற்றுள்ளார். கவியோகியின் 'தமிழா கேள்' என்னும் கட்டுரைத் தொகுப்பு மொழியுணர்வற்ற, மரத்துப் போன தமிழர்களுக்கு உணர்வூட்டுகின்ற, தமிழறிஞர்களால் போற்றிப் பாதுகாக்கப்படுகின்ற ஒரு நூலாகும்.

தமிழால் வாழ்வோம்; தமிழால் ஒன்றுபடுவோம்; தமிழால் வெல்வோம் என்பதை இவரது நூல்களைப் படிப்போர் உணர்வர். இத்தகு பெருமதியாளர் தம் இல்வாழ்வைத் துறந்தாராயினும் தமிழ் வாழ்வைத் துறந்தாரில்லை. ''எண்ணும் போது தமிழையே எண்ணீர்! இசைத்துழி தமிழையே இசைப்பீர்!'' என்ற கோட்பாட்டை முன்வைத்த தமிழ்ப் பற்றாளர் கவியோகி ஆவார்.

அவர்தம் படைப்பாற்றலையும், யாப்பு புலமையையும், தத்துவத்தில் தோய்ந்த அவரது உள்ளத்தையும், தமிழ்பால் அவருக்கு இருந்த ஈர்ப்பையும், திருக்குறள் பால் அவர் கொண்டிருந்த மட்டற்ற மதிப்பையும் ஒருங்கு காட்டுவனவாக அமைவது கவியோகியின் அறநூல் எனும் இந்நூலாகும்.

திருக்குறளுக்குப் பிறகு குறள் வெண்பா யாப்பின் வீச்சை மிகத் திறமையாகக் கவியோகி அவர்கள் தம் அறநூலில் கையாண்டுள்ளார். இந்நூலில் திருக்குறளின் அறத்துப்பால், பொருட்பால் செய்திகளை மனதுள் பெற்று சுத்தானந்த பாரதியார் வளர்ந்து வரும் நாகரீக உலகின் தேவைகளுக்கு ஏற்ப பலபட புதிய செய்திகளோடு கூறுகின்றார்.

சுத்தானந்த பாரதி அவர்கள் இந்நூலை 1927-ம் ஆண்டு வெளியிட்டார். இந்நூலுக்கு திரு.வி.க. அவர்கள் வாழ்த்துப் பாடல் வழங்கியுள்ளார். 'அறநூலை' இயற்றிய சுத்தானந்த பாரதியார் தாமே அதற்குரிய

பதவுரையையும் விளக்கவுரையும் செய்துள்ளார். இந்நூலின் விளக்க வுரையில் கவியோகியார் பெற்ற வாழ்வியல் அனுபவங்களையும், சன்மார்க்கம் தழுவிய தத்துவ நுட்பங்களையும், பல நூல் கற்ற அவர்தம் புலமையையும் படிப்போர் ஒருங்கே அறிவர். இந்நூல் ஏழு சீர்களைக் கொண்ட குறள் வெண்பாக்களால் இயற்றப்பட்டதாகும். கவியோகியார் அவர்கள் தமது விளக்கவுரையில் நான்கே சீர்களில் முத்தாய்ப்பாகப் பொருள் நுட்பம் கூறும் மரபுத் தொடர்கள் போன்று அமைந்த பல தொடர்களை நூலின் பெரும்பகுதிகளில் அமைத் துள்ளார். அவை படித்து இன்புறத் தக்கன.

பதினைந்து இயல்களால் பிரிக்கப்பட்ட இந்நூல் இயல் ஒன்றுக்கு ஐந்து உட்பிரிவுகளைக் கொண்டும், உட்பிரிவுகள் ஒவ் வொன்றுக்கும் ஐந்து பாடல்கள் கொண்டும் அமைக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு இயல் களுக்கும் தலைப்புகள் தரப்பட்டுள்ளன. அவற்றைப் போன்றே ஒவ்வொரு உட்பிரிவுகளுக்கும் தலைப்புகள் உள்ளன.

கவியோகியார் அவர்கள் மிக புதிய சிந்தனைகளைத் தரும் அதே நேரத்தில் நமது பண்பாட்டுமரபில் மிகுந்த அக்கறை உடைய வராகவும், அவற்றிற்கு எந்த ஊறும் நேரா வண்ணம் பாதுகாப்பதில் பெருவிருப்புடையவராகவும் திகழ்வதை நம்மால் காணமுடிகிறது.

சனநாயகத் திருநாட்டில் வாக்களிப்பது நமது கடமை; வாக்களிப்போர் சிறந்தோரைத் தேர்வு செய்ய வேண்டும் என்றெல்லாம் கூறுகிறார். வாலிபர்கள் 25-ஆம் ஆண்டுவரை பிரம்மச்சரிய ஒழுக்க நெறி யைக் கடைபிடித்து பிறகு இல்லறத்தை அமைக்க வேண்டும் என்றும் இதனாலேயே சிறந்த வழித்தோன்றல்கள் நாட்டிற்குக் கிடைப்பார் என்றும் கூறுகிறார். புலால் உண்போன் வயிறு, அழுகும் புலாலைச் சேமித்து வைக்கும் கிடங்கு என்று இடித்துரைக்கிறார்.

பல புதிய சிந்தனைகளைத் தரும் இந்நூலை மறுபதிப்பு செய்யும் பொழுது முந்தைய பதிப்பின் நெறிமுறைகளே பின்பற்றப்பட்டுள்ளன. நிறுத்தல் புள்ளிக்கு அறநூலின் பழைய பதிப்பில் '-' என்னும் கோடே காணப்படுகிறது. யாப்பமைதியில் பழைய பதிப்பில் சரிசெய்யாது விடப்பட்டன சில மட்டுமே திருத்தி அமைக்கப்பட்டுள்ளன.

அரிய நூல்களை மறுபதிப்பு செய்து வெளியிடும் திட்டத்தின் கீழ் இந்நூல் வெளிவரும் இவ்வேளையில் நான் பலருக்கும் நன்றி கூற கடப்பாடுடை யேன். நிறுவன வளர்ச்சிக்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகின்ற நிறுவனத் தலைவர் மாண்புமிகு தமிழ் ஆட்சி மொழி-பண்பாட்டுத்துறை மற்றும் இந்துசமய அறநிலையத்துறை அமைச்சர் மாண்புமிகு மு. தமிழ்க்குடிமகன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சி-பண்பாட்டுத்துறை மற்றும் அறநிலையத்துறைச் செயலர் த. இரா. சீனிவாசன் அவர்களுக்கும், தமிழ் வளர்ச்சித் துறை முன்னாள் இயக்குநர் முனைவர் ச. நாகராசன், இந்நாள் இயக்குநர் முனைவர் மா. இராசேந்திரன் அவர்களுக்கும் எனது நெஞ்சு நிறைந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். நூலின் மெய்ப்பு திருத்திய திருமதி இ. பகவதி அவர்களுக்கும் நன்முறையில் அச்சிட்ட பாவை அச்சகத்தாருக்கும் எனது நன்றி உரித்தாகுக.

**இயக்குநர்**

## *சிறப்புப் பாயிரம்*

## திரு. வி. கலியாணசுந்தரன் இயற்றியது

### *ஆசிரியப்பா*

அறமாவ தென்னே! அறமாவ தென்னே!
அறுத்தல் மாசினை அறம தாகும்.
அறமே ஆக்கம், அறமே உண்மை!
அறமே கடவுள், அறமே எல்லாம்!
அன்று கல்லால் நின்றதும் அறனே;
பின்னைப் போதியில் மன்னிய ததுவே.
அச்செழும் பொருளே பச்சிளந் தமிழில்
ஊருணி புரைந்து பாருணத் திரண்டதும்
இன்றதைச் சூழ நன்றுகொள் புலவன்
அறவோன், அந்தணன், துறவோன், தோழன்,
சுத்தா னந்தன், **சுத்தா னந்த**
**பாரதிப்** பெயரோன், மாரதன் அன்பால்
இறைவே ராக நிறைமன் றாக
மன்குடி கல்வி முன்முயல் பொறைவழி
பாடு முதற்பல கோடு கவட்டுடன்
ஈகை உழவு வாகைப் பொருளே
தொழின்மணம் முதலிய தழையிலை அரும்பலர்
காய்கனி யாய்க்கவி வேய்நிழல் பரப்ப
அறமரம் நிரைநிரை செறிய நூலெனுந்
தமிழ்ப்பொழில் அமைத்தான், அமிழ்தம்!
புலவீர் ஈண்டுக புலன்கொள நுகரவே!

சுத்தசக்தி யருளுக!

# அற நூல்

(மூலமும் உரையும்)

ஆக்கியோன்

சுவாமி சுத்தானந்த பாரதி

## உரிமையுரை

யார் அடித்துகள் அண்டங்க ளாயவோ,
யார் மகிழ்வி லனைத்து முயிர்ப்பவோ,
யார் உயிர்க்கெலா மன்புள வன்னையோ,
பாரிறைவி பராசக்தி யன்னவள்.

உரமும், ஈகையும், உண்மையும், இன்பமுந்
திருவி னல்லணி சேர விளங்குவாள்
இருளு மின்மையும், ஏக மருந்தினை
யுருகிக் கேட்க வுதவினள் உத்தமி;

துறவி னின்பச் சுவையெனக் கீந்தனள்;
அறமென் னுள்ளத் தமர்ந்தளித் துய்வித்தாள்
இறைவி யின்னடிக் கிவ்வற நூலினை
யுறுதி யன்பொ டுரிமைசெய் தேனரோ!

- சுத்தானந்த பாரதி

1927

கலி 5028

விலை: அணா 12)

# PREFACE

At the request of my friend Swami Shuddhananda Bharati I am delighted to write a short preface to this title work. I had the privilege of seeing it previously in its shortened form and was then greatly struck with the way in which he had worked out the ethical principles of India for modern life.

By adopting the Kural metre he has inevitably challenged comparison with the greatest work of Tamil literature. This was a very bold thing to do, and while it is only natural that his verses should suffer as a result of this comparison, yet it must be said that they are written in simple and chaste Tamil. Swamiji's book is meant not for the elect, but for the common people, and so he has not followed his great predecessor in wrapping up his thought in such concise language that it requires considerable practice to understand it. Most of our author's stanzas are so simple that one with any education at all can understand them.

Like the author of the Kural he has dealt with practical life and its needs, and he has done so from the point of view of today rather than that of yesterday. The book will therefore be found of real value from the ethical point of view. The modern conceptions of social service and national life find their places in it. He takes up such subjects as disease, manual labour as well as the regular subjects of other ethical preachers. The author claims that it is a new gospel which came to him during a special time of meditation when he sat silent communing with himself and God for three months.

We venture to think that in the development of Indian ethical thought this book will occupy a distinct place. The author is one, who not only thinks but who also acts and he has been foremost in the application of his ideas.

It is therefore with very great pleasure that I commend this book to the Tamil public in the hope that it may help them both to think more deeply and truly about ethical problems and to apply the highest ethical principles to their daily life.

We would like to suggest to School Teachers and Inspectors that they will find this book exceedingly useful as a moral text-book for Schools.

**H.A. POPLEY**

# நூன்முகம்

ஸ்ரீ சுத்தானந்த பாரதி அவர்களின் அறநூல் இன்று தமிழ் மக்களுக்கு இனியதோர் விருந்தாக அளிக்கப்படுகிறது. பக்தி விசுவாசமும், சிரத்தையும் மௌன விரதமும் பூண்டு இந்நூல் அருளப்பட்டுள்ளது. 'சிறுகிய வாழ்க்கையும் பெருகிய கருத்தும்' என்ற பழமொழிக்கிணங்க, வாழ்க்கையையே தவம் செய்வதற்காகக் கிடைத்ததோர் நிலைக்களமாகக் கொண்டொழுகும் ஸ்ரீ பாரதியாரின் நூல் நம்மனோர்க்குப் புதிய வழிகாட்டியாக அமைந்துள்ளது.

இந்நூல் இவர் எழுதிய 'பாரத சக்தி' என்னும் காவியத்தின் ஓர் பாகம். இது ஈரடிக் குறள் வெண்பாவில் எழுதப்பட்டிருக்கிறது. ஒவ்வோர் இயலுக்கும் ஐந்து அதிகாரமும் ஒவ்வோரதிகாரத்துக்கும் ஐந்து குறளுமாக வகுத்த பதினைந்து இயல்கள் கொண்ட சிறந்த நீதி நூலாகத் திகழ்கின்றது. உலகத்தில் இதுவரை தோன்றியுள்ள மஹான்களின் கருத்துக்களையும், ஆசிரியரே நேராகக் கண்ட உண்மைகளையும் தன்னுள்ளடக்கி, இது தமிழ் மக்களுக்கு அறிவு கொளுத்தும் சிறந்த கிரந்தமாக விளங்குகிறது.

நூற்றாண்டுகள் செல்லச் செல்லப் புதிய சந்தர்ப்பங்களும், அவைகட்கேற்பப் புதிய தர்மங்களும் தோன்றுகின்றன. இப்புதிய சந்தர்ப்பங்களுக்கேற்ற புதிய தர்மங்களை எடுத்துக்காட்ட புதிய அறநூல்கள் தோன்ற வேண்டியது இன்றியமையாததாக இருக்கிறது. உதாரணமாக இந்நவயுகத்தில் சமத்துவம், சகோதரத்துவம், ஜன ஆட்சி முதலிய புதிய தர்மங்கள் தோன்றியிருப்பதால் அறிவாளிகள் அவற்றின் இயல்புகளை ஏனையோர்க்கு எடுத்துக்காட்ட வேண்டியிருக்கிறது. ஆகையால் இவ்வறங்களை விவரித்து அவ்வவற்றிற்குரிய ஸ்தானத்தில் அவ்வவற்றை வைக்கும் இந்நீதி நூல் வாளா எழுதப்பட்டதாகாது. மற்றும், அது தமிழ்நாட்டில் ஏற்பட்டுள்ள ஓர் அவசியத்தைப் பூர்த்தி செய்கிறது.

சுதந்திரம், தேச பக்தி, குடியரசு முதலிய விஷயங்களைப் பற்றி இந்நூல் பரக்கப் பேசுகிறது. பழைய உண்மைகளைப் புதிய யுகத்திற்கேற்றபடி வியாக்கியானம் செய்கிறது. முக்கியமாக மஹாத்மா காந்தியின் செந்நெறி பற்றிச் செல்லுகிறது. கைநூலாடை உண்டாக்குதல், பயிர்த்தொழில் ஆகிய இவை இரண்டுமே நாட்டின் அழிந்து

போன செல்வத்தை மீண்டும் சேர்த்துத் தர இருக்கிறது என்பதை வற்புறுத்திக்காட்டி இந்நூல் நம்மனோர்க்குத் தைரியத்தையும், விடா முயற்சியையும் போதிக்கிறது.

விரிவான நோக்கமும் சமரச உணர்ச்சியும் நிறைந்திருக்கிற இந்நூலைத் தமிழ் மக்கள் ஆதரவுடன் ஏற்று, அதனுள் பொதிந்து கிடக்கும் உண்மைகளைச் சாட்சாத்கரித்து அனுஷ்டிக்க வேண்டுமென்பதே எமது விருப்பம்.

ஆசாரியர், **வ.வெ. ஸுப்ரஹ்மண்ய ஐயர்**

பரத்வாஜ ஆசிரமம்,

சேரமாதேவி

*மாசி மாதம் 12*

*கலி 5026*

# உள்ளுறை

பக்கம்

# அற நூல்

காப்பு

எல்லா வுலகிற் கிறைவ னொருவன்
எல்லா வுடலும் இறைவ னாலயமே.

எல்ல வுலகங்களுக்கும் ஒரு கடவுளே தலைவன். (தேவர், மக்கள், விலங்குகள், பட்சிகள், புழுக்கள், செடிகள் முதலிய) எல்லா வற்றின் உடல்களும் கடவுளின் கோயில்களே.

என்மனத்தில் அறக்கடவுள் வடிவாய் நின்றே,
இயம்பினைநீ அறநூலை இன்பமாக,
உன்பணியைத் தன்னயம்விட் டாற்றி மக்கள்,
உலகத்தின் மிடியிருளைப் போக்கியெங்கும்,
கன்மயோ கந்தன்னால் அமர வாழ்விற்
களிப்பதனை யடைந்திடவே கருத்தில் வைத்தாய்.
அன்புடனே யவ்வறநூற் கன்னை நீயே
யருள்பூத்த தெள்ளுரையை யமைப்பா யென்னுள்.

## 1. கடவுளியல்

கடவுள் எல்லாம் வல்ல இறைவன், ஒருவன். இவ்வுலகைத் தன் மகிழ்விற் படைத்து, ஆளுகிறான். ஒவ்வொரு உயிருக்கும் ஒரு வினை தந்து படைக்கிறான். உலகம் அவன் கோயில். இக்கோயிலில் ஒவ்வொரு வருக்குந் தன்னலமற்ற ஒரு அருட்பணி யேற்பட்டுள்ளது. நாடும், வீடும், உலகும் நமது வினைக்கு நிலைக்களனாயிருக்கின்றன. அவற்றின் பணி ஆண்டவன் பணி. தத்தம் வாழ்வைத் தூய்மைப்படுத்திக் கொள்ளலே கடவுட்டன்மைக்கு முதல் வழி என்னும் இவ்வோரன்ன உண்மை களைக் கடவுளியல் இயம்பா நிற்கிறது

# 1. கடவுள்

1. அவனிக் கொருமுதலாய், ஆருயிரு ளானை,
எவையுமளித் தானைநீ யேத்து.

அவனிக்கு = உலகிற்கு - ஒரு முதலாய் = ஒப்பற்ற, ஒரே, தலைவனாகி - ஆர் = ஒளிரும், - உயிர் - எல்லா வுயிரிலும் - உளானை = இருப்பவனை - எவையும் = வெளி, உட்புலன்களாற் காணப்படும் எவற்றையும் - அளித்தானை = படைத்துக் காத்தவனை - நீ ஏத்து = நீ துதிப்பாயாக.

உலகிற்குத் தனித் தலைவன். விளங்கும் உயிர்களில் இருப் பவன். எல்லாவற்றையும் படைத்தவன், காப்பவன். அத்தகைய கடவுளைத் துதிப்பாயாக.

2. பெயர்வடி வாதியதோர் பேதங் கடந்த
வுயர்பொருளொன் றுண்டென் றுணர்.

பெயர், வடிவு, ஆதியதோர் = நாம ரூபம் முதலிய - பேதம் கடந்த = வேற்றுமையைத் தாண்டிய - உயர் பொருள் = எவற்றினும் மேலான கடவுள் - ஒன்று உண்டு என்று உணர் = ஒருவன் இருக்கிறான் என்பதை அறிவாயாக.

நாம ரூபாதி வேற்றுமைகளற்றவன். எல்லாவற்றினும் உயர்ந்த தலைவன். அத்தகைய பரம்பொருள் இருப்பதை உறுதியாக நம்பி, உன்னுள் அறிவாயாக.

3. பலர்பற் பலவாகப் பாரிற் பகர்வர்,
உளனொருவ னென்றே யுணர்.

பலர் = பல சமயத்தவர் - பற்பலவாக = வெவ்வேறுவிதமாக - பாரில் = உலகில் - பகர்வர் = சொல்லுவார். (ஆனால்) உளன் = எங்குமிருப்பவன் - ஒருவன் என்றே = ஒரு இறைவனென்றே - உணர் = அறிவாயாக.

நாம ரூப பேதத்தைக் கொண்டு வெவ்வேறு மதத்தர், கடவுளைப் பற்பல வகையாகக் கூறுவர். எல்லாவற்றுள்ளும் இறைவனாயுள்ளவன் ஒருவன் என்பதை உணர்ந்து ஸமரஸப்படுவாயாக.

4. எவையுமுவந் துய்யவொளி யீயும் பகலோன்,
இவருங் குணம்போல் இறை.

எவையும், உவந்து = எப்பொருளும் மகிழ்ந்து - உய்ய = வாழும்படி - ஒளி, ஈயும் = தனது சோதியைத் தரும் - பகலோன் = சூரியன் - இவரும் குணம் போல் = (ஸமரஸமாக) பரவும் தன்மை போல - இறை = கடவுளின் தன்மை.

சூரியன் அனைத்தையும் மகிழ்விக்கிறான். பகலையும் சூட்டையும், ஒளியையும், மழையையும் வளத்தையுந் தந்து உய்விக்கிறான். ஸமரஸமாக எல்லாரும் இன்புறும்படி ஒளி பரவுகிறான். சூரியனின்றி உலகில் எதுவும் அமையாது. அத்தகைய சூரியனே உலகில் கடவுளின் குண மகிமைக்குச் சாட்சியாக விளங்குகிறான். சூரியத்யானமும் சூரியஸ்நானமும், மனநோய் உடல் நோய் யாவற்றையுந் தீர்க்கும். சூரியனுடைய பெருமை இத்தகையாயின், அதைப் படைத்தவன் பெருமையை எண்ணுக.

5. எண்குணத்தான், ஏகனே, எல்லாம் அடங்கவுளான்,
புண்ணியனாம் போதப் பொருள்.

புண்ணியனாம் = தர்மமேயான - போதப்பொருள் = அறிவான பரம்பொருள் - எண்குணத்தான் = எட்டுத் தன்மைகளுள்ளோன் - ஏகனே = ஒரு தனிமுதலே யானோன் - எல்லாம், அடங்க, உளான் = எல்லாப் பொருள்களுந் தனக்குள்ளேயே அடங்கி நிற்கப் பெற்றவன்.

அறவடிவாகி, அறிவான பரம்பொருள், மாசறு தூய்மை, வரம்பில் ஆற்றல், பேரறிவு, முற்றுமுணர்தல், வரம்பிலின்பம், இயற்கை யுணர்வு தன் வயத்தனாதல், இயல்பாகவே பாசத்தினின்று நீங்கல் இத்தகைய எண்குணங்களுள்ளவன். அவன் ஒப்பற்ற தனி முதல். யாவுந் தன்னுள் அடங்கப் பெற்றவன். எங்குமிருப்பவன்.

## 2. கடவுட்டன்மை

1. உருவைத் தொழுதெண்ணி, உள்ளொளியைக் கண்டே,
உருவிலொரு தேவை யுணர்.

உருவை = கடவுளாகப் பாவித்து ஒரு வடிவை - தொழுது = வழிபட்டு - எண்ணி = தியானஞ் செய்து - உள், ஒளியை = (அதன் மயமாகவே)

நமது ஆத்மப் பிரகாசத்தை - கண்டே = (மனக்கண்ணால்) பார்த்தே - உருவு, இல் = உருவற்ற, அருவனான, (நிர்க்குணமான) - ஒரு தேவை = ஒப்பற்ற கடவுளை - உணர் = அறிவாயாக.

சகுணமாகக் கடவுளை வழிபட்டுப் பின்பு அவ்வுருவை மனத்தில் அமைத்து எண்ணு. அதுவே ஆத்ம வெளியிலிருப்பதாக உணர். பிறகு உருவிலடங்காத நிர்க்குணப் பிரம்மத்தை அறி.

விக்கிரக ஆராதனை கடவுளை அடைவதற்கு ஒருபடியாகும். விக்கிரகத்திலுங் கடவுள் உள்ளார். அதுவே கடவுளல்ல. அதன்மேல் வைக்கும் அன்பை ஆருயிர்கள் அனைத்திடமுஞ் செலுத்தினால் நமது ஆன்மா அருளால் உலகெலாம் விரிகிறது. எல்லாம் அவன் மயம் என்று அறிகிறோம். எங்கும் நிலவி, பெயர்வடிவற்ற இறைவனைப் பிறகே உணரலாம்.

2. மகிழ்விற் படைத்தளித்து மாற்றுங் கடவுள்
அகத்தூய்மை யாலே யறி.

மகிழ்வில் = தனது ஆனந்தத்தில் - படைத்து = உண்டாக்கி - அளித்து = காத்து - மாற்றும் = (பல பிறவிகளுக்கு) மாற்றும் - கடவுள் = ஆண்டவனை - அகத் தூய்மையாலே = மனப் பரிசுத்தத்தினாலே - அறி = தெரிவாயாக.

ஆண்டவன் அனைத்துயிரையுந் தனது ஆனந்தத்திற் படைத்துக் காக்கிறான். (ஒவ்வொன்றின் செயல், இயற்கைக்குத் தக்கபடியே) பிறவிக்குப் பிறவி மாற்றிப் பக்குவப்படுத்துகிறான். பரிசுத்த மனத்தினாலேயே அவனைக் காணமுடியும்.

3. வாய்மை நலனோன்பு, வன்றொண்ட டக்கமிவை
தூயோனைனச் சேருந் துணை.

வாய்மை = சத்யமும் - நலன் = நன்மை செய்வதும் - நோன்பு = வைராக்கியமும் - வன்றொண்டு = உறுதியான அருட் பணியும் - அடக்கம் = அமைதியும் - தூயோனை = சுத்தனை, கடவுளை - சேரும், துணை = அடையும் உதவியாகும்.

உண்மை, நன்மை, உறுதியான ஆருயிர்ப்பணி, அடக்கம் முதலிய சாதனங்களால் மனோ வாக்குக் காயசுத்தியடைந்து, ''சுத்த நிலை''

பெறலாம். இதுவே கடவுட்டன்மை. இந்நிலையில் சுத்தனுடன் நமது ஜீவாத்மாஒன்ற முடியும்.

4. **காமம், வெகுளி, கலக்கமி லாதமனச்**
**சேமத்தி னால்இறையைத் தேர்.**

காமம் = தீய ஆசை - வெகுளி = கோபம் - கலக்கம் = மாயை - இலாத = இல்லாத - மனச் சேமத்தினால் = உள்ளத்தின் காப்பினால் - இறையை = சுத்தனை - தேர் = அறி.

காமம், கோபம், மாயையில்லா மனம், சுத்தமாகும். அந்த சுத்த சக்தியால் சுத்தனை நம்முள் அறியலாம்.

5. **ஈசன் றிருமொழியை யெவ்வினர்தாஞ் சொன்னாலும்,**
**ஆசையுட னேநீ யறி.**

ஈசன், திரு, மொழியை = கடவுளருளால் உதித்த புனிதமான அறமொழிகளை - எவ்வினர், தாம், சொன்னாலும் = எந்த மதத்தினர் புகன்றாலும் - ஆசையுடனே = விருப்பமுடனே - நீ, அறி = தெளிந்து கொள்வாயாக.

உபநிடதம், கீதை, குறள், அறநூல், ஜெந்தவஸ்தா, புத்ததர்மம், பைபிள், குரான் முதலியன புனிதமான அருள் நூல்கள்; எம்மதத்தினர் சொல்லும் இத்தகைய அறநூல்களையும் சமரஸ நோக்குடன் அன்பாய்க் கேட்டறிக.

## 3. பிறப்பு

1. **ஒன்றென்றுந் தோற்றம், ஒடுக்கமதி லேயென்றுங்**
**கண்டோனே கண்டோனாங் காண்.**

ஒன்றென்றும் = (முத்தொழிற்குக் காரணமான சக்தி) ஒன்றே யென்றும் - தோற்றம், ஒடுக்கம் = எல்லாம் பிறந்து வாழுவதும், முடிவில் அடங்குவதும் - அதிலே யென்றும் = அவ்வொன்றிலென்றும் - கண்டோனே = அறிந்தோனே, - கண்டோனாம், காண் = (பிறப்பிறப்பின் உண்மையை) அறிந்தவனாவான் என்பதைக் கண்டுகொள்வாயாக.

கடவுள் தனது மூலசக்தியில் எல்லாம் தோன்றி அதிலேயே அடங்கச் செய்கிறார். உலகம் அச்சக்தியின் நடனசாலை. முத்தொழிலும் அது புரியும் விளையாட்டுகளே.

2. வினையளவே தோற்றம்; விமலனரு ளாலே
யனைத்துயிரும் வீடடைத லாம்.

வினையளவே = (பிறவிக்கடன்ரான்) கருமத்தின் (கால) அளவாகவே - தோற்றம் = உலகில் பிறந்து வாழும் தோற்றமும் ஆகும் - விமலன் = சுத்தன் - அருளால் = அருள் துணையால் - அனைத்துயிரும் = எல்லா ஜீவராசிகளும் - வீடு, அடைதல் ஆம் = பந்தவிடுதலை (முக்தி) அடையமுடியும்.

நமது வாழ்வின் வினையைச் செயற்குரிய காலமே ஆயுள். நமது வினையின் அளவே ஆயுளும் ஆகும். வினை முடிந்து, கடவுளின் அருளால், எல்லாவுயிர்களும் முக்தியின்பம் பெறலாம். வினையறிந்தாற்றலே விடுதலை வழியாம்.

3. ஒவ்வோ ருயிரும் உலகின் வினைக்கணியாய்த்
தெய்வம் படைக்குமெனத் தேர்.

ஒவ்வோருயிரும் = (உலகில் தோன்றும்) ஒவ்வொரு ஜீவனையும் - உலகின் வினைக்கு அணியாய் = உலகு நடக்க வேண்டிய பல நற்பணிகளில் ஒரு பணிக்கு உடைமையாய், - தெய்வம் = கடவுள் - படைக்கும் எனத் தேர் = உண்டாக்குகிறானென்பதை அறி.

ஒவ்வொரு ஜீவனும், தன் ஆயுளில் உலகிற்கு ஒரு நல்வினை செய்யும் நோக்குடனேயே கடவுளால் படைக்கப்பட்டது. ஜீவன் அந்த அருட்பணியையே அணிந்துள்ளான். அவ்வருட்பணியாற்றி ஆண்டவனைக் களிப்பித்தால் ஜீவன் முக்தி. இல்லேல் பிறப்பும் இறப்புந் தொடரும்.

4. ஆணும் நிறைமகளும், அன்னர் உரிமையிலே,
மாண விறைபடைப்பாம் மற்று.

ஆணும் = ஆணாகப் பிறந்தோரும் - நிறைமகளும் = கற்புள்ள பெண்களும் - உரிமையிலே = பிறப்புரிமைகளிலே - அன்னர் =

ஒத்தவர்களே - மற்றும் = மேலும் (அவர்கள்) - மாண = மாட்சிமையுள்ள - இறை படைப்பு ஆம் = கடவுளின் சிருட்டியாகும்.

ஆண் பெண் இருவரும் ஒரே கடவுளாலேயே உண்டான வர்கள். பிறப்புரிமையில் இருவரும் ஒத்தவர்களேயாம். அருட்பணி, தவம், முத்திநெறிமுயலல், பிரம்மச்சரியமிருத்தல், கற்றல் முதலியன இருவருக்கும் உரியதாகும். சீதை, வள்ளி, சாவித்திரி, மைத்ரேயி, ஔவை, மீராபாய், ராண்ணி லக்ஷ்மீபாய் முதலியோர் உதாரணத்தைப் பார்க்கவும்.

5. **சாதிநிறங் கோவறிஞன் றாமிலைஓர் தந்தையருள்,**
**பேதமிலா தெல்லாம் பெறும்.**

சாதி .... வறிஞன் தாம், இலை = ஜாதி, நிறம், அரசன், ஏழை முதலிய வேற்றுமைகள் இல்லை, - ஓர் தந்தை அருள் = எல்லாருக்கும் தனித் தந்தையாய் விளங்குங் கடவுளின் கருணையை - பேதமிலாது = ஒருவித வேற்றுமையுமின்றி - எல்லாம் = எல்லாவுயிர்களும் - பெறும் = அடையும்.

சாதிநிற வேற்றுமைகள் மனிதன் மாயையால் உண்டானவை. இதனால் உலகில் எவ்வளவு செருக்கும், பொறாமையும், சச்சரவும் வளருகின்றன! தன்னலமும், தேவைக்கு மேல் சிலர் சேர்ப்பதும், சோம்பலும் பலரை ஏழையாக்குகினறன. இவ் வேற்றுமைகள் கடவுளின் கண்முன் இல்லை. மண்முதல் மனிதன் மட்டும் தக்க காலத்தில் சுத்தனையடையலாம். நந்தன், சோகமேளன், கனகன், கபீர், துகாராம் முதலியோர் வரலாற்றைக் காண்க.

## 4. உலகு

1. **உயிர்மேனி யாக்கொண்டே யோங்குமொரு சோதி,**
**பயிலா லய முலகு பார்.**

உயிர் மேனியாக் கொண்டே = எல்லாவுயிர்களையும் தனது உடலாக்கிக் கொண்டே - ஓங்கும் = விளங்கும் - ஒரு ஜோதி = ஒளி மயமான ஒரு கடவுள் - பயில் = நடமாடும் - ஆலயம் = கோயிலே - உலகு = இப்பூமி - பார் = இதையறி.

ஆன்மகோடிகள் எல்லாம் கடவுளின் உடல். உலகம் அவன் நடமாடுங் கோயில். எவ்வுயிருள்ளும் அவ்வுயிராய் இறைவன் விளங்கு கிறான். எவ்வுயிர்க்குத் தீங்கு செய்யினும் ஆண்டவனுக்குத் தீங்கு செய்ததொக்கும்.

2. ஒருதரர் இப்புவியோர்; ஒவ்வோர் நலமெனதிச்
சீருலகென் நாடென்றே செப்பு.

இப்புவியோர் = இவ்வுலகிலுள்ளவர் - ஓர் உதரர் = ஒரே இரத்தக் கலப்புள்ள சகோதரர். ஒவ்வோர் நலம் = உலகிற்குறும் ஒவ்வொரு நன்மையும் - எனது = எனது நலமாகும் - இச்சீருலகு = இவ்வழகிய தன்மை வாய்ந்த பூமி - என், நாடு - என்றே, செப்பு = எனது தேசத்திற்குச் சமானம் என்று சொல்வாயாக.

பூமியே அனைவரையும் வளர்ப்பதால் புவியோர் சகோதரராவர். மனித சமூகம் முழுவதும் ஒரு உடல்; அதில் எங்கு துன்புறினும் உடல் முழுதும் அதை உணர வேண்டும். ஒவ்வொரு நாட்டின் நலந்தீதும் தன் நாட்டிற்குற்றதுபோல் எண்ணித் தக்கது செய்வதே உலக சமரஸத் திற்கு வழியாகும்.

3. போக்குவர வில்லையேற் பூவில்லை; நாடுகளின்
சேர்க்கை யுலகிற் சிறப்பு.

போக்கு, வரவு, இல்லையேல் = தேசங்களுள் போதலும், வருதலுமான உறவில்லாவிடின் - பூவில்லை = பூமியின் காரியங்கள் நடைபெறுவதில்லை - நாடுகளின் சேர்க்கை = தேசங்களின் ஒற்றுமை, - உலகில், சிறப்பு = பூமியில் மேலானதாகும்.

போக்குவரவு என்பதற்கு, இறப்பு பிறப்பு என்றும், ஜன நெருக்கம் அதிகமானால், ஜனங்கள் குறைந்த நாடுகளிற் குடியேறல் என்பதும் பொருளாம். வியாபாரப் போட்டியும், பொறாமையுமின்றி, ஒன்றுக் கொண்டு துணையாக நாடுகள் சேர்ந்து வாழ்ந்தால் உலக சமாதானமாகும்.

4. உலகிற் பணிசெய்ய வுண்மை தெளிய,
நிலவுமிச் சென்மம் நினை.

இச்சென்மம் = இப் பிறப்பு - உலகில் பணி செய்ய = உலகில்

அருட்பணி புரியவும் - உண்மை = ஜீவ ரகசியமான தத்துவம், கடவுளின் அருளுண்மை - தெளிய = அறியவும் - நிலவும் = விளங்கும் - நினை = இதை எண்ணுவாயாக.

உலகிற்கு அருட்பணி செய்யவும், வாழ்வின் வினையறிந் தாற்றி விடுதலை பெறும் உண்மையறிந்து, தத்துவந் தேர்ந்து, சாதகஞ் செய்து, கடவுளுடன் ஈரறக் கலக்கவுமே நமது பிறப்பு வந்தது.

5. புவித்தாய் தரும்பலனைப் போதியன வாக
அவரவர் துய்த்தல் அறம்.

புவித்தாய் = உலகன்னை - தரும் = அளிக்கும் - பலனை = விளைவுகளை - போதியனவாக = தன் தேவைகளுக்கே தகுந்த படி - அவரவர் = ஒவ்வொருவரும் - துய்த்தல் = அனுபவித்தல் - அறம் = தர்மமாகும்.

உலகன்னை அனைவர் நலமுங்கருதிக் கருணையுடன் பல வளங்களை விளைவிக்கிறாள். தேவைக்குத் தக்கபடியே மக்கள் அனுபவிக்க வேண்டும். இல்லையேல் பிறர் அனுபவிக்க வேண்டியதை அபகரித்து உலகை ஏழையாக்குவதாகும்.

## 5. நாடு

1. வீடுகளி னீட்டம் விரிநாடாம்; ஆதலினால்
வீடென்றே நாட்டை விரும்பு.

வீடுகளின், ஈட்டம் = (பலகோடி) மனைகளின் கூட்டமே - விரி, நாடாம் = இடமகன்ற நாடாகும் - ஆதலினால் = ஆதலால் - வீடென்றே = வீட்டைப் போன்றே - நாட்டை = உன் தேசத்தை - விரும்பு = நேசித்துப் பணி செய்.

வீடுகளே கிராமமாகவும் முடிவில் தேசமாகவும் விரிகின்றன. வீட்டின் காரியங்களைக் கவனிப்பதுபோல நாட்டின் நலத்தையுங் கவனித்தல் வேண்டும். மனையறமும் மனையாட்சியும் ஒழுங்காயிருந் தால் நாட்டறமும் ஒழுங்குறும்.

2. முயல்வோர், அறவோரும், முன்னுநற் செல்வர்
பயிலிடமே நாடாகும் பார்.

முயல்வோர் = முயற்சியுள்ளவரும் - அறவோர் = தர்மத்தைப் பரப்புவோரும் - முன்னும் = உதவியுள்ள - நற்செல்வர் = நல்வழியில் ஈட்டிய (கல்வி, பொருள், புகழ் ஆகிய) செல்வமுடையோரும் - பயிலிடமே = நடமாடும் இடமே, - நாடாகும் பார் = (உண்மையான) தேசமாகும் என்பதை அறிவாயாக.

ஒரு நாட்டில் தொழில், கல்வி, அத்யாத்ம முயற்சியிருக்க வேண்டும். அறவழிநடந்து, அறம் பரப்புவோர் மிகுதியாயிருக்க வேண்டும். அறிவு, பொருள், அருட்செல்வர் இருத்தல் வேண்டும். செல்வத்தைப் பாபமற்ற பரிசுத்தமான உழைப்பால் ஈட்டவேண்டும்.

3. நாட்டையே நின்மனைபோல் நாடிநலஞ் செய்தாலே,
நாட்டலாஞ் சால நலம்.

நாட்டையே .... செய்தாலே = தேசத்தையே உன் வீடு போல விரும்பி நன்மை செய்தாலே - சாலநலம் = (உனக்கும், உலகிற்கும்) மிகுந்த நன்மையை - நாட்டலாம் = ஏற்படுத்தலாம்.

நாட்டின் நலம் நமது நலம். அதன் நலத்திற்கு உழைத்தல் நமது கடமை. நமது வீட்டின் விரிவே நாடாதலின் வீட்டைப் போலவே நாட்டையும் நலமுறுத்தவேண்டும். அதனால் உலகு நலமுறும்.

4. அறிவு, தொழிலுரிமை, ஆக்கம், வளமும்,
விறல் நாட்டின் வெற்றி விளக்கு.

அறிவு = கல்வி - தொழில் = கைத் தொழில் - உரிமை = சுதந்திரம் - ஆக்கம் = செல்வம் - வளமும் = நீர் நிலவளங்களும் - விறல் = திறமையும் - நாட்டின் = தேசத்தின் - வெற்றி விளக்கு = ஜெய தீபம் போலும்.

கல்வி வளர்ச்சியும் (முக்கியமாக அத்யாத்மக் கல்வி), தொழில் நிறைவும், பிறப்புரிமையும், செல்வமும், வளங்களும், பலமும் ஒரு நாடு வெற்றியுடன் விளங்குவதற்கு அறிகுறியாம்.

5. நன்மையிலா வெவ்வினையு நாட்டையுந் தாக்குவதால்,
தன்வாழ்வில் தூய்மை தலை.

நன்மையிலா = (சமூக முன்னேற்றத்திற்கு) நலமில்லாத - எவ்வினையும் = (தனிப்பட்டவருடைய) ஒவ்வொரு காரியமும் - நாட்டையும் = தேசத்தையும் - தாக்குவதால் = பாதிப்பதால் - தன் .... தலை = ஒவ்வொருவரும் தத்தம் வாழ்வில் சுத்தமாயிருத்தல் முதன்மை யானது.

ஒரு தனி மனிதன் செய்யுந் தீது நாட்டின்மேல் ஏற்றிச் சொல்லப்படலாம். தனிமனிதர் எல்லாம் சுத்தமாக வாழின், நாடு நற்பெயர் பெறும்.

-----------

# 2. அறவியல்

அறமே கடவுளின் சட்டம், கட்டளை. அறவழியே கடவுளை யடையும் நெறி. கடவுளுக்கு அடுத்தபடியானது அறமே.

## 1. அறஞ்செயல்

1. போக்கும், வரவும், பொழுது மறியோமால்,
யாக்கையோ டேசெய் யறம்.

போக்கும் = ஆயுளின் முடிவும் - வரவும் = (மறுபிறப்பின்) வருகையும் - பொழுதும் = (வாழ்வில் திடீரென நடக்கும் நிகழ்ச்சி களின்) காலமும் - அறியோமால் = தெரிய வொண்ணோம் ஆதலால் - யாக்கையோடே - (உயிர்) உடலுடன்கூடியிருக்கும்போதே - அறம்செய் = தர்மத்தைச் செய்வாயாக.

ஆயுளின் முடிவையும், மறுபிறப்பின் வருகையையும், அதன் தன்மையையும் அறியோம். இந்தக் காலம் இந்த நிகழ்ச்சி வருமென் பதையுந் தெரிந்திலோம். ஆதலின் நமது உயிர் உடலுடன் கூடியுள்ள போதே நாம் அறவினைகளைச் செய்தல் வேண்டும்.

2. உன்னாயுள், செங்கதிரோன், உன்னுநாள் வாளறுப்பன்,
மன்னுமறஞ் செய்ய மதி.

உன் ஆயுள் = உன் வாழ்நாளை - செங்கதிரோன் = சூரியன் -

உன்னும் = எண்ணும் - நாள், வாள், அறுப்பன் = நாளாகியவாளைக்கொண்டு சிதைப்பான் - (ஆதலின் உயிருள்ள போதே) - மன்னும் அறம் = நிலைபெற்ற தர்மத்தை - செய்ய, மதி = செய்வதற்கு எண்ணுவாயாக.

சூரியன் நாளென்னும் வாளால் நமது ஆயுளை எண்ணிச் சிதைத்து வருகிறான். அவன் நினைத்த நாளில், நமது ஆயுளை வாள்போன்று சிதைப்பான். உள்ளபோதே நமது பெயர் நிலைக்கும் படியான ஒரு தர்மத்தைச் செய்ய வேண்டும்.

3. இறந்தபின், மக்கள் இயற்றுமற மெல்லாங்
கறந்தபின் கன்றூட்டல் காண்.

இறந்தபின் = உயிர்பிரிந்தபின் - மக்கள் = மைந்தர் - இயற்றும் = செய்யும் - அறமெல்லாம் = தர்மச் சடங்குகள் யாவும் - கறந்தபின் = (பசுவைப்) பால்கறந்த பிற்பாடு - கன்று ஊட்டல்காண் = கன்றுக் குட்டியை ஊட்டவிடுதல் போலாகும்.

பசுவைப் பால் கறந்த பிற்பாடு கன்றை ஊட்டவிட்டால், கன்றிற்குப் பால் இருப்பது சந்தேகமே. உடலினின்று நமன் உயிர் கறந்தபின், நமது மக்கள் செய்யுங் கருமங்கள் நமது ஆன்மாவைப் புல்லுவது சந்தேகமானது. நமது ஆயுள் இருக்கும்போதே, நமது கண்ணெதிரேயே அறஞ்செய்வது நிச்சயமான பலனுடையதாம்.

4. அந்தண ராகலாம்; எல்லா வறனின்றுஞ்
செந்தொண்ட ரென்னச் செயின்.

எல்லா, அறம் நின்றும் = (அறநூல் சொல்லும்) எல்லா தர்மவிதிப்படியும் நடந்து - செந்தொண்டர் என = ஒழுக்கமுள்ள அருட் தொண்டர் போன்று - செயின் = (கடமையை) செய்தால் - எல்லாம் = எல்லாவுயிர்களும் - அந்தணர் ஆகலாம் = அந்தண்மை அல்லது சாந்த முள்ளவாக முடியும்.

தூய்மை, நேர்மை, உண்மை, நன்மை, தவம், உறுதி, ஒப்புரவு, அமைதி, பொறுமை, எளிமை, சால்பு, அறிவாண்மை முதலியவை அந்தண்மையாகும். இவ்வறங்களைப் பயின்று ஒழுக்க முடன் அருட்பணி புரிதலே அந்தணர் கடன்; இத்தன்மை பெற்ற எவ்வுயிரும் அந்தண்மையடையலாம்.

5. தன்னறம் மேன்மை, தவிர்ந்தோன் அறமச்சம்,
பின்னும் இடரும் பெறும்.

தன், அறம் = சுதர்மம் செய்தல் - மேன்மை = உயர்ந்தது - தவிர்ந்தோன், அறம் = பிறனுடைய இயல்பிற்கேற்ப அமைந்த பர தர்மம் - அச்சம் = பயத்தைத் தரக்கூடியது. பின்னும் = மேலும் - இடரும், பெறும் = துன்பத்தையும் பயக்கும்.

அறம் என்பது இயல்பு. நாட்டிற்குத் தக்க இயல்புள்ள ஆசார நியமங்கள் ஏற்படுகின்றன. அவையே சுதேசிகளுக்கு மேன்மையானவை. பிறநாட்டின் இயல்பினமைந்த நடைவுடைகள் நம் நாட்டிற்கு ஒவ்வாதவை. உடை, உணவு, வழிபாடு, கல்வி, தொழில், அரசியல் முதலியவற்றை நம்மியல்பிற்குத் தக்கபடி அமைத்துக் கொள்வதே தன்னறமாகும். பிற நாட்டை இவற்றிற் பின்பற்றுதல் நமது உடற்கும், உயிர்க்கும் இடராகும்.

## 2. அறவிரிவு

1. தொடர்ந்தாரின் றுன்பந் துடைக்காத செல்வன்
கடமை வழுவியோன் காண்.

தொடர்ந்தாரின் = தன்னைச் சேர்ந்த (தொடர்புடைய) சகோதர மக்களின் - துன்பம் = இன்னலை - துடைக்காத = நீக்காத - செல்வன் = செயலுள்ளவன் - கடமை = (மக்களறப்படி செய்ய வேண்டிய) கருமத்தினின்று - வழுவியோன், காண் = தவறினவன் என்றறிக.

தன் வீட்டிலும் நாட்டிலும் உள்ள சகோதரர் ''தொடர்ந்தார்'' என்போர். அவருக்குற்ற துயரை நீக்குதல் செல்வர் கடன். அவர் வருந்தத் தாம் விருந்துண்ணும் செல்வர் அறந்தவறினவராவர்.

2. அறஞ்செய்க; தீதுறின் ஆண்டவனே வந்து
மறங்காய்ந்து காப்பான்; மகிழ்.

அறஞ்செய்க = தர்மத்தைச் செய்வாயாக - தீதுறின் = இடையூறு வந்தால் - ஆண்டவனே வந்து = கடவுளே அவதரித்துத் தோன்றி - மறம் = கெடுதலை - காய்ந்து = நீக்கி - காப்பான் = (நல்லறத்தை) போற்றுவான் - மகிழ் = களிப்பாயாக.

அறஞ்செய்வது நமது கடன். அதன்பால் வரும் இன்னல்களைத் தீர்க்கக் கடவுள் வந்து துணைசெய்வார். அறம் நிறுத்தி மறந்தவிர்த்தல் அவர் கடனாகும். ஆதலின் மகிழ்வுடன், நம்பி நம்மறத்தைச் செய்வோமாக.

3. எவ்வெவ் வுலகத்தி னின்னலமோ, அந்நலத்தை
யவ்வுழி யாற்றல் அறம்.

எவ், எவ் = எந்தெந்த வினை - உலகத்தின் = புவியின் - இன் நலமோ = இனிய நன்மைக்குரியதோ - அந்நலத்தை = அந்த நற்செயலை - அவ்வுழி = அந்தந்த இடத்திலேயே, - ஆற்றல் = செய்தல் - அறம் = தர்மமாகும்.

காலத்திற்குத் தக்கபடி நற்செயல்கள் புதிது புதிதாய்த் தோன்று கின்றன. அவற்றை அந்தந்த சமயம் வரும்போதே செய்வது அறத்தின் பாற்படும்.

4. நீக்க அடிமை, நிலவுஞ் சுயேச்சையினால்,
தாக்க மிடியிருளைத் தான்.

அடிமை = அடிமைத் தனத்தை - நீக்க = ஒழித்தபின் - நிலவும் = விளங்கும் - சுயேச்சையினால் = சுதந்திரத்தினால் - மிடி, இருளைத் தான் = வறுமை மடமையையே - தாக்க = எதிர்ப்பாயாக.

பிற மனிதருக்கு நாம் அடிமைப் படுவதும், மனம் தீய நினைவு களுக்கு ஆளாதலும், நீங்கவேண்டும். வயிற்றுக் கஞ்சிக்காக வாழ்வை விற்றல் கூடாது. உணவுடைத் தேவைகளைத் தூய முயற்சியால் அடைந்து, முத்தூய்மை யுற்றால் பூரண சுதந்திரம் வாய்க்கும். அச் சுதந்திர வொளியால் எதிர்த்தால் வறுமையும் இருளும் அற்றுவிடும்.

5. ஆராய்ந்தே யார்க்கும் அளியுற்றே யின்புருவாய்
நேராய் நடத்தல் நெறி.

ஆராய்ந்தே = நன்கு சிந்தித்தே - யார்க்கும் = யாவருக்கும் - அளியுற்றே = அன்பு பேணியே - இன்புருவாய் = இன்பமே வடிவாகி - நேராய் நடத்தல் = உண்மையாக வொழுகுதல் - நெறி = அறவழியாகும்.

அனைவருக்கும் இதமான நெறியை ஆராய்ந்தறிதல் வேண்டும். எல்லாரிடமும் அன்பு பேணி, களிப்புடன் அந்நெறியில் உண்மை யாக ஒழுகுதல் சிறந்த அறவழியாகும்.

## 3. அற நலம்

1. நலநாடிப் பேசிடுமந் நற்செய்கை யோர்க்கே
யுளதெல்லா வூங்கும்; உணர்.

நலம், நாடி = (பிறருக்கு) நன்மை யுள்ளதையே எண்ணி - பேசிடும் = (அந்நலத்தைக் குறித்தே) பேசும் - அந் நல் செய்கையோர்க்கே = (அந்நலத்தைக் கொண்ட) நடத்தையுள்ளவருக்கே - எல்லா ஊங்கும் = (இம்மையும் மறுமையுந் தரும்) எல்லா மேன்மையும் - உளது = இருக்கிறது - உணர் = இதை அறிவாயாக.

நலமே எண்ணி, நலமே பேசி, நலமே செய்வோர் முத்தூய்மை யுற்று, எல்லாச் சிறப்புகளுக்கும் உரியராவர்.

2. உணர்ந்து வருந்திடுமவ் வூறுசெய் யாமை,
சிறந்த குணந்தந் திடும்.

உணர்ந்து = (குற்றமென்று) அறிந்து - வருந்திடும் = வருந்தும் - அவ், ஊறு = அக் குற்றத்தை - செய்யாமை = மீண்டும் செய்யாதிருத்தல் - சிறந்த குணம், தந்திடும் = மேலான தன்மையைத் தரும்.

பிழை வருந்திக் கடவுளிடம் மன்னிப்புக் கேட்டு, அப்பிழையை மறுபடி செய்யாமல் மனத்தை உறுதிப் படுத்திக்கொண்டே வந்தால் சிறந்த ஒழுக்கம் ஏற்பட்டு சுத்த நிலை எய்தும்.

3. படித்து மறிந்தும் பழுதறுநல் லாற்றில்
நடப்போனைச் சேரும் நலம்.

படித்தும் = (அறநூல்களை) கற்ற பின்பும் - அறிந்தும் = (அவற்றின் பொருளை) ஆராய்ந்து உணர்ந்தும் - பழுதறும், நல், ஆற்றில் = குற்றமற்ற நல்ல வழியில் - நடப்போனை = ஒழுகுவோனை - நலம், சேரும் = நன்மையெல்லாம் வந்து புல்லும்.

கற்றதை ஆராய்ந்து அறியவேண்டும், அதன் வழியொழுகிக் குற்றமற்ற நேரான நெறியில் நடத்தல் வேண்டும். அத்தகையோனுக்கு எல்லா நன்மைகளுமாகும்.

4. இருக்கக் குடிசில்; இரந்துண்ணா தோர்செய்
அரைக்குக்கதர், தூயதுயில் ஆள்.

இருக்க = வசிக்க - குடிசில் = (போதுமான அளவுள்ள) சிறு வீடும் - இரந்து உண்ணாது = யாசித்துண்ணாமல் - ஓர் செய் = ஒரு வயலும் - அரைக்கு = இடுப்பிற்கு - கதர் = கைநூலாடையும் - தூய, துயில் = கவலையற்ற தூக்கமும் - ஆள் = உன்னதாக்கிக் கொள்வாயாக.

வசிப்பதற்கு ஒரு சிறு குடில், உழுதுண்ணத் தேவையளவு வயல், உடுத்திக்கொள்ளக் கதராடை, கவலையற்ற உறக்கம் இவை ஒருவனுடைய அறவாழ்விற்குப் போதுமானவை. பகலை உடலுழைப் பிலும், இரவைக் கடவுள் நினைப்பிலுங் கழித்தல் நலம்.

5. பிறருய்யத் தான்வருந்தும் பேர்வாழ்வே வாழ்வாம்;
அறமும் இதுவே யறி.

பிறர் = மற்ற ஜீவராசிகள் - உய்ய = (களிப்புற்று) வாழ - தான் வருந்தும்= தான் கஷ்டப்படும் - பேர் வாழ்வே = சீரிய வாழ்க்கையே - வாழ்வாம் = (பிறர்க்கென வாழும்) வாழ்க்கையாகும் - அறமும் = மனித தர்மமும் - இதுவே, அறி = இதுவேயாகும், தெரிவாயாக.

பிறர் நலத்தின் பொருட்டு, பொறுமையுடன் இடர்தாங்கி அருட்பணி செய்வோர் தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர். மனிதன் தனக்காக வாழ வரவில்லை. அப்பர், ஏசுநாதர், புத்தர், காந்தி முதலி யோர் கடவுட் பணியும், காசினிப் பணியுஞ் செய்தனர். இவரே பெரு வாழ்வு வாழ்ந்தவர்.

## 4. அறத்துணிவு

1. பூவின்பங் கீழேயாம்; பொன்பூ நடுவே; மற்
றோரின்பம் நாடலே, ஊங்கு.

பூவின்பம் = உலகாயத இன்பம் - கீழேயாம் = இழிவானதே யாகும் - பொன்பூ = சுவர்க்க இன்பம் - நடுவே = மத்திமமானது - மற்றோ ரின்பம் = (அருட்பணியால்) பிறருடைய சுகத்தை - நாடலே = கருதலே - ஊங்கு = மேன்மையானது.

பூமியில் மண், பெண், பொன்னால் வரும் போக இன்பம் கீழானது; சுவர்க்கலோக இன்பமும் தன்னலமுடையதாதலின் அது மத்திமம். தனக்கும் உலகிற்கும் நன்மையாகும் அருட்பணியின்பமே மேலானது.

2. மனத்தில்மெய் யென்றே மதிசெவ் வினையை,
எனைத்தாலும் போற்றி யியற்று.

மனத்தில் .... வினையை = உனது மனதில் உண்மையென்று மதிக்கும் நல்ல காரியத்தை - எனைத்தாலும் = எந்த வகையாலும் - போற்றி = ஆதரித்து - இயற்று = செய்.

நமது மனச்சாட்சிக்கு உண்மையெனத் தெரியும் வினைகளைப் பேணி, எவ்வகையிலுந் துணிந்து செய்தே முடித்தல் வேண்டும். மனச்சாட்சி பொய்ப்பதில்லை.

3. உண்மை யெனவுணரும், ஓர்கருமம் பற்றிவரும்
இன்னா பொறுத்தே யியற்று.

உண்மை என உணரும் = மெய்யென்று நீ அறியும் - ஓர் கருமம் = ஏதாயினும் ஒரு நற்செயலை - பற்றி = பேணி - வரும் இன்னா = அதன்பால் வரும் துன்பத்தை - பொறுத்தே = தாங்கியே - இயற்று = செய்வாயாக.

ஒரு உண்மையான நற்செயலுக்கு உலகிற் பல இடையூறுகள் வரும். அவற்றைப் பொறுத்தே உறுதியுடன் செய்தல் வேண்டும். இடர்கள் நமது உறுதியைச் சோதிப்பதற்காகவே வருகின்றன. அரிச் சந்திரன், சாவித்ரி, தருமன் முதலியோரின் வீரப்பொறுமையைக் காண்க.

4. எதுதீ தெனநோக்கி யெள்ளற்க; நன்மை
யதுபோற்றல், ஆற்றல் அறிவு.

எது, தீது, என, நோக்கி = (பிறரிடம்) என்ன கெடுதல் என்று பார்த்து - எள்ளற்க = இகழாதே - நன்மை = நலம் எதுவோ, - அதுபோற்றல் = அதைப் பேணலும் - ஆற்றல் = செய்தலும் - அறிவு = நல்லறிவாகும்.

பிறரிடம் குற்றம் பார்க்கிறவன் தன் காலத்தை வீணாக்கிக் காரியச் சோர்வடைகிறான். ஒவ்வொருவரிடமும் ஆராய்ந்தால் ஒரு

அருமையான நற்குணங் காணலாம். அதையறிந்து போற்றிப் பின்பற்றி நடத்தலே அறிவாளிகளுக்கடையாளம்.

5. **சாந்தம் ஒளியீயும் ; சஞ்சலந் தீததனை**
**ஆய்ந்தவனே நல்லறிவோன் ஆம்.**

சாந்தம் = அமைதி - ஒளி ஈயும் = ஆத்மப் பிரகாசந் தரும் - சஞ்சலம் = கலக்கம், - தீது = கேட்டைத் தரும் - அதனை = அவ்வுண்மையை - ஆய்ந்தவனே = ஆராய்ந்தவனே - நல் அறிவோன் ஆம் = மெய்யறி வுள்ளவனாவான்.

எதற்குங் கவலைப்படாது உள்ளொளியான கடவுளிடம் நிலைத்தமனம், சாந்தமடையும். அச்சாந்தத்தால் மனத்திலும் உட லிலும் ஒரு தூயவொளி பிறந்து ஆனந்தந்தரும். ஆசை, பொறாமை யால் அலைவுறும் நெஞ்சம் தீதையே எண்ணித் துன்பமடையும். எப்போதும் அதற்குச் சஞ்சலமே.

## 5. சமதர்மம்

1. **கீண்மேற், பிறர்தானுங் கேண்மைதெவ் வொன்றெனவே,**
**காண்போன் கருணைக் கடல்.**

கீழ், மேல் = தாழ்ந்தவர், உயர்ந்தவர் - பிறர், தானும் = அன்னியர், தான் - கேண்மை = சிநேகம் - தெவ் = பகைமை - ஒன் றெனவே = எல்லாம் சமமென்றே - காண்போன் = பார்ப்போன் - கருணைக்கடல் = அருட்கடலர்வான்.

தாழ்ந்தோர், உயர்ந்தோர், எளியோர், செல்வர், மேற்சாதி, கீழ்ச் சாதி, நண்பன், பகைவன், பிறன், தான் என்ற வித்யாசங்களெல்லாம் சமதர்சனமுடையவனுக்குக் கிடையாது. தாழ்ந்தோரை உயர்த்தவும், ஏழைக்கு உதவவும், பிறரைத் தானாகக்கொண்டு துணை செய்யவும் முயன்று எல்லாருக்கும் அன்பு தொடுப்பவனே கருணைக் கடல். பகைவனுள்ளும் கடவுளிருப்பதை அவன் காண்பான்.

2. அற்பம் பெரிதென்றே யெண்ணாதே யன்புசெயும்
நுட்ப வறிவுடைமை நோன்பு.

அற்பம் = சிறிது - பெரிது = மதிப்புள்ளது - என்றே எண்ணாதே = என்னும் வேற்றுமைகளையே நினையாமல் - அன்பு செயும் = எல்லாருக்கும்

சமமாக அன்புப்பணி செய்யும் - நுட்ப, அறிவுடைமை = கூர்ந்த அறிவாண்மையே - நோன்பு = வைராக்கியம், விரதம் எனப்படும்.

அற்பன் பெரியோன் என்ற வேற்றுமையற்று, அன்பிலாருக்கும் பொறுமையுடன் அன்பு செய்தலே விரதமாகும். அன்பே வெல்லும் என்ற நுண்ணறிவுள்ளவரே அன்னோர்.

3. எந்த வகுப்பினரும் என்சமுகக் கையென்ற
சொந்தநாட் டன்பே சுகம்.

எந்த வகுப்பினரும் = எச்சாதியினரும் - என், சமுக, கை என்ற = எனது சமுதாயத்தின் கைக்குச் சமானம் என்று மதிக்கும் - சொந்த, நாட்டு, அன்பே, சுகம் = சுதேசாபிமானமே நலந்தரும்.

சாதி சமய வேற்றுமைகளுள்ள நாடு ஒற்றுமைப்படுவது கடிது. சமுதாயம் என்னும் உடலின் கைகளே அனைவரும். ஒவ்வொரு கையும் சமுதாயத்திற்காகத் தனக்கு முடிந்த நற்செயலைப் புரிகிறது. இந்நோக் குடன் நாட்டன்பு செய்தால் ஒற்றுமை நிலவும்.

4. தாயன்பைக் காட்டியே, தான்பிறரென் றெண்ணாதான்
நேயன் உலகிற்கே நேர்.

தாயன்பை, காட்டியே = தாய்க்கும், குழந்தைக்கும் போன்ற அன்பைக் காட்டியே - தான் பிறர் என்று எண்ணாதான் = தனக்கொன்று பிறர்க்கு வேறு நினையாமல் சம நோக்கமுள்ளோன் - உலகிற்கே = எல்லா உலக மக்களுக்கும் - நேர் = உண்மையான - நேயன் = நண்பனாவான்.

தாயன்புடன் பிறரைப் பேணி, தான் பிறர் என்ற எண்ணமின்றி, அனைவருக்கும் அருட்பணி செய்வோனே உலகிற்கெல்லாம் நேய னாவான். உலக நலம் அவனைப் பொறுத்ததாகும்.

5. தன்னாட்டைச் சீருடனே தான்போற்றி மற்றோர்நா
டெண்ணாக்கால் ஏதே யிகல்.

தன், நாட்டை = தன் தேசத்தை - சீருடனே = ஒழுங்காக - தான், போற்றி = தான் நீதிகாத்து - மற்றோர் நாடு = பிறர் தேசத்தை - எண்ணாக்கால் = படையெடுக்க நினைக்காவிடின் - இகல், ஏதே = உலகில் சண்டை எப்படி யுண்டாகும்?

மன்னரின் பேராசையாலும் பாராசையாலும் போர் வளரு கிறது. தத்தங் குடிகள் மகிழத் தம் நாட்டை ஆண்டு, பிறநாட்டை நசுக்கும் எண்ணத்தை விட்டுக் களிப்புடனிருந்தால் உலகில் சாந்தம் நிலவும். தற்காப்பிற்கு மட்டும் படைகொண்டு அளவுக்கு மிஞ்சி மிருக பலத்தைச் சேர்ப்பதொழியவேண்டும். உலகில் சாந்தம் நிலவ, மன்னர் குடிகளுக்கு இதஞ்செய்து களித்துப் பேராசை நீக்க வேண்டும்.

அறநூல், அறவியல் முற்றிற்று.

---------

# 3. துறவியல்

கடவுளின் சட்டமான அறவழி யொழுகுவதற்குத் தன்னலத் துறவும், பிறர் நலம் புரிதலும் ஒழுக்கமும், தூய்மையும், உறுதியும், ஒருமன நோக்கும் வேண்டும். உண்மையான துறவிலக்கணங்களும் அதற்கேற்ற சாதனங்களும் இவ்வியலில் சொல்லப்பட்டுள்ளன. தன் உடல் பொருள் ஆவியை ஆண்டவனுக்கும், ஆருயிர்ப்பணிக்கு மீந்து உலக வீட்டில் மனித குலத்திற்குத் தொண்டு செய்தலும், தான் வருந் தினும் பிறரைக் களிப்பித்தலும், உணவுறக்கத்திற்கும் அடிமையாகாது மனவாட்சி புரிந்து புலனடக்கலும், பற்றற்ற வீர சுதந்திரமுந் துறவாகும். பெண்களும் இல்லறத்தாரும் இத்தகைய துறவைக் கைக்கொள்ளலாம்.

## 1. துறவு

1. மனத்தில் அருண்மல்கி, மாணுலக முய்யுந்
தனைத்துறந்த தொண்டே தவம்.

மனத்தில், அருள், மல்கி = உள்ளத்தில் (எல்லா வுயிர்களிடமும்) அன்புப் பெருக்குமிகுந்து - மாண் = பெருமையுள்ள - உலகம் = இவ்வுலகம் - உய்யும் = (தீதினின்று) தப்பிப் பிழைக்கும் - தனைத்துறந்த தொண்டே = தன்னலத்தை விடுத்த பணியே - தவம் = தவமெனப்படும்.

ஆன்மகோடிகளின் பந்தத்துயரை யெண்ணி, அருளுடன் அவை விடுதலை பெற்றுப் பேரின்பத்தில் உய்யவான அருட்பணிபுரிதல் துறவி யின் கடன். அவ்வருட் பணிக்காகவே தனது உடல் பொருள் உயிர் மீதிருக்கும் ஆசையைத் துறத்தல் வேண்டும்.

2. தேவென்றே யிவ்வுலகைத் தேர்ந்து, தனைமறந்த.
தூய்வினை யாற்றல் துறவு.

இவ்வுலகை = இப்பூமியை - தேவென்றே = தெய்வமென்றே - தேர்ந்து = ஆராய்ந்தறிந்து - தனைமறந்த = தன்னலம் மறந்த - தூய்வினை = மாசற்ற பணியை - ஆற்றல் = செய்தல் - துறவு = ஸந்யாஸமாகும்.

இவ்வுலகின் ஒவ்வொரு துளியும் கடவுளைக்கொண்டது. உலகே உருண்டையுருவான கடவுள். அதன் வழிபாட்டில் தன்னையே மறந்து கரைந்துவிடல் துறவாகும். அதை அழுக்ககற்றிச் சுத்தமாக் குதல் அபிஷேகமாகும். மனமே மலர், தனது தூயவாழ்வே நிவேதனம். அருட்பணியே சைத்தியோபசாரம். பிறரை உய்விக்கும் உபதேசமே தோத்திரம்.

3. எல்லா வுயிருள்ளும், ஈசனையே கண்டுவப்போன்,
நில்லா நெறியொன்று மில்.

எல்லா வுயிருள்ளும் = அனைத்துயிர்களிடமும் - ஈசனையே = கடவுளையே - கண்டு = பார்த்து - உவப்போன் = ஆனந்தப்படுபவன் - நில்லா = அனுட்டிக்காத - நெறி = நல்வழிகள் - ஒன்றும் இல் = மீதியில்லை.

ஒரு கடவுட் சோதியே பல்லுயிருள்ளும் மின்னுகிறது. உள்விழி திறந்தவர் ஆண்டவனை எங்குங் கண்டு, அனைத்தையும் தானாக எண்ணி, சம நோக்குடன் அன்பு மயமாவர். அருட்பெருக்கால் தனது ஆன்மாவை எல்லாவுயிரிடமும் பரப்புவர். அவருக்கு உலகம் கோயில். உயிர்கள் பராபரன் சந்நிதி. பார்ப்பதெல்லாம் கடவுள் மயமாகி, செய்வதெல்லாம் அவன் வழிபாடாகிப் பேரின்பமுறுவர்.

4. அடக்கம், பொறுமை, அருட்டொண்டே சான்றோர்,
உடுக்கும் உளமேல் உடை.

அடக்கம் = அமைதி, ஐம்புலனடக்கமும் - பொறுமை = சாந்தமும் - அருள்தொண்டே = அன்புப் பணியுமே - சான்றோர் = பெரியோர் - உடுக்கும், உளம், மேல் அணி = உளத்திலும், உடலிலும் பூணும் ஆடையாபரணம்.

மனத்தால் புலனைவென்றடக்கி, இன்னல் பொறுத்து, உடலால் எல்லாரும் உய்யும் அருளுணர்ச்சியுடன் பணி செய்வதே பெரியோர் வாழ்விற்கு அணியாகும்.

5. போனதுயர், வந்த, வரப்போவனவும் எண்ணாத,
ஆண்மையர் சாந்தர் அறி.

போனதுயர் = முன்னே வந்து சென்ற துன்பத்தையும் - வந்த = இப்போது வந்த துன்பங்களையும் - வரப்போவனவும் = இனிமேல் வரும் துன்பங்களையும் - எண்ணாத = பொருட்படுத்திக் கவலாத - ஆண்மையர் = தீரரே - சாந்தர் அறி = அமைதியுள்ளவர்கள் என்பதைத் தெரிவாயாக.

அருட்பணியின்பால் தமக்கு முன்வந்த இடர்களை எண்ணித் தற்போது தம்பணியிற் சுருங்கார். தற்போது வரும் இடர்களுக்காக வருங்காலத்தில் அதைச் செய்யாமல் விடார். இடர்களுக்குப் பயந்து உண்மையை விடார். ஆண்மையுடனும், வீரமுடனும், பொறுத்து வினைசெய்வர். அவரே சாந்தராவர்.

## 2. மனம்

1. உறுதி, பயமின்மை, உண்மைசெறி யுள்ளம்
அறிவே யகல்பூவிற் காம்.

உறுதி = வைராக்கியம் - பயமின்மை= தைரியம், அஞ்சாமை - உண்மை = சத்தியம் - செறி = நிறைந்த - உள்ளம் = மனம் - அகல் பூவிற்கு = விரிந்த வுலகிற்கு - அறிவே ஆம் = அறிவுபோன்று நலஞ்செய்யும்.

தன் தவத்தில் உறுதியும், நற்பணியில் அஞ்சாமையும், நடத்தையில் உண்மையுமுள்ளவன் நெஞ்சத்தால் பொய்யாதொழுகி, மக்கள் துயரை மனத்தில் உணர்ந்து அறிந்து, அருள்பொதிந்து அதைத் தீர்க்க முற்படுகிறான். அவன் மனம் உலகத்துயரையும், தன் கடமையையும் அறியும். உலகிற்கு நற்போதனை செய்பவன் அவனே. உலகம் போன்று அவன் மனமும் விரிந்தது.

2. சினத்துடனே மண்ணைச் செயிப்பதினும் தங்கள்
மனமடக்கி வாழ்தலே மாண்பு.

சினத்துடனே = ஆத்திரத்துடனே - மண்ணை = உலகை - செயிப்பதினும் = (போரில்) வெல்லுவதைக்காட்டிலும் - தங்கள், மனம், அடக்கி = தமது உள்ளத்தை அமைதியாக்கி - வாழ்தலே, மாண்பு = வாழுவதே சிறப்பானது.

ஆத்திரத்துடன் நாடுகவரப் போர்தொடுப்போன் உலகைக் கொடிய கொலைக்களமாக்குகிறான். எளியோரை நசுக்குகிறான். மண்வெற்றி புண்ணாகும், நிலையாகாது. வாழ்வைப் பாவக்களனாக்கும். தன் காமக் குரோதாதிகளுடன் தவத்தால் பொருதி வென்று மனவாட்சி புரிபவனுக்கு மண்ணெல்லாம் தூசிபோலும். அவன் கடவுளைக் காண்கிறான். சுதந்திரனாகிறான். உலகை அருளாளுகிறான். மன வெற்றி மண்ணினு மரிது.

3. **கப்பற்குச் சுங்கான்; கருத்தின் உறுதிநிலை**
**தப்பாதே, இன்பந் தரும்.**

கப்பற்கு = கப்பலுக்கு - சுங்கான் = திசை திருப்புங் கருவி போல - கருத்தின் = மனத்தின் - உறுதி நிலை = வைராக்கியம் - தப்பாதே = அது தவறித்திரியாமல் - இன்பந் தரும் = (நன்னெறி செலுத்தி,) களிப்பை யீயும்.

சுங்கானின் உதவியால் கப்பல் சரியான வழியில் திருப்பப் படுகிறது. வைராக்கியத்தால் மனம் பேரின்ப வழியிற் செலுத்தப் படுகிறது. வைராக்கியம் மனக்கப்பலின் சுங்கானாகும். அதனால் பேரின்பம் எய்தும்.

4. **நினைப்பி னுருவே நிசமாகும்; நல்ல**
**நினைப்பு தனையே நினை.**

நினைப்பின் = உள் எண்ணத்தின் - உருவே = தோற்றமே - நிசமாகும் = காரியத்திலும் உண்மையாகும் - நல்ல... நினை = உயர்ந்த எண்ணங்களையே எண்ணுவாயாக.

எண்ணங்களின்படியே வாழ்வும், செயலும், பயனும் ஆகும். மேலான எண்ணமே எண்ணிப் பெரு வாழ்வு வாழ முயலவேண்டும். தீது நினைப்பவர் தீதே எய்வர். நினைப்பினளவே அனைத்துமாகும்.

5. **தீனி முயக்கினிலே செல்லாதுன் வாழ்க்கையே**
**ஞான முயற்சிவழி நாடு.**

தீனி = உணவிலும் - முயக்கினிலே = சிற்றின்பப்புணர்ச்சி யிலுமே - உன் வாழ்க்கை, செல்லாது = உனது காலம் வீணாகாமல் - ஞான, முயற்சி, வழி, நாடு = உயர்ந்த அறிவைப் பயிற்சி செய்யும் நெறியை விரும்புவாயாக.

ஊண், சிற்றின்ப நுகர்வு (உறக்கம், ஊடல், கூடல், ஈனல், பேணல்) முதலியவை விலங்குகளும் செய்யுங் காரியமே. மனிதன் தன் பகுத்தறிவால் தத்துவமறிந்து, அவ்வறிவு வழியொழுகி, எங்குங் கடவுட் கண்டு களித்து, அவன் அன்புப் பணிகளிலேயே தன்னைக் கரைத்தல் வேண்டும்.

## 3. மாயை வெல்லல்

1. அழகெனக் காட்டி யடிமை தருவ,
முழுதும் விலக முயல்.

அழகென = அழகாயிருப்பது போல - காட்டி = தோன்றி - அடிமை, தருவ = அடிமைத்தனத்தைத் தரும் பொருள்கள் - முழுதும், விலக = முற்றிலும் நீங்க - முயல் = முயற்சிசெய்.

புலன்களைக் கவரும் பொருள்கள் அழகுபோலத் தோன்றிப் பிறகு மனதை வசப்படுத்தித் துயர்க்கடலில் ஆழ்த்துகின்றன. இந்த மாயைப் பொருள்களை நம்பாது, விலக்கி, சாதகத்தால் மனதை உறுதி செய்து, இவற்றை அணுகாமற் செய்வதே துறவறத்திற்கு அழகு.

2. கூற்றாம் பகைவணங்கல்; கொள்கையால் வென்றிடுதல்,
ஆற்றலுள் ளெல்லாம் அணி.

பகை, வணங்கல் = ஆத்ம விரோதிகளை அடிபணிதல் - கூற்றாம் = எமனாக வந்து முடியும் - கொள்கையால் = அறிவினாலும், குணத்தாலும் - வென்றிடுதல் = அப் பகையைச்செயித்தல் - ஆற்றலுள் எல்லாம் அணி = மனித சக்திக்கு முதன்மையான வல்லமையாகும்.

புலன்களைக் கெடுக்கும் காமாதிகள், ஆத்மாவை பந்தப் படுத்தும் மாயை, தேக தர்மத்தைக் கெடுக்கும் சோம்பல், வறுமை, அடிமைத்தனம், தேச சுதந்திரத்தைக் கெடுக்கும் அயற்பகை இவை எமன்போல நமது வாழ்வையே சித்திரவதை செய்யும். அத்யாத்ம அறிவு, பொறுமை, தூய்மை, உறுதி, அஞ்சாமை, ஆண்மை, முயற்சி முதலிய கொள்கைகளால் வீரமுடன் பகை வெல்லலே மனிதனுக் குள்ள வல்லமைக்கு அழகு.

3. பற்றென்றுந் துன்பமாம்; பற்றறல்பே ரின்பமாம்;
அற்றே மறைகள் அமைப்பு.

பற்று = பந்தம் - என்றும், துன்பம், ஆம் = எந்நாளும் துயராகும் - பற்று, அறல் = பந்தம் விலகல் - பேர், இன்பமாம் = பெருங் களிப்பாகும் - மறைகள் = தர்ம நூல்களின் - அமைப்பும் = அனுபோக விதியும் - அற்றே = அத்தன்மைத்தே.

பந்தப்படுவது அடிமைத் தனமும் துன்பமுமாம். பற்றை நீங்கல் கவலையற்ற பேரின்பமாகும். கடவுள், குருதேவர், தர்மம் முதலியவற்றில் வைக்கும் அன்பு பக்தியாகும். மாயைப் பொருள் களிடம் வைக்கும் ஆசையே பற்றாகும். எல்லா வேதங்களின் சாரமும் பந்த நிவர்த்திதான். புத்தர் கண்ட உண்மை இதுவே.

4. பந்தமில் நெஞ்சே பரந்துலவும்; அஃதுறினோ,
அந்தமில் சோர்வாம் அகம்.

பந்தமில், நெஞ்சே = மாயைப்பொருள்களால் கட்டுணாத (சுதந்திர) மனமே - பரந்து உலவும் = எங்கும் சுயேச்சையாகப் பரவி நடமாடும் - அஃது உறினோ = அந்த பந்தம் உற்றால் - அகம் = மனம் - அந்தமில், சோர்வாம் = முடிவில்லாத தளர்ச்சியடையும்.

சுதந்திர மனம் தன் வாழ்வின் வினை செய்ய எங்கும் சுயேச்சையாகச் செல்லும். கவலையற்றுக் கடவுளையே எண்ணிக் களிப்புறும். தீய எண்ணங்களால் கட்டுண்ட மனம் சுயேச்சையிழந்து துயருறும். மனதை நம்மதாக்கினால் இன்பம். மனதிற்கு நாம் அடிமையானால் துன்பம். நமக்கு நாம் சொந்தமாயிருப்பதே சுதந்திரம். பராதீனப்பட்டால் வாழ்வு சோர்ந்து வீழும்.

5. எங்குற்றோம், என்னசெயல், எங்குசெலல், என்றறிவோன்
கங்குற் கடல்கடந்தோன் காண்.

எங்கு உற்றோம் = எங்கிருந்து எவ்விடத்திற்கு வந்துள்ளோம் - என்ன செயல் = நாம் இங்கு என்ன செய்வதற்காக வந்தோம் - எங்கு செலல் = மீண்டும் எங்கு செல்லப் போகிறோம் - என்று அறிவோன் = என்பதைத் தெரிந்தவன் - கங்குல், கடல், கடந்தோன், காண் = இருள் மாயைக் கடலைத் தாண்டினவ னாவானென் றறி.

நாம் ஆன்மா. ஆன்மா கடவுள் தன்மையுள்ளது. நாம் கடவுளிடத்திலிருந்து கடவுளின் ஆலயமான உலகின் அருட்பணிக்காக வந்தோம். பணியறிந்து செய்ததும், கடவுளிடமே செல்லுகிறோம். பிறப்பு வினையை இவ்வாயுளில், முடிக்காவிடின், திரும்பிப் பிறக்கிறோம். இப்படித் தன் இடம் பொருள் ஏவலறிந்து பற்றற்று, தன் வினை முடிப்பவன், மாயைக்கடல்கடந்து விடுதலையடைகிறான்.

## 4. மனத்தழுக்கு

1. **சினம்வெறி, கூரந் திருட்டிகல், சார்பும்,**
**மனத்தை வருத்தும் மலம்.**

சினம் = கோபம் - வெறி = அச்சம் - கூரம் = பொறாமை - திருட்டு = களவு - இகல் = பகைமை, போர் - சார்பு = அடிமைத்தனம் (முதலிய ஆறு தீமைகளும்) மனத்தை = உள்ளத்தை - வருத்தும் = துயர் செய்யும் - மலம் = அழுக்காகும்.

கோபம், அச்சம், பொறாமை, திருட்டு, பகை, அடிமைத்தனம் இவ்வாறும் மனத்திற்படிந்து பிணியுறுத்தும் அழுக்குகள். இவை நீங்கின் மனத்தூய்மை வாய்க்கும்.

2. **ஆசை, பொறாமை, அகிலப் பிணிக்குமுதல்;**
**நாசி; வருமே நலம்.**

ஆசை = திருப்தியின்மையும், பேராசையும் - பொறாமை = பிறர்வாழச் சகியாமையும் - அகிலப் பிணிக்கு = உலகிலுள்ள நோய் களுக்கு - முதல் = காரணமாகும் - நாசி = இவற்றை நசிப்பாயாக; - நலம், வருமே = ஆனந்தம் உண்டாவது உறுதி.

ஆசையும், பொறாமையுமே எல்லாப் பிணிகளுக்குங் காரணம். உடற் பிணிக்கும் இவையே காரணம். பேராசையோடு உண்பதும், பாராசையுடன் மண்பறிப்பதும், அழுக்காறுடன் போர் தொடுப்பதுமே உலக சமாதானத்தைக் கெடுத்துப் பிணியுறுத்துகின்றன.

3. **புலத்தால் நசையாகும்; புன்னசையால், தீதே,**
**உளத்துறைந் தீயுமாம் ஊறு.**

புலத்தால் = ஐம்புலன்களால் - நசை ஆகும் = ஆசை பிறக்கும் - புல் நசையால் = அற்பமான ஆசையால் - தீதே = துயரே - உளத்து உறைந்து =

மனத்தில் ஊன்றி இறுகி - ஊறு ஈயுமாம் = (ஆத்ம வளர்ச்சிக்கு) கெடுதலையே செய்வதாகும்.

ஐம்புலன்களும் மாயையில் உலவுவதால் மனமும் அவற்றிற்கு அடிமையாகிறது. மனம் அழுக்குறுகிறது. நசைத்தினவெடுத்து மனம் சஞ்சலமடைகிறது. சினம் வெறி, ஆசை, பொறாமை முதலிய சீள் பிடிக்கிறது. அச்சீள் உறைந்து புண்ணாகிறது. இப்புண்ணின் துயர் நீங்க வேண்டுமாயின் மனவுறுதி வேண்டும். சுவை, மணம், ஓசை, ஒளி, உருவமாகிய தன்மாத்திரைகளுக்கு அடிமையாகாதிருக்க வேண்டும்.

4. துயில்மடிநோ யுங்கவலை, சோம்பல்நா ணாமை
மயலிகலும் வாழ்வில் வசை.

துயில் = தூக்கம் - மடி = பொய் - நோயும் = பிணியும் - கவலை = மனக்கவலையும் - சோம்பல் = (கடமை செய்ய) சோம்புதலும் - நாணாமை = பிறர் நாணத்தக்கவற்றிற்கு அடங்கி நடக்காத் தன்மையும் - மயல் = பயம், மாயை - இகலும் = பகைமையும் - வாழ்வில் = மனிதவாழ்வில் - வசை = தீமைதரும்.

அமிதமான தூக்கத்தால் தளர்ச்சியும், இந்திரிய நஷ்டமும் ஆகும். துயிலை கடவுள் தியானமாக மாற்றவேண்டும். தூக்கத்தில் மனம் புத்திக்கு அடிமைப்படுகிறது. பின் மூளையில் நிறைந்த எண்ணங்கள் புத்தியில் நடனமாடிக் கனவுண்டாகிறது. கனவால் உளறல்; விந்து நாசம், தளர்வு, படபடப்பு முதலியன விளையும். உணவை மிதப்படுத்தினால் உறக்கம் மிதப்படும். தூக்கம் ஒழிவது மிகவும் நலமே. இரவில் தியானம் செய்வது சிறந்தது. வழக்கமாகச் செய்தால் பல அற்புதங்கள் காணலாம். பொய்யால் மனம் உண்மை நெறி தவறும். பிணியால் நமக்கும் பிறருக்குந் தீங்காகும். கவலை மனதைச் சித்திரவதை செய்யும். சோம்பல் வறுமை புகுத்தும். நாணாமை, அவமதிப்பைத் தரும். மையலால் புத்தி மயங்கி மோசம் போகிறோம். பகையால் உலக சமாதானம் கெடுகிறது. இவற்றில் வாழ்வைச் சித்திரவதை செய்யாமல் முத்தூய்மையுறும் நெறிபிடித் தொழுகுக.

5. ஆடித் துகள்நீக்கின், அம்முகமே காணுவபோல்
நீடுநசை போக்க நிசம்.

ஆடி = கண்ணாடி மேற் படர்ந்த - துகள் = தூசியை - நீக்கின் = துடைத்தால் - அம், முகமே, காணுவபோல் = அழகிய முகமே தோன்றுவதைப்போல - நீடு நசை = நீடித்த காலமாக நம்மைப் பிணிக்கும் ஆசை - போக்க = நீக்க - நிசம் = நமது உண்மையுருக் காணப்படும்.

நமது கடவுட்டன்மையைக் காட்டுங் கண்ணாடி மனமே. அதன்மேல் ஆசைத்தூசி படருவதால் மங்கலாகிறது. அதை அறிவென்னுந் துணியால் நீக்கிக் கண்டால் உண்மை விளங்கும். தூசியடையாது நாள்தோறும் தியானத்தால் மனதை விளக்கவேண்டும்.

## 5. துறவி

1. **துயிற்கும், உணவிற்குந் தொத்தடிமை யாகான்,**
**செயலென்றுஞ் சித்தி செயும்.**

துயிற்கும் = தூக்கத்திற்கும் - உணவிற்கும் = சாப்பாட்டிற்கும் - தொத்து = பற்றுள்ள - அடிமை ஆகான் = ஆளாகாதவன் - செயல் = கருமம் - என்றும் = எந்நாளும் - சித்தி செயும் = வெற்றிதரும்.

துயிலை யொழித்தல் துறவிக்கழகு. படுக்கைச் சுகம் போகவுணர்ச்சி தரும். தழுவும் உணர்ச்சியை முற்றும் ஒழித்தல் வேண்டும். பகலில் ஆருயிர்ப்பணியும், இரவில் கடவுள் வழிபாடு, தியானாதிகளும் துறவிகளுக்கு வேண்டும். அறிதுயிலே அற்றோர் துயில். உணவுச் சுவைக்கடிமையாதல், பெரும் பிழை. நூற்றல், நெய்தல், நூலெழுதல், அறப்பணி, சுத்தோபதேசம் முதலியன செய்து துறவிகள் உணவுடையடைக. தூய்மையும், சுதந்திரமும் துறவின் விழிகள். உடையுணவிற்கும் துயிலிற்கும் அடிமையாகாதவன் வெற்றி பெறுவது நிச்சயம்.

2. **நிலைக்கு நலநாடி, நீளவா தாண்டி,**
**உளத்தூய்மை யாலே யுயர்.**

நிலைக்கும், நலம், நாடி = அழியாத நன்மையை விரும்பி - நீள், அவா, தாண்டி = நீண்ட ஆசையைக் கடந்து - உளத்தூய்மையாலே, உயர் = மனப் பரிசுத்தத்தால் (கடவுட்டன்மையில்) ஓங்குவாயாக.

நிலைக்கும் நலமாவன: தவத்தால் தத்துவமறிந்து சக்தியருளெய்தல், அத்யாத்ம முயற்சி, அருட்பணியால் ஆருயிர்களின் பிணி பாவங்களை நீக்கல், நல்ல அறநூல்களை எழுதவும் பரப்பவுஞ் செய்தல் முதலியவை. ஆசை ஒரு நெடியகடல். தன் பணிகளின் பலனைக் கருதாது விடுத்தலே ஆசையொழியும் வழி. மருந்து வைத்தியம், மந்திரம், சோதிடம் முதலியன துறவியின் சாந்தங் கெடுக்கும். சுத்தமனதால் கடவுளைக் கண்டு பேரின்பத்தில் உயரலாம்.

3. ஆசை யழுக்கில்லா தைம்பொறியைச் செற்றவனே
ஆசான் உலகிற்கே யாம்.

ஆசை, அழுக்கு, இல்லாது = ஆசையென்னும் மாசு பிடிக்காமல் - ஐம்பொறியை = (மெய், வாய், கண், மூக்கு, செவியான) ஐந்து இந்திரி யங்களையும் - செற்றவனே = அடக்கினவனே - உலகிற்கே, ஆசான், ஆம் = உலக குரு ஆவான்.

குற்றமற்றவன் ஆசானாவன். இருளினின்று தானும் விடுபட்டுப் பிறரையும் விடுவிப்போன் குருவாவான். செருக்கு, காமம், போகம், புகழ், பொருள் இவற்றை நீக்கி, பற்றையறுத்து, ஐம்புலன்களை யும் மனத்திற் கூட்டி அதையொரு சக்தியாக மாற்றி, அந்த சக்தி யால் உலகை அவன் தூய்மைப் படுத்துவான். உண்மையான துறவி அத்தகைய ஆசானே.

4. களிப்பன்புந் தொண்டுநலங் காட்சிபொறை யோடுள்
ளொளிகண்டோன் மாட்டே யுலகு.

களிப்பு = திருப்தி - அன்பும் = (எல்லா வுயிர்களிடமும்) அன்பும் - தொண்டு நலம் = அருட்பணி செய்யும் நற்செய்கையும் - காட்சி = அறிவும் - பொறையோடு = பொறுமை ஆகிய தன்மையுடன் - உள் ஒளி = உள்ளே நிலவும் கடவுட் சோதியை - கண்டோன், மாட்டே, உலகு = பார்த்த வனிடமே உலகம் வசப்படும்.

களிப்பினால் கவலையற்று அமைதி நிலவும். அன்பு ஒரு பெரிய சக்தி. அது நமது ஆன்மாவை உலகெலாம் பரப்பும். அன்பை அருட்பணியின் வாயிலாக வெளியிடுதல் வேண்டும். அருட்பணியால் தன்னயமும் பேராசையும் நலியும். தூயவாழ்வுறும். தூய வாழ்வால் அத்யாத்ம ஞானம் மலரும். அதனால் பொறுமையும் சாந்தமும் ஏற் படும். பிறகு உள்ளொளி திறந்து கடவுட்காட்சி யுண்டாகும். இத்தகைய துறவிக்கு உலகு வணங்கும். உலகை வசப்படுத்தி அமர வாழ்விற்கு அழைத்துச் செல்லும் சக்தி அவனுக்கே உண்டு. புத்தர், ஏசுநாதர், பரமஹம்ஸர், முகம்மது நபி போன்றோர் இத்தகையோர்.

5. பொன்றா வொளிமெய்யாம்; பொய்யுடலென் றேயறியின்
என்றும் இடும்பை யிலை.

பொன்றா = அழியாத - ஒளி = ஆத்மப் பிரகாசம் - மெய்யாம் = நிலையாகும் - உடல், பொய் = தேகம் நிலையற்றதாம் - என்றே

அறியின் = என்பதை உணர்ந்தால் - என்றும், இடும்பை, இலை = ஒரு நாளுந் துன்பமே கிடையாது.

நமக்குள் ஆன்மவடிவாக ஒரு மஹாசக்தியுள்ளது. அதற்குப் பிறப்பும் இறப்புமில்லை. பஞ்சபூதங்களும் அதைக் குறை செய்ய முடியாது. ஆயுதங்களல் அது ஆறாது. நமது வினைமுடிந்ததும் அது கடவுளைச் சேரும். இவ்வுடல் ஜீவனின், பஞ்சபூதச் சட்டை. கரும நாடகம் முடிந்தும் விழுந்துவிடும். இறந்தாலும் உடலே இறக்கிறது. மற்றொரு சட்டையுடன் வந்து வினை முடித்து விடுதலை பெறலாம். காய்முதிரப் பூவிதழ் விழுவது போல ஆத்மானந்தம் பழுக்கப் பழுக்க, தேகாபிமானம் அறும். ஆத்மசக்தன் ஒருவனால் உலகெல்லாம் உய்யும். அப்பர், ஏசுநாதர், முதலியோர் வாழ்வைக் காண்க.

அறநூல், துறவியல் முற்றிற்று.

# 4. சக்தியியல்

உண்மையான துறவே பெரிய சக்தி. தன்னையறிந்து, மாயை துறந்து, பொன்றா வொளி கண்டவன் மனம் சக்தியும், திண்மையும் வாய்க்கும். அவன் எதற்கும் அஞ்சான். சிறை, படை, பட்டினி முதலிய கொடுமைகளால் அவன் ஒடுங்கான். பொறுமையும், அஞ்சாமையும், உண்மையும், வீரமுங் கொண்டு அறத்தை நாட்டுவான். சாவும் அவனுக்குச் சட்டை மாற்றமே. அவன் பூரண சுதந்திரன். அத்தகைய சக்தி நிலையடையும் வழியை இவ்வியல் கூறுகிறது.

## 1. சக்தி

1. **திண்கருத்தின் சக்தியெழில், சேர்ந்த தவத்தோர்க்கிங்**
**கென்செயலு மாற்ற லெளிது.**

திண் = உறுதியான - கருத்தின் = மனத்தின் - சக்தி = வல்லமை - எழில் சேர்ந்த = ஒளி வீசப்பெற்ற - தவத்தோர்க்கு = தவ முடையோருக்கு - இங்கு = இவ்வுலகில் - என் செயலும் = எந்தக் காரியமும் - ஆற்றல் = செய்தல் - எளிது = இலகுவாகும்.

புலன்களை வெளிவிடாது கருத்திலேயே திண்மையுறக் கூட்டினால் அது ஒரு பெரிய சக்தியாகிறது. அந்த சக்தியொளி வீசுந் தவத்தினர் தங்கள் மனவுறுதியால் எதையும் எளிதிற் செய்வர். தவமே

எல்லாம் வல்ல சக்தி. அதற்கு ஒருமனப்பட்ட திண்ணிய கருத்தும், சக்தி தியானமும், அதனால் தெய்வீக வொளி வீசப் பெறலும் வேண்டும்.

2. கல்விசெல் வித்திடையே காணுந் தகைமைத்தே;
நல்லுயிர் மெய்யேண் நலம்.

நல், உயிர் = நலம் பயக்கும் உயிர் வலிமை அல்லது ஆத்ம சக்தி - மெய்யேண் = தேக பலம் - (இவற்றின்) நலம் = சீர்மை - கல்வி, செல்வத்து இடையே = கல்விக்கும் செல்வத்திற்கும் நடுவில் - காணும் = தோன்றும் - தகைமைத்தே = பெருமையளவேயாகும்.

கல்விக்கும் செல்வத்திற்கும் உள்ள பெருமையே ஆத்ம சக்திக்கும் மிருக பலத்திற்கும் ஆகும். ஆத்மசக்தி கல்வியைப் போன்று அழியாதது, கடவுளைக் காட்டக்கூடியது. பிறர்கொள்ளை கொள்ள முடியாதது. மிருக பலம் செல்வத்தைப் போன்று நிலையற்றது. வற்றக் கூடியது. அகங்காரம் இடம்பம், இன்னலிற் புகுத்தக் கூடியது. மிருக பலம் மிருக பலத்தினாலே அழியும்.

3. ஒற்றுமையி னற்றே யுயர்வெற்றி; அஃதொன்றைப்
பற்றும்நா டேதே பகை.

உயர், வெற்றி = மேலான ஜெயம் - ஒற்றுமையின் அற்றே = ஜனங்களின் ஒற்றுமையினளவேயாகும் - அஃதொன்றை = அவ்வொற் றுமை யொன்றையே - பற்றும் நாடு = கைக்கொண்ட நாட்டில் - பகை ஏதே = விரோதிகள் ஏது.

ஒற்றுமையுள்ள நாட்டின்முன் பகைவர் அஞ்சுவர். பிறப் புரிமைக் கிளர்ச்சி செய்து நீதியை நாட்டவும், கொடுங்கோற் கடியவும், விடுதலையடையவும், நாட்டின் நலமோங்கவும் ஒற் றுமையே சிறந்த வெற்றிக் கருவியாகும். அத்யாத்ம வாழ்விலும், ஐம்புலன்களும் ஒன்றி மனத்தில் சேர்ந்தால்தான் தவவெற்றி பெறலாம்.

4. வாய்மை, பகையாமை, மாட்சியே சாந்தமிவை
காய்வானைக் காய்படையாங் காண்.

வாய்மை = உண்மை - பகையாமை = வெறுக்காமை (அன்பு) - மாட்சியே = பெருந்தன்மை - சாந்தம் = பொறுமை - (இவையே) - காய் வானை = வருத்தும் பகைவனை - காய்படையாம், காண் = வருத்தும் சேனையாகும் என்பதை யறிக.

நம்மிடம் உண்மையும், நீதியும், அன்பும், பெருந்தன்மையும், சாந்தமும் இருந்தால், அதுவே நமது பகைவனை எதிர்த்து வெல்லுந் திண்ணிய படையாகும். இவையே ஆத்மசக்தியின் அங்கங்கள். பகைவனைப் பகைத்தால் பகையே மிகும். சத்தியத்திற்காகப் பாடுபட்டு உடல் நீப்பவன் அமரனாக உலகம் போற்ற வாழுகிறான். அவனுடைய பருவுடல் சிதையினும் நுண்ணுடல் என்றுமுள்ளது. இடர் பொறுத்தலால் அவன் எண்ணம் திண்மையுற்று உலகிற்கு நம்பிக்கையேற்படுகிறது. ஆயுதப்படை ஆயுதப் படையால் மாயும், ஆத்மசக்தி என்றும் பொன்றாதொளிரும். ஸொக்ராத்தன் உதாரணத்தைக் காண்க.

5. பஞ்சம், படைசேர் பகையுஞ் சிறையெதுவும்
அஞ்சானை வெல்லல் அரிது.

பஞ்சம் = வறுமையும் - படைசேர் பகையும் = சேனையுள்ள விரோதியும் - சிறை = சிறையும் - எதுவும் = வேறெந்தத் துயரும் - அஞ்சானை - தைரியமுள்ளவனை - வெல்லல் = இணக்குதல் - அரிது = அருமையானது.

ஆத்மசக்தியுள்ளவன் உடலுக்குறும் இடர்களைக் கண்டு அஞ்சான். உடல் என்றும் வீழ்வது, உயிர் என்றும் வாழ்வது என்று அஞ்சாதிருப்பான். அவனைப் பஞ்சத்தால் வருத்தினும், படைகொண்டு தாக்கினும், சிறையிலடைக்கினும், இன்னும் வேறெந்த மிருக பலத்தால் ஒறுக்கினும் தனது ஆத்ம வீரத்தால் அனைத்தையும் பொறுத்து விளங்குவான். அவனை பலாத்காரத்தால் இணக்கமுடியாது. அஞ்சாமை ஆத்ம சக்தியின் அணிகலன். பிரதாப சிங்கன் உதாரணத்தைக் காண்க.

## 2. சாந்தவெற்றி

1. பொறைமெய் பகைவெல்லும் பொன்றா நலமாம்;
தகைசால காந்தியே சான்று.

பொறை = பொறுமையும் - மெய் = உண்மையும் - பகை, வெல்லும் = விரோதத்தை வென்றுவிடும் - பொன்றா, நலமாம் = அழியாத நன்மை பயக்கும் - தகைசால = மாண்பு மிகுந்த - காந்தியே = மஹாத்மா காந்தியே - சான்று = சாட்சி உதாரணம்.

சாந்தமும், சத்யமும் பகைவனுடைய மிருகபலத்தை இணக்கும். சத்ய சாந்தனுக்குக் கடவுளின் துணையுள்ளது. நீதியுள்ளது. மிருக

பலம் செலவழிந்து அலுத்துப் போகிறது. சத்யசாந்தன் எதிரியின் மனத்தை முடிவில் திருத்தி நன்மையாக்குகிறான். எதிரியை அழிப்பது வெற்றியல்ல, திருத்துவதே சிறந்த வெற்றி. சத்தியாக்கிரகம், சாத்வீக எதிர்ப்பு, எதிர்க்காமல் எதிர்ப்பு, ஒத்துழையாமை எல்லாம் இந்த சத்ய சாந்தத்தின் பாற்படும். பிரகலாதன், அப்பர், அரிச்சந்திரன் முதலியோர் இதையே கையாண்டனர். மஹாத்மா காந்தியின் துணையும் இதுவே. தென்னாப்பிரிக்காவிலும், கெய்ரோவிலும், ஒத்துழையாமையியக்கத் திலும் இந்தச் சக்தி வெற்றி நாட்டியதை யுணருக.

2. வாழ்க்கை மிருதியாம் வாரம்; பொறையுண்மை,
ஆழ்வினை வெற்றியி னாறு.

வாரம் = அன்பு - வாழ்க்கை = மனித வாழ்வின் - மிருதி, ஆம் = ஸ்மிருதி அல்லது அறநூல் ஆகும் - பொறை, உண்மை = பொறுமை யும் சத்தியமும் - ஆழ்வினை = பெரும் பயனுள்ள காரியத்தில் - வெற்றியின் = ஜெயம் பெறுவதின் - ஆறு = வழியாகும்.

அன்பே கடவுளின் சட்டமான தர்ம நூல். அன்பால் நமது ஆன்மா உலகெல்லாம் பரவுகிறது. பகை யொழிந்து நட்பும் ஒற்றுமை யும் பிறக்கிறது. அன்பே அறநெறி. அன்புளார் பிறர்க்கென வாழுவர். பொறுமையும், உண்மையும் ஒரு நல்வினையில் வெற்றி பெறுந் துணையாகும்.

3. ஆற்றல் பொறையளவே யாகும்; அதுவுடையோன்,
ஏற்றம் பெறுமெங்கும் எண்.

ஆற்றல் = பலம் - பொறையளவே = பொறுமைக்குத் தக்கபடியே - ஆகும் = ஆம் - அதுவுடையோன் = பொறுமையுள்ளவன் - எங்கும் = எவ்விடத்திலும் - ஏற்றம் = உயர்வை - பெறும் எண் = அடைவான் என்பதை நினை.

பொறுமையே பலத்தின் அளவுகோல். பொறையால் மன வுறுதியுற்று நரம்புகள் திண்மையுறுகின்றன. பொறுமையிழப்பவன் தன் மனத்திண்மையிழந்து தளர்கிறான். பொறுமையற்ற வலியன், பொறுமையுள்ள மெலியனுக்கெதிர் நிற்க முடியாது. பொறுமையுள் ளவன் புகழ் எங்கும், என்றும் சிறப்புறும்.

4. இடர்க்கும் நலஞ்செய்யும் இன்வாழ்வி னோரே,
அடக்கவே ஐம்புலனை யாம்.

இடர்க்கும் = துயருக்கும் - நலஞ்செய்யும் = நன்மையே செய்யும் - இன்வாழ்வினோரே = இன்பமான வாழ்க்கையுள்ளவரே - ஐம்புலனை = பஞ்சேந்திரியங்களையும் - அடக்கவே ஆம் = வசப்படுத்த முடியும்.

நல்வினை செய்வோருக்குப் பல்லிடர் தருவது உலகின் தொல் வழக்கம். அவ்விடர்செய்வோருக்கும் புன்னகை காட்டி நன்மையே செய்யும், இன்னிய தன்மையுள்ளவர் அளவற்ற பொறுமையடை கிறார்கள். இப்பொறுமையினால் மனம் திண்மையுறுகிறது. அதனால் ஐம்புலன்களும் அடங்குகின்றன. பகைக்கு அன்பும், தீதிற்கு நலனும், வன்சொல்லிற்கு இன்சொல்லும், வசைக்கு இசையும் நெருப்பிற்கு நீர் போலாகும். அப்படிச் செய்யும் சாந்தர் தம்புலன்களை யடக்க முடிவர். ஏசுநாதர் உதாரணத்தைக் காண்க.

5. நோவுறினும், நோவீயா, நுண்ணறிவன் சீலனாம்;
ஆவன் அமரன் அவன்.

நோவுறினும் = தான் இடருற்றாலும் - நோ, ஈயா = பிறருக்குத் துன்பந்தராத - நுண்ணறிவன் = கூர்மையான புத்தியுள்ளவன் (தீர்க்க தரிசி) - சீலனாம் = நல்ல குணசாலியாவன் - அவன், அமரன், ஆவன் = அவனே (பூலோகத்தில்) தேவனாவான்.

சத்யத்திற்காகத் துயர் தாங்கி எதிர் செய்யாமல் பொறுமை யுடன் பணி செய்வோன் சிறந்த சீலனாவான். பொறுமையும் அன்புமே வெல்லும் என்ற நுண்ணறிவுள்ளவன் அவனே. சத்தியமே வெல்லும், மாயை வீழும் என்ற தீர்க்கதரிசனத்துடன் இடர் பொறுத்து, உலகம் தேவனென்றேத்தும்படி அவன் விளங்குகிறான். அப்பர், காந்தியடி களின் உதாரணத்தை யறிக.

## 3. வாய்மை

1. என்று முளதாம்மெய்; ஏற்றமாம்; சான்றோரின்
நன்றுசெய் நல்வழியாம், நாடு.

மெய், என்றும், உளதாம் = உண்மை எந்நாளும் அழியா திருக்கும் - ஏற்றமாம் = மேன்மையடையும் - சான்றோரின் = அறிவு

மிக்க பெரியவர்களுக்கு - நன்றுசெய், நல்வழி ஆம் = நன்மை செய்வதற்குச்சிறந்தவழியாகும் - நாடு = (மெய்யை) விரும்புவாயாக.

தர்மநூல் உண்மை நிறைந்தது. நீண்டகாலத்திற்கு ஒருமுறை ஒவ்வொரு உண்மை பெரியோர்களால் வெளிப்படுத்தப்படுகிறது. உண்மை, பக்தி இவற்றின் மேன்மை அரிச்சந்திரன், அப்பர் மூலம் வெளிப்பட்டது. உண்மை என்றும் நிலவி வெல்லும். பெரியோர்கள் உண்மையைக் கொண்டொழுகியே உலகைத் திருத்துவர். தற்போது சாந்த வெற்றியின் உண்மை உதித்துள்ளது. உண்மையை அனைவரும் நாடுக.

2. புறத்தூய்மை செய்யும் புனல்போல வுண்மை,
மனத்தூய்மை செய்யும் மருந்து.

புறத்தூய்மை செய்யும் = வெளிச்சுத்தமாக்கும் - புனல்போல = நீரைப்போல - உண்மை = சத்தியம் - மனத்தூய்மை செய்யும் = மனதைப் பரிசுத்தப் படுத்தும் - மருந்து = அமுதமாகும்.

நமது உடலைத் தண்ணீராலேயே சுத்தஞ்செய்யலாம். மனதை சத்தியமான நினைப்பினாலேயே சுத்தம் செய்யலாம். உடற் பிணிகள் யாவும் ஜல சிகிச்சையால் நீங்கும். மனப்பிணிகள் யாவும் நிலையான உண்மைப் பொருளையறியவே நீங்கும்.

3. வாய்ப்பேச் சடக்கவே வாசி திறந்திட்டுப்
பாயுமெய்ப் பேரறிவு பார்.

வாய்ப் பேச்சு அடக்கவே = வாய் வார்த்தையைச் சுருக்கவும் - வாசி = நற்குணம் - திறந்திட்டு = விரிந்து - மெய், பேரறிவு = உண்மையான, உயர்ந்த ஞானம் - பாயும் பார் = வந்து சேருவதைக் காண்பாயாக.

மௌனத்தால், வாய் பொய் பேசுவது குறைகிறது. மனம் அடங்குகிறது. அதனால் நல்ல குணம் உண்டாகிறது. வாசி என்பதற்கு இசைக்குழல் யோகவாசி என்றுங் கொள்ளலாம். மௌனத்தால், நமது மூச்சு அளவுப்படி விடுக்கப்பட்டு பிராணாயாம சாதகம் கை கூடுகிறது. ஓங்கார நாதம் கேட்கிறது. வாசி என்பதற்கு மரியாதை எனவும் பொருள். மௌனமாயிருப்பவன் யாவருக்கும் தீங்கிழைக்காது மரியாதைக் குரியவனாகிறான். வாசி (மூச்சு) யடக்கலே யோக சித்திக்கு வழி. பேரின்ப ஞானம் அதனால் நம்முள் பாய்கின்றது.

4. இயற்கையின் புத்தகமே யின்பாக நோக்கின்,
பயக்கும் அறனாம் பயன்.

இயற்கையின் புத்தகமே = இயற்கைப் பொருள்களான (பிரகிருதி) நூலையே - இன்பாக = களிப்புடன் - நோக்கின் = ஆராய்ந்து கண்டால் - அறனாம் = தர்மமாகிய - பயன், பயக்கும் = உபயோகத்தைச் செய்யும்.

அறநூல் எல்லாம் இயற்கையறிவாலேயே எழுதப்படுகிறது. இயற்கை என்னும் நூலே இன்பமான அறநெறிகளை வகுக்கிறது. முகம்மது நபிக்கு இயற்கையே புத்தகம். கடல், மழை, வானம், பூமி, சூரியன், சந்திரன், மலை, நதி முதலிய இயற்கைப் பொருள்கள் அவற்றுடன் பழகுவோருக்கு அளவிறந்த உண்மைகளைப் புகட்டுகின்றன. கடவுளின் சக்தி இயற்கையிற் காண்கிறது. இயற்கை யன்னை நமது நோய்களைத் தீர்க்கிறாள். இயற்கையே தவத்தினரின் தாய். இயற்கை வாழ்வே இன்ப வாழ்வு.

5. வாய்மை பயனுள மாற்றம்; அதுவின்றேல்
வாயல்ல சொல்லு வது.

வாய்மை = வாயின் தன்மை, சத்தியம் - பயனுள = நல்ல பலனைத் தரக்கூடிய - மாற்றம் = சொல் - அது இன்றேல் = பலனில்லாவிடில் - சொல்லுவது = பேசுவது - வாயல்ல - வாயில்லை.

வாயின் தன்மை பயனுள்ள சொல்லைப் பேசுவதுதான். வீண் சொற்கள் பேசுவது வாயில்லை. வீண் சொற்களால் மூச்சு வீணாகி ஆயுள் குறைகிறது. எடுத்த வினை முடியாது போகிறது.

## 4. கூற்றஞ்சாமை

1. புதுமெய் வருமகிழ்வே பொன்றலில் அல்லால்
எதுவெகுளிக் கேசொல் லிடம்.

புதுமெய் = புதிய உடல் - வரும் மகிழ்வே = வரப்போகின்ற களிப்பே - பொன்றலில் = சாதலில் - அல்லால் = அல்லாமல் - வெகுளிக்கு = பயத்திற்கு - எது, இடம், சொல் = காரணம் என்ன இருக்கிறது சொல்.

வினையினால் உடல் வந்தது. வினை முடிந்ததும் மறைகிறது. வினை மீதியிருந்தால் மீண்டும் வருகிறது. இவ்வுடல் போனால்

மறு பிறப்பில் புதியவுடல் வருகிறது. பழைய சட்டை கிழிந்து புதுச் சட்டை வருவது போன்றே இப்பிறப்புடல் பிரிந்து மறு பிறப்புடல் வருகிறது. சாவின் உண்மை இதுவே. இதையறிந்தோன் சாவிற்காக அஞ்சான். புத்துடல் வரும் மகிழ்வே இறத்தலில் உள்ளது.

2. நாளை யிருப்பதுபொய் நாமென்றே நற்செயலை
வாழப் புவிக்கு வழங்கு.

நாம், நாளை, இருப்பது, பொய், என்றே = அடுத்த நாள் நாம் இருப்பது நிச்சயமில்லை என்று எண்ணி - நற்செயலை = நல்ல வினையை (நினைத்தவன்றே) - வாழ = உன்பெயர் நீடூழி வாழ - புவிக்கு, வழங்கு = பூமிக்குச் செய்வாயாக.

நமது வாழ்வின் போக்குவரவையறியோம். இன்றிருக்கும் போதே நமது பெயர் உலகில் வாழும்படியான அருட்பணியைச் செய்யவேண்டும். நாளைச் செய்வோ மென்றிருக்கக்கூடாது. நாளை நாம் இருப்பது சந்தேகமே. உடலின் பொய்மை அத்தகையது.

3. **உண்மைக்குத் தொண்டுசெயும் உத்தமர்க்குஞ் சாவுண்டோ?**
**திண்மையிலாத் தெளவைக்கே தேர்.**

உண்மைக்குத் தொண்டு செயும் = உண்மையை நிலைநிறுத்த வுழைக்கும் - உத்தமர்க்கும், சாவுண்டோ = நல்லோருக்கும் சாவு உண்டோ? (இல்லை) - திண்மையிலா = மனவுறுதியில்லாத - தெளவைக்கே = சோம்பேறிக்கே, தேர் = சாவென்றறிக.

உண்மைக்குப் பாடுபட்டு இறப்பவர் தங்கள் புகழால் அவ் வுண்மையைப் போலவே என்றும் உலகின் நினைப்பில் சாகாதிருப்பர். மனிதன் செயல்களால் அறியப்படுகிறான். உறுதியற்று சோம்பித் திரிபவர் உலகிற்கு பாரமாவர். அவர்கள் இறந்தாலும் இருந்தாலும் உலகம் கருதாது. உலகின் மனத்தில் நிலைக்கும்படி வாழுவதே என்றும் உயிரோடிருப்பதாகும். உண்மையாளர் சாவினால் மறக்கப்பட மாட்டார்.

4. **நலத்தாற் புவிமனதுள் நாடிபுகு நல்லோன்,**
**இலனாவன் கூற்றின் இரை.**

நலத்தால் - நற்செயல்களால் - புவி மனதுள் = உலகோர் நெஞ்சில் - நாடி = விரும்பி - புகும் நல்லோன் = சென்றிருக்கும் நன்மையன் -

கூற்றின் = எமனின் - இரை = தீனியாக - இலனாவன் = ஆக மாட்டான்.

தான் செய்த நன்மையால், உலகோர் என்றும் மனத்துள் வைத்துக் கொண்டாடும்படி வாழ்ந்த நல்லோன் சாவிற்கு இரையாக மாட்டான். அவன் புவியினுள்ளத்திற் புகழுடன் வாழுவான். ஆதலின் உண்மையான அருட்பணி வாழ்வே சாவைவெல்லும் வழி. சிவாஜி, மஜினி முதலியோர் உதாரணம்.

5. **இறந்துங் கரும மிருப்பதனாற் பின்னர்,**
**பிறந்தே யலையுமுயிர்ப் பெட்பு.**

இறந்தும் = ஆயுள் முடிந்தும் - கருமம் இருப்பதனால் = செய்ய வேண்டிய வினை மீதியுள்ளதனால் - பின்னர் = மறுபடியும் - பெட்பு உயிர் = ஆசையுள்ள வுயிர் - பிறந்தே அலையும் = உலகில் மீண்டும் பிறந்திறந்தலையும்.

வினையுள்ள மட்டும் உயிர் இறப்பிற்கும் பிறப்பிற்கும் அலைந்தே தீரும். ஆசையினால் உண்டான கரும பந்தம் உள்ள மட்டும் ஜனன மரணம் உண்டு. ஒரு நற்செயலைத் தொடங்கி இடையில் இறந்தால் மீண்டும் பிறந்து அதைப் புரியலாம் என்றதையறிக.

## 5. சுயேச்சை

1. **ஆண்மை தனதே, அடிமை பிறனாட்சி;**
**மாண்நோ வதன்கண் மதி.**

தனதே = தன்னாட்சி, சுயாட்சியே - ஆண்மை = வீரமாகும் - பிற னாட்சி = அயலானை ஆளவிடுவது - அடிமை = அடிமைத்தனமாகும் - அதன் கண் = இவ்விரு ஆட்சியினிடமும் - மாண் = மாண்புள்ளதையும் - நோ = துன்பமானதையும் - மதி = ஆராய்ந்தறிக.

தன் நாட்டு, வீட்டு, ஆத்ம காரியங்களைத் தானே நிர்வகித்தல் சுயாட்சியாகும். மாற்றானுக் கிடங்கொடுத்து ஆளும்படி விடுதல் அடிமைத்தனமாகும். தன்னைத் தானாளுவது ஆண்மையானது, மாண் புள்ளது. தன்னைப் பிறன் ஆளவிடுதல் அடிமைத்தனமும் நோவுமாகும். சுயாட்சியே சுகம்.

2. கறுக்கும் அடிமைக் கலிதீர்க்க லாற்றான்,
பெருஞ்செல்வத் தாலென்னே பீடு?

கறுக்கும் = மனக்குறை செய்யும் - அடிமைக்கலி = அடிமைத் தனமான கேட்டை - தீர்க்கல் ஆற்றான் = போக்க முடியாதவனுடைய - பெரும் செல்வத்தால் = ஏராளமான பொருளால் - பீடு என்னே = என்ன பெருமையுண்டாகும்.

எவ்வளவு பொருள் படைத்தாலும், மாயைக்கும், அயலா ருக்கும் அடிமைப்பட்டிருந்தால் ஒன்றும் பயனில்லை. அடிமைத்தனம் மனவிரிவைத் தடுக்கும். ஆண்மையைப் போக்கும். தைரியத்தைக் குறைக்கும். நன்னெறியைத் தடுக்கும். அடிமைச் செல்வனைக் காட்டி லும் சுதந்திரமான ஏழையே பெருமையுள்ளவன்.

3. தன்னுடையூண் நற்றொழிலால் தானே யடைந்தக்கால்,
உண்மை யுணர்ச்சி யுறும்.

தன், உடை, ஊண் = தன் தேவைக்குப் போதுமான, உணவை யும் ஆடையையும் - நல்தொழிலால் = (பாபமற்ற, சுயேச்சையான) நல்ல கைத்தொழிலால் - தானே = தன் முயற்சியாலேயே - அடைந்தக்கால் = பெற்றால் - உண்மை, உணர்ச்சி, உறும் = மெய்யான எண்ணம் மனத்தில் உதிக்கும்.

உடலுள்ள மட்டும் உணவுடைத் தேவையிருக்கும். இதை அடிமையற்ற வழியில் நல்லதொழில் செய்து தன் முயற்சியால் சம்பா திப்பவன் பிறரை முகமன் கூறவும், பொய் பேசவும் வேண்டுவதில்லை. வாழ்வை வயிற்றுக் கஞ்சிக்கு விற்க வேண்டுவதில்லை. நூற்றல், நெசவு, பயிர்த்தொழில் முதலியவை தூய தொழில்கள். திருவள்ளுவ நாயனார் வாழ்க்கையைக் காண்க.

4. தந்தையே யேனுந் தகவில செய்தக்கால்,
முந்தவர் கூட்டு முனி.

தந்தையேயேனும் = தகப்பனானாலும் - தகவில செய்தக்கால் = அறவழிக்குப் பொருத்தமற்ற காரியங்களைச் செய்தால் - முந்து = முன்னால் - அவர் கூட்டு = அவர் உறவை - முனி = விட்டுவிடுவாயாக.

தானும் அறநெறி நின்று, பிறரையும் நிற்கச் செய்பவன் உறவே நல்லுறவு. நாம் அறநெறி நிற்பதைத் தடுப்பவன் தந்தையேனும்

அவனுடன் ஒத்துழையாமலிருந்து திருத்த வேண்டும். சண்டேச நாயனார், பிரகலாதன் வரலாறுகளைக் காண்க.

5. சோர்வு விடுத்துச் சுயேச்சை யடைந்துலகில்
வீரனாய் வாழ விரும்பு.

சோர்வு, விடுத்து = மனத்தளர்வை நீத்து - சுயேச்சையடைந்து = சுதந்திரம் பெற்று, - உலகில் = பூமியில் - வீரனாய் வாழ = வீரனெனப் புகழ்பெற்றுவாழ - விரும்பு = இச்சைப்படு.

மனிதன் வீரன். தன்னலம்விட்டு, மன்னுயிர்க்குழைப்போன். இராமாயணம், பாரதம், இலியாது முதலியன வீரர் சரிதைகளே. அப்பர், சங்கரர், புத்தர் முதலியோர் ஆன்மவீரர். சிவாஜி, குருகோவிந்தன், பிரதாப சிங்கன் போன்றோர் கர்மவீரர். வீரனே அறக்காவலன். உண்மை, அஞ்சாமை, அன்பு, ஆண்மை, பொறுமை, நீதி, தியாகம், ஆட்சி, தன்னல மறுப்பு, ஒப்புரவு முதலியன வீரர் குணமாகும். சோர்வு சோம்பல் தரும். பொய்புகுத்தும், அதை விலகிட சுயேச்சையுடன் வீரனாக ஒவ்வொருவனும் முயல வேண்டும். கண்ணன் கீதையால் தனஞ்சயனை வீரத்திற்கே எழுப்பினான்.

அறநூல், சக்தியியல் முற்றிற்று.

----------

# 5. தொண்டியல்

அருட்பணியாற்றி நமது சக்தியைப் பயன்படுத்த வேண்டும். மக்களுள், மிருகம், மனிதன், தேவன் என்னும் மூன்று வாழ்க்கைப் படிகள் குணகர்மங்களுக்குத் தக்கபடி ஏற்பட்டுள்ளன. அனைவரும் தெய்வத் தன்மையடைதற்கான வினைச்சிறப்பு, அவ்வினை செய்யும் வகை, நல்வினைப் பயிற்சி, கடமையுணர்ச்சி முதலியவற்றைத் தொண்டியல் விரிக்கிறது.

## 1. வினைமாட்சி

1. மாமனிதன், தேவென்னும் வாழ்க்கைப் படிகளுள;
தாம்செய் வினையே தரும்.

மா = விலங்குநிலை - மனிதன் = மனிதநிலை - தேவு = தெய்வ நிலை - என்னும் = என்று சொல்லத்தக்க - வாழ்க்கைப்படிகள் உள =

மனித வாழ்வில் நிலைகள் உள்ளன, - (அம்மூன்று நிலையும்) - தாம் ... தரும் = தாங்கள் தாங்கள் செய்யும் கருமமே அளிக்கும்.

மிருகம், மனிதன், தேவன் என்று மூன்று நிலைகள் மனித வாழ்வில் உள்ளன. அவரவர் கருமத்திற்குத் தக்க படியே அந்நிலைகள் அடையப்படும். ஊண், உறக்கம், ஊடல், கூடல், ஈனல், பேணல் முதலிய தொழில்கள் மனிதருக்கும், விலங்களுக்கும் பொதுவானவை. கேவலம் இவைகளுக்காகவே வாழ்வைக் கழித்து நலந்தீதறியாதவர் மனித விலங்கேயாவர். மனிதன் வீரன். நலந்தீதுணர்பவன். பிறர்க்குதவு முணர்ச்சியும் தன்னலமறுப்பும் இரக்கமும், அன்பும், சமூகவுணர்ச்சி யும் உள்ளவன். அர்ஜுனன், சிவாஜி, பிரதாப சிங்கன், குருகோவிந்த சிங்கன் முதலியோர் மனித நிலையிலுயர்ந்தவர். பூரணசாந்தராய், சத்யசுத்தராய், தவசக்தியுடன் மனித சமூகத்தைச் சுத்தப்படுத்தவே தன் உடல் பொருள் ஆவியையீந்து, இடர் பொறுத்துக் கடமை செய்து கடவுளுடன் ஒன்றுவோர் தேவராவர். வினையறிந்தாற்றி விடுதலை யடைபவர் அவரே. எல்லாரும் முயற்சியால் தேவராகலாம்.

2. தேவர், நரகருஞ் செய்யும் வினையாலே
யாவர்; இதனை யறி.

செய்யும் வினையாலே = (மனிதர்) புரியுங் கருமச் சீராலே - தேவர், நரகரும் ஆவர் = தெய்வத் தன்மையுள்ளவராயும் மனிதத் தன்மையுள்ளவராகவும் ஆவர் - இதனை, அறி = இவ்வுண்மையை யறிவாயாக.

மேற்கூறியவாறு மக்கள் தத்தமது வினை நலத்திற்குத் தக்க படியே நரர், தேவர் எனப்படுவர். உயிர்களிலெல்லாம் கடவுள் கண்டு அருட்பணித்தவஞ் செய்வோர் தேவர். தன் தனளவிற்குத் தூயதொழி லால் தேடியுண்டு, இல்லறங்காத்து, முடிந்தமட்டும் பிறர்க்குதவி வாழ்பவன் நரன். தேவர் தெய்வலோகத்திற்கே உரியவரல்லர். பூவுலகி லும் உள்ளார் என்பதே இச்செய்யுள் நோக்கம்.

3. கிளைநாடும், இவ்வுலகுன் கீர்த்திவினை யெய்தின்.
உளமகிழு மீசன்; உணர்.

கிளை = சுற்றத்தாரும் - நாடும் = உன்தேசமும் - இவ்வுலகு = இப்புவியும் - உன், கீர்த்திவினை = நீ புகழ்படச் செய்யும் வினைப் பயனை - எய்தின் = அடைந்தால் - ஈசன், உளமகிழும் = கடவுள் மன மகிழ்வார். உணர் = இதையறிவாயாக.

வீடும், நாடும், உலகும் ஒன்றையொன்று தழுவியே நலம் பெறும். அவற்றிற்கான அறப்பணிகளைத் தன்னயம் விடுத்துச்செய்தலே கடவுளை மகிழ்விக்கும் வழி. ஏனெனில் உலகிற் பணிசெய்யவே ஆண்டவன் நம்மை விடுத்தான்.

4. தொண்டா லுறுமகிழ்வே தொல்புவியுஞ் செய்தோனும்
அண்டரும் போற்றும் அமிழ்து.

தொண்டால் = அருட்பணியால் - உறும் = வரும் - மகிழ்வே = ஆனந்தமே - தொல்புவியும் = பழைமையான உலகமும் - செய்தோனும் = அத்தொண்டைச் செய்தவனும் - அண்டரும் = தேவரும் - போற்றும் = புகழும் - அமிழ்து = தேவாமிருதமாகும்.

அருட்பணியால், உண்மையாளருக்குப் பெருங்களிப்புப் பிறக்கிறது. அக்களிப்பைப் பணியாளனும், உலகோரும், நுகர்ந்து நலம் பெறுகின்றனர். தேவரும் உலகு அப்பணியால் நலமெய்துவதைக் கண்டு மகிழுவர். இவ்வருட்பணிக்களிப்பே அமுதினு மினிதாம். பாற் கடலிற் கடைந்தெடுத்த அமுதங்கூடக் கடைந்த அசுரரையும் வஞ்சித்து தேவராலே மட்டுங் கொள்ளப்பட்டது. அது உண்டவனை மட்டும் மகிழ்விக்கும். தொண்டமுதம் தொண்டனை உலகின் மனதுள் நீடூழி வசிக்கச் செய்து அமரனாக்கும், முகம்மதுநபி இவ்வமுதை நுகர்ந்து ருய (50) கோடி மக்கள் வணங்க உலகெங்கும் விளங்குகிறார்.

5. தன்னயமுந் தற்புகழுந் தான்கருதா நற்பணியே,
பன்னும் மறைசெய் பணி.

தன்னயமும் = சுய நன்மையும் - தற்புகழும் = தன்னைப் பிறர் புகழ வேண்டுமென்ற அகங்காரமும் - தான் கருதா = ஒருவன் எண்ணாத - நல்பணியே = பரோபகாரப் பணியே - மறை பன்னும் = வேதம் (செய்யச்) சொல்லுகிறது. - பணிசெய் = அத்தகைய (அருட்பணியை) செய்வாயாக.

நிஷ்காம்யகர்மத்தையே கீதை உபதேசிக்கிறது. தன்னலம், வஞ்சகம், பொய் வேடங்களை விடுத்து, தற்புகழ்ச்சி, பிறர் புகழ் விருப்பம், அகங்காரம், இடம்பங்களையொழித்து, கடமையுணர்ச்சி யுடன் அருட்பணி செய்வதே வேதத்தின் உபதேசமாகும். பலனையும், புகழையுங் கருதிச்செய்யும் வினைகள் அகங்காரத்தின்பாற் படும். அவை நிறைவேறா. இராமகிருஷ்ண பரமஹம்ஸர் நற்பணிக்குச் சிறந்த உதாரணம்.

## 2. வகை

1. தன்னையிடங் காலவகை தான்கருதிச் செய்வினைகள்,
மன்னுசெய மாகும், மதி.

தன்னை = தனது சக்தியை - இடம் = தானிருக்கும் இடத்தை (தேசத்தை) - காலம் = காலத் தேவையை - வகை = செய்யும் வழியை - தான் கருதி = இவற்றையெல்லாம் நன்கு ஆராய்ந்து - செய்வினைகள் = செய்யப்படும் பணிகள் - மன்னு, செயம், ஆகும், மதி = நிலையான வெற்றிப் பயனைத் தரும் என்பதை யறிவாயாக.

தன் செயலுக்கும், தேசத் தேவைக்கும், காலப் போக்கிற்குந் தக்க கருமத்தை, செய்வகையறிந்து செய்தால் என்றைக்கும் அழியாத பலனைத் தரும்.

2. தன்னற் றிருவினையைத் தானடங்கி யேமுயலின்,
பின்னை நலஞ்செய்யும் பேறு.

தன், நல், திரு, வினையை = தான் செய்யும், (எல்லாருக்கும்) நல்ல சீர் பெற்ற கருமத்தை - தான் அடங்கியே, முயலின் = ஒருவன் (இடம்பமின்றி) அடக்கமுடன் செய்ய முயன்றால் - பின்னை = திருமகள் - நலஞ்செய்யும் = நற்றுணை செய்யத்தகும் - பேறு = பாக்கியமாகும்.

அடக்கம் தெய்வத்தன்மையுள்ளது. அது நமது வினை செய்ய மனத் திட்பந்தரும். விளம்பரமும், இடம்பமும், தற்புகழும் நமது திண்மையைச் சிதறடிக்கும். அடக்கமுள்ளவன் தனது கரும பலனைக் கடவுளுக்கு அர்ப்பணிக்கிறான். வெற்றியன்னை அவனைப் போற்று கிறாள்.

3. காக்கையிடம் பாட்டைக் கரக்குங் குயில்போல,
ஆக்கநலஞ் சூட்சிபல வாற்று.

காக்கையிடம் = காக்கையின் காப்பில் உள்ளபோது - பாட்டை = குரலை - கரக்கும் = ஒளித்திருக்கும் - குயில் போல = குயிற்குஞ்சைப் போல - நலம் ஆக்க = பொது நலஞ்செய்ய - பல சூட்சி = பல யுக்தி களையும் - ஆற்று = செய்.

குயில் முட்டை காக்கையாலே அடை காக்கப்படும். தனக்குப் பறக்குந் திறமை வருமட்டுங் குயிற் குஞ்சு பாடாது. அப்போதுதான் காக்கை அதைத் தன்னினமென்று வளர்க்கும். அதுபோல, தன்

காரியத்தைத் திறத்துடன் செய்யும் சக்தியை அடக்கமாக இருந்தே பெறல் வேண்டும். அதுகாறும் தன் சுற்றத்தவருக்குக் கலக்கம் ஏற்படாது தந்திரமாக நடந்து கொண்டே விடுதலையடைந்து பொதுப் பணிக்குக் கிளம்பவேண்டும். அரைகுறைத் திறனுடன் அருட்பணிக் கேகேல்.

4. பின்னே வருவதனைப் பீடுபெற முன்னாய்ந்தே
யென்றும் புரிதல் இனிது.

பின்னே வருவதனை = பின்னால் விளையும் நன்மை தீமைகளை - பீடுபெற = ஒழுங்காக - முன் ஆய்ந்தே = முன்னாலேயே ஆராய்ந்தே - புரிதல் = (ஒருவினை) செய்தல் - என்றும், இனிது = என்றைக்கும் நல்லது.

முன்பின் யோசனையுடன், மனச்சாட்சியுடன் எண்ணி, பலாபலன்களைத் தேர்ந்தே ஒருவினையைச் செய்ய முயலுதல் மிகவும் இனிது. பதறாமற் பயன் தூக்கிப் பணிசெய்ய வேண்டும்.

5. நான்முன்னே யென்னவர நாடற்க; ஓர்வினையை,
ஆழ்ந்துசெயும் ஆற்றலிலா தாங்கு.

ஓர் வினையை = ஒரு பொதுநலப்பணியை - ஆழ்ந்து, செயும் = நன்கு ஆராய்ந்து விடாமுயற்சியுடன் செய்யும் - ஆற்றல், இலாதாங்கு = சக்தியில்லாவிடின் - நான் முன்னே என்னவர = ''நான் இதைத் தலைமை பூண்டு செய்கிறேன்'' என்ற செருக்குடன் வெளிவருவதற்கு - நாடற்க = விரும்பாதே.

ஒரு வினை செய்வதற்குப் போதிய ஆற்றலை அடக்கமாகச் சேர்த்துக்கொண்டே பின்னர் அதைச் செய்ய முன் வரவேண்டும். ஆற்றற் குறைவுடன், செருக்குற்று ''நான் முன்னே'' என்ன வருவது நமது அரைகுறைத் தனமாகும். உலகம் நகைக்கும். அவ்வினைக்கே பழுது வரும். பூரணமுற்றுப் புண்ணியந் தொடங்கு.

## 3. வினைத்தேர்ச்சி

1. ஏழைகளுக் கூணுடையும், ஏனையோர்க் குத்துறவுந்
தாழக் கொடுத்தல், தலை.

ஏழைகளுக்கு, ஊண், உடையும் = வறியருக்கு உணவும் ஆடையும் (அடையுந் தொழிலையும்) - ஏனையோர்க்கு = செல்வருக்கு - துறவும் = தன்னலந் துறத்தலையும் - தாழ = தாழ்மையுடன் - கொடுத்தல் தலை = (ஒரு அருட்பணியாளன்) ஈவது முதன்மையானது.

எளியவருக்கு உண்ணவும் உடுக்கவும் வழி செய்ய வேண்டும். செயலுள்ளவரை தியாக புத்தி புகட்டித் தன்னலந்துறந்து, ஏழைகளுக்கு உதவும்படி செய்தல் வேண்டும். பரோபகாரத்திற்காகவே தனக்குச் செல்வந் தரப்பட்டதென்று பணக்காரர் உணர்ந்து ஏழைகளுக்கு உதவ வேண்டும். விவசாயமும், தொழிற்சாலைகளும், வியாபாரமும், பள்ளிக் கூடங்களும், இயற்கை வைத்திய சாலைகளும் ஏற்படுத்தி ஏழைகளுக்கு உதவவேண்டும். ஏழைகளின் வறுமையும் செல்வரின் தன்னலமும் நீங்கினால் உலகம் நலமுறும்.

2. நாட்டி னடிமையும், நல்குரவும், நீக்கிடலே,
வீட்டைத் தருமே விரும்பு.

நாட்டின் = தேசத்தின் - அடிமையும் = அடிமைத்தனமும் - நல் குரவும் = வறுமையும் - நீக்கிடலே = போக்குவதே - வீட்டைத்தருமே = மோட்சத்தைத் தருவதாகும் - விரும்பு = அத்தகைய பணிசெய்ய விரும்பு வாயாக.

அன்னியருக்கும், கொடுங்கோலுக்கும், அதர்மத்திற்கும் நாட்டை அடிமையாகவைத்துக் கொண்டிருப்பது மனித சமாதானத்திற்கு விரோத மானது. தன்து உடலை நோய்க்கு அடிமையாய் வைத்திருப்பது போன்றது. அடிமை நாட்டார் சுதந்திரமின்றி, தமது வாழ்வின் கடமை செய்தலும் அரிதாகும். நாட்டை சுதந்திரமாக்குதல் வீடு பெறுவதற்கு முதல்வழியாகும். வறுமையால்தான் அடிமைத்தனம் பெருகுவதால், வறுமை நீங்கும் பணிகளைச் செய்தல் வேண்டும். குடிசைத் தொழில் கள் (நூற்றல், நெசவு முதலியன), பயிர்த்தொழில் இவ்விரண்டையும் பெருக்க வேண்டும். கிராம நிர்மாணப் பணியே நாட்டுப் பணியிற் சிறந்தது, அதன் மூலம் அடிமை வறுமையகற்றலே அழியா வீட்டைத் தரும்.

3. பேச்சில்லை; மூச்சில்லை; பீடுடனே தான்பிறரில்
பேச்சில் வினையே பெரிது.

பேச்சில்லை = பேசுவதனாலும் காரியமில்லை - மூச்சில்லை = மூச்சடக்குவதனாலும் பெரும்பயனில்லை - பீடுடனே = பெருந் தன்மை யுடனே - தான் பிறர் இல் = தான் மற்றோர் என்ற வேற்றுமையின்றி (சமமாக) - பேச்சில் = வீண் பேச்சில்லாத - வினையே = அருட்பணியே - பெரிது = சிறந்தது.

பேச்சுகளாலும், பிரசங்கங்களாலும், வாதத்தாலும் மட்டும் பெரிய காரியங்கள் நிறைவேறா. மூச்சுப்பிடித்து யோகஞ் செய்வதனாலும்

உலகு முழுதும் உய்யும்படியான பெரும் பயன் விளைந்துவிடாது. இரண்டுமின்றி நமது சக்தியை முற்றிலும் அருட்பணியிலேயே மௌன மாகச் செலவிடுதலே பெரும் பயனைத்தரும். காரியத்திற்கு உதவாத பேச்சும், காசினிக்குதவாத மூச்சும் வீணே. யோகமும் பணியும் ஒன்றிடின் நன்றே. பணியற்ற யோகம் பயனற்ற பேச்சுப் போன்றதே.

**4. தானோவா, நோவிக்காத் தன்வினையா லேசெல்வன்,**
**ஆனோன் மகிழ்வான் அகம்.**

தான் நோவா = தானும் (ஆத்மலாபங் கெட்டு) வருந்தாது - நோவிக்கா = பிறரையும் வருத்தாமல் - தன் வினையாலே = சொந்த முயற்சியினாலே - செல்வன் ஆனோன் = (அருள், பொருளான) செல்வ முற்றவன் - அகம் மகிழ்வான் = மனங் களிப்பான்.

தேவையளவு பொருட் செல்வம் ஒவ்வொருவருக்கும் இன்றி யமையாதது. யோக்கியமான குடிசைத்தொழில், விவசாயம், நூலெழுதல், ஆசிரியத் தொழில் முதலியவற்றால் ஜீவனஞ் செய்யலாம். தன்னறமும் நோவாது, பிறரையும் வருத்தாது, பாபமற்ற வழியில் போதிய செல்வ மடைந்தவனே மனமகிழுவான். இன்னற் செல்வம் இல்லாமற் போகும்.

**5. ஒருண்மை தேர்ந்தே யொழுகும் உறுதியனை**
**ஈருலகு மேத்தும் இசைந்து.**

ஓர் உண்மை = ஒரு உண்மை நெறியை - தேர்ந்தே = நன்றாக அறிந்தே - ஒழுகும் = அதன்படி நடக்கும் - உறுதியனை = வைராக்கிய முள்ளவனை - ஈருலகும் = புவி, விண்ணான இரண்டுலகங்களும் - இசைந்து = விரும்பி - ஏத்தும் = போற்றும்.

ஒவ்வொரு மனிதனும் அறவழியின் ஒரு உண்மையை நன்கு அறிந்து அதையே பயின்று அதன் வழிநடந்து, பிறரையும் நடத்தினால் உலகும் அதனால் இன்பமுற்று வாழ்த்தும். வானுலகும் அவனை வாழ்த்தும். மனிதமரபை சுத்தம், சுதந்திரம், சமத்துவப்படுத்தும் பணிகளே உண்மைப்பணிகள். தான் உண்மையைச் சாதகம் செய்தே உலகிற்குத் தன் ஒழுக்கத்தால் உரைக்கவேண்டும். புத்தரின் வாழ்க்கையை ஆராய்க.

## 4. நல்வினைப் பயன்

1. சொல்லிற் குறைபோலத் தோன்றி நிறைதருமே,
பல்லுயிர் வாழும் பணி.

பல், உயிர், வாழும், பணி = பல ஜீவராசிகள் உய்யும் ஒரு கருமம் - சொல்லில் = புதிதாக உபதேசிக்கும்போது - குறைபோலத் தோன்றி = நிறைவேறாதது போலக் காணப்பட்டு - நிறைதருமே - முடிவில் வெற்றி பயக்கும்.

முதலில் நிறைவேறாததுபோலப் பல துன்பங்களிடையே பொறுமையுடன் சென்று முடிவில் வெற்றி பெறுதல் எல்லா நற்பணிகளுக்கும் இயல்பே. ஏசுநாதர், முகம்மது நபி முதலியோர் நற்பணி செய்ய எத்தனை துயருழன்றனர்! இன்னல் பொறுத்து இன்பமளித்தவரைப் பின்பு உலகு தேவனென வணங்கும். பொதுநலப் பணிக்கு முதலில் இடர் வருவதைக் கண்டு அதைரியப்படாமல் விடாமுயற்சியுடன் செய்தால் வெற்றி நம்மதே.

2. அழுக்காறோ டேயிருள்பே ராசையும் போக்கும்,
இழுக்கில் கருமம் இனிது.

அழுக்காறோடே = பொறாமையுடனே - இருள் = அறியாமை - பேராசை = அதிக ஆசையும் - போக்கும் = நீக்கும் - இழுக்கில் = குற்றமற்ற - கருமம் = வினையே - இனிது = தனக்கும் பிறர்க்கும் நல்லது.

பொறாமை, மடமை, பேராசையால் தூண்டப்பட்ட வினைகள் தனக்கும் பிறருக்குந் துயரே தரும். அவை அறநெறிக்கு மாறானவை. இவற்றைப் போக்கித் தன்னையும் பிறரையும் சுத்தப்படுத்தக்கூடிய சாந்தமான பெதுநலப்பணியைப் புரிதல் வேண்டும்.

3. நல்வேலை யேசூழ நாளு மிருப்பாயேல்,
பொல்லா வினையெல்லாம் போம்.

நல்வேலையே சூழ = (உனக்கும் பிறர்க்கும்) இன்பமான பணியே சுற்றியிருக்க - நாளும் இருப்பாயேல் = நாள் முழுதும் இருந்தால் - பொல்லா வினையெல்லாம், போம் = உன் வாழ்க்கையைக் கெடுக்கும் தீயகாரியங்கள் அனைத்துங் கெடும்.

நமது நினைவும், செயலும் நல்லதைச் செய்தால், எண்ண வுஞ் செய்யவுங் காலமின்றி, தீதெல்லாம் ஒழியும். தீதைப் போக்கச் செய்யதே செய்வாய். மனக் குதிரையை நற்பணி வழியிற் செலுத்திப் பழக்கவேண்டும்.

4. வினைத்தூய தன்மை விளைவிக்கும் வாய்மை
நனிச்செல்வம் வாழ்க்கை நலம்.

வினை, தூய, தன்மை = சுத்தமான காரியத்தையே நாடும் இயற்கை - வாய்மை = சத்தியத்தையும் - நனிச் செல்வம் = நிறைந்த நல்ல அருட்செல்வத்தையும் - வாழ்க்கை நலம் = நமது வாழ்வின் வினை நிறைவேறும் பயனையும் - விளைவிக்கும் = உண்டாக்கும்.

இயற்கையாகவே பரிசுத்தமான காரியங்களை நாட வேண் டும். அத்தன்மையோர் தத்துவமறிவர். அருட் செல்வம் பெறுவர். வாழ்க்கைப் பயனடைவர். எத்தகையின்பமும் சுத்தத்திலுள்ளது. மனோ வாக்குக் காய சுத்தமே அனைவர்க்கும் அறநெறி, அத்தனைக் காணச் சுத்தமே சுடராம். அவனைக் கண்டோர் அருளைக்காண்பர்.

5. காலை யெழுந்து கருமந் தொழுதிடுமச்
சீலருட் சேருந் திரு.

காலை எழுந்து = அதிகாலையில் துயில் விட்டெழுந்து - கருமம் = கருமானுட்டானங்களை - தொழுதிடும் = வணங்கிச் செய் திடும் - அச்சீலருள் = அந்தத் தூயரிடம் - திரு, சேரும் = திருமகள் சேருவாள்.

காலை 4 - மணிக்கெழுந்து, பல்விளக்கி, தியானஞ்செய்து, 10 விழுங்கு தண்ணீரருந்தி, சிறிது தூரம் நடந்து, குடலை சுத்தி செய்து கொண்டுவந்து, கடவுளைத் தோத்திரஞ் செய்து, பிறகு நன்றாகத் தேய்த்து தோய்த்துக் குளிக்கவும். சூரியன் முன்னே பத்மாஸனமிருந்து தியானம் செய்க. பின்பு சாதனவியலில் ''வழிபாடு, வாழ்த்து'' என்ற அதிகாரங் களை தியானபூர்வமாகச் சொல்லித் தொழுதெழுக. அதன்பிறகு நூல் நூற்கவும். பிறகு தத்தமது சொந்தப் பணிகளை நாடிச் செல்லலாம். அதிகாலையுண்டி அத்தனையும் நோயாம். 9- மணிக்குமேல் உண்ண லாம். இப்படியே மாலை நாலுமணிமுதல் கடமைகளாற்றவேண்டும். மாலை 6 - மணிக்குமேல் ஒன்றும் அருந்தக்கூடாது. பசிக்கொரு தொழிலைச் செய்யும் நேரந் தவிர மீதியை சுத்த சாதகத்திலேயே கழிக்கவும்.

## 5. கடமை

1. தன்றன் வினையாற்றித் தான்பிறரை யெள்ளாத
வுன்னத வாழ்வை யுறு.

தன்தன் = அவனவனுக்கு ஏற்பட்ட - வினை ஆற்றி = காரியத்தைச் செய்து - தான் பிறரை எள்ளாத = தான் மற்றவரை இகழாத - உன்னத = பெருமையான - வாழ்வை = வாழ்க்கையை - உறு = பொருந்துவாயாக.

தன் வாழ்வின் வினையை ஆராய்ந்து செய்து, பிறரிடம் குற்றங்கண்டிகழாத தன்மை மிகவும் சீரியது. பிறரை இகழுவதில் செல விடுங் காலத்தைத் தன் பணிக்குப் பயன்படுத்தி வெற்றி பெறக்கூடும். அயலாரை யிகழாமல் அன்பினைச் செய்க.

2. ஊனுடைக்கே நாளை யுதவாமல், உண்மையாம்
மாண்சேவைக் கீந்தே மகிழ்.

ஊண், உடைக்கே, = உண்ணவும் உடுக்கவுமே - நாளை = ஆயுளை - உதவாமல் = கழிக்காமல் - உண்மையாம் = சத்தியத்தை நிலை நாட்டும் - மாண் சேவைக்கு = பெருமையுள்ள பணிக்கு - ஈந்தே = செலவழித்தே - மகிழ் = களிப்புறுவாயாக.

உணவுடையைத் தூயவழியில் ஈட்டியதுபோக மீதி நேரத்தை சத்திய நெறியில் நல்ல அருட்பணியில் கழித்தால் வாழ்க்கை பரிசுத்த மாகிப் பேரின்பமடையலாம். உண்மைத் தொண்டு ஒவ்வொருவர் கடனுமாகும்.

3. விட்ட கடமையை வெற்றியுடன் செய்யபிறப்
புற்றுதுன் றன்வினையை யுன்.

விட்ட கடமையை = (சென்ற பிறப்பில்) செய்யாமல் விடுத்த கடனை - வெற்றியுடன் செய்ய = வெற்றியாகும்படி முற்றுவிக்க - பிறப்பு உற்றது = மறுபிறப்பு வந்தது - உன்றன் வினையை = உன் வாழ்க்கை வினையை - உன் = எண்ணுவாயாக.

வினைக்குறை நிறைவேறவே மறுபிறப்பு வருகிறது. ஆதலின் அவ்வினை என்னவென்றெண்ணி நிறைவேற்றுவதே வாழ்வின் முதற் கடனாகும்.

4. தன்றன் னளவூ ணுடைக்குத் தருதொழிலைக்
கொண்டநல் வாழ்வைக் குறி.

தன்றன்... தொழிலைக் கொண்ட = தந்தந் தேவையளவு உணவுடையைத் தரக்கூடிய முயற்சியுள்ள, - நல்வாழ்வைக் குறி = பரிசுத்தமான வாழ்க்கையைக் குறித்துப் பழகு.

உடையுணவிற்குச் சுதந்திரமாகத் தரும் ஒரு முயற்சி ஒவ்வொரு வருக்கும் இருப்பது கடமை. அத்தொழில் பரோபகாரமாகவும் இருந்து நமது வாழ்வை சுத்தப்படுத்தவும் வேண்டும். உணவுடைச் சுயேச்சையின் முதன்மையை வற்புறுத்தவே இக்கருத்து மீண்டும் மீண்டும் புகட்டப்படுகிறது.

5. செல்வ முனிந்துஞ் சிறைபுக்குஞ் சீர்மையுடன்
நல்லோர் உழைப்பர் நயந்து.

செல்வம் முனிந்தும் = தமது பொருளை நீத்தும் - சிறை புக்கும் = சிறை வாசஞ் செய்தும் - சீர்மையுடன் = பெருநோக்குடன் - நல்லோர் = (பிறர் நலத்தை நாடும்) நல்லவர் - நயந்து = பரிவுடன் - உழைப்பர் = (மக்கள் இன்பமுற) உழைப்பார்கள்.

பிறர் நலங்கருதியோர் தம் நலம்பாரார். ஒரு நாட்டின் விடுதலைக்காக உழைக்கப்புகும் வீரர், செல்வமிழந்தாலும், சிறையுழன்றாலும், உயிரையே இழக்கும்படி நேர்ந்தாலும் அஞ்சாது உழைப்பர். பலர் உய்யத் தாம் வருந்தும் பெருமையைப் பண்புடனெண்ணித் தம் பணி செய்வர். உண்மைக்காக உலகெலாமிழந்தாலுஞ் சிறிய தியாகமே என்று அவர் கருதுவர். லோகமானியர், தேசபந்து இவ்விருவர் வாழ்வும் இதற்கு உதாரணம்.

**அறநூல், தொண்டியல் முற்றிற்று.**

----------

# 6. ஒழுக்கவியல்

அருட்தொண்டு செய்பவர் துணையான நல்லொழுக்கங்களை இவ்வியல் கூறும். மனித மரபு பொதுவாக நின்று பூரணமடைய இவ் வியல் வழிகாட்டும். நற்பழக்கங்கள், அன்பு, இன்சொல், இன்னாத செய்யாமை, தீமை விலக்கல், சீர்மை முதலியவற்றைக் குறித்து விரித்து, அவற்றைப் பயிலத் தூண்டும் இவ்வியலை வாழ்வில் அமைத்து நல்லொழுக்கமுறுக.

## 1. நற்பழக்கம்

1. தெய்வ மிகழற்க; தேவரெதிர் சொல்லற்க;
பொய்புக லற்க; புகழ்.

தெய்வம் இகழற்க = எம்மதத்தார் நம்பி வணங்குங் கடவுளை யும் பழிக்காதே - தேவர் எதிர், சொல்லற்க = கடவுட்டன்மை வாய்ந்த பெரியோரை எதிர்த்துப் பேசி வாதாடாதே - பொய், புகழ், புகலற்க = பொய்யையும், தற்புகழையும் சொல்லாதே.

கடவுள் ஒருவர் எப்படி யெண்ணினும் அப்படியருள்வார். ஒவ்வொருவரும் நம்பியபடியே தொழுதல் நலமே. எவ்வகை வணங் கினும் உய்வகையாகும். சுத்தநிலையடைந்தவர் தேவர். அவர் சொல் அமுதம். அதை வாதாடாமல் வணங்கிப் பயில்க. பொய்யும், வெளிப் பகட்டும், தற்புகழ்ச்சியும் செருக்கும் தவிர்ப்பாயாக. குற்றமுணர்ந்து சுத்தமுறுக.

2. செய்த, செயவுன்னுஞ் செயலைத் துயில்விழிமுன்
எய்துமே யெண்ணும் இயல்பு.

துயில் முன், செய்த = உறங்குவதற்கு முன்னே தான் அன்று செய்த செயல்களையும் - விழிமுன், செயவுன்னும் = காலையில் எழுந்திருப்பதற்கு முன்னேயே, அன்று முடிக்க நினைக்கும் - செயலை = நல்ல காரியங்களை - எண்ணும் இயல்பு = எண்ணிப் பார்க்கும் இயற்கை யுள்ளோன் - எய்துமே = அவ்வினையின் நிறைவேற்றத்தை யடைவான்.

இரவில் உறங்குவதன் முன்னே தான் அன்று செய்தவற்றை எண்ணிப் பார்க்க வேண்டும். காலை விழிக்குமுன் அன்று என்ன செய்ய வேண்டுவதென்று எண்ணிப்பார்த்துத் தன் வினைசெய்ய உறுதியுடன் எழுந்தால் நாள் வீணாகாமல் ''நல்வேலையே சூழ'' நிற்கலாம்.

3. **உறங்குமுன் குற்ற முணர்ந்தே, ஊறற்ற,**
**இரங்குமனத் தோடே யெழு.**

உறங்குமுன், குற்றம், உணர்ந்தே = தூங்குவதற்கு முன்னே, தான் செய்த பிழைகளை நினைத்து வருந்தி - ஊறு அற்ற = குற்றமற்ற - இரங்கு மனத்தோடே எழு = பிழை வருந்தும் பரிவுள்ள மனத்தோடு காலையில் எழுந்திரு.

தூங்குவதற்கு முன்னால் அன்று தான் செய்த பிழைகளை எண்ணிக் கடவுளிடம் மன்னிப்புக் கேட்கவும். துயிலெழும்போது ''இனி அப்பிழையைச் செய்யேன். எல்லாரிடமும் பரிவுடன் நடப்பேன்'' என்றெண்ணி எழுந்து சீர்திருந்த வேண்டும். குற்றம் வருந்திக் குணமுற்றுயர்க.

4. **தாழ்மை, யடக்கமருள், தன்னுதவி நாகரிக**
**வாழ்வு பயக்கும் வகை.**

தாழ்மை = எளிமை, வணக்கம் - அடக்கம் = இடம்பமின்மை, பொறுமை - அருள் = பேரன்பு - தன்னுதவி = நேர்மை, தன் முயற்சி, அடிமையாகாதிருத்தல் - (இவையே) - நாகரிக வாழ்வு = (கண்ணோட்டம், மரியாதை, அன்பும் பொருந்திய) நாகரிகமான வாழ்க்கையை - பயக்கும் வகை = நல்கும் வழியாகும்.

எளிமை, வணக்கம், இடம்பமின்மை, பொறுமை, பேரன்பு, நேர்மை, தன்னுதவி இவையே நாகரிகமான வாழ்விற்கு வழியாகும். சட்டையிலும், விருந்திலும் தேவைகளைப் பெருக்குவதிலும் யந்திரத்திலும் வெளிப்பகட்டிலும் நாகரிகமில்லை. இது பொய் நாகரிகம். இதனால் மனிதன் அயற்பொருளுக்கும், பொறிகளுக்கும் அடிமையாகிறான். உடலை அழகுறுத்தி உயிரை வீணாக்குகிறான். கடவுளறிவைக் கருதாதவனாகிறான். தேவையைச் சுருக்குதலே நாகரிகம். சுயமரியாதையும், சுதந்திரமும், தூய வாழ்வும் நாகரிகத்தின் பயனாகும்.

5. **உலகநடை தேர்ந்தே, உயரறனே செய்வான்,**
**பலகற்றோ னாவானே பார்.**

உலகநடை = உலகின் போக்கை - தேர்ந்தே = அறிந்தே - உயர் அறனே = உயர்ந்த தர்மத்தையே - செய்வான் = செய்பவன் - பல கற்றோன் ஆவானே = பல நூல்களைக் கற்றவனுக்குச் சமானமாவான் - பார் = பார்த்தறிவாயாக.

உலகமே பெரிய புத்தகம். அதன் போக்கிற்குத் தக்கபடி தன் வாழ்வை நலப்படுத்திக் கொண்டு, உயர்ந்த அறநெறியில் நடப்பவன் வேறு புத்தகப் படிப்பைத் தேடவேண்டியதில்லை. அவன் அனுபோகமே பலருக்கு அறிவூட்டும். சிவாஜியின் வாழ்வை நோக்குக. பாரை யறிந்தோன் பன்னூற் புலவன்.

## 2. அன்பு, இன்சொல்

1. **அன்பின் வடிவேயாம் ஆன்மா; அதுகாட்டின்,**
**வன்பகையும் நட்பாய் வரும்.**

ஆன்மா = ஜீவன் - அன்பின் வடிவேயாம் = அன்புருவேயாகும் - அது காட்டின் = அவ்வன்பையே காட்டினால் - வன்பகையும் = வலிய விரோதமும் - நட்பாய் = நேசமாகி - வரும் = நம்மிடம் வரும்.

அன்பே ஆன்மா, சிவம், கடவுள் எல்லாம். அன்பே கவர்ச்சி. அன்பால் ஆன்மா உலகெலாம் பரவுகிறது. தீய விலங்குகளும் அன்பால் அடங்கும். பகையும் நேசமாகும். அன்பே கடவுள், அன்பே இன்பம்.

2. **அன்பெண்ணம் ஏற்ற மளிக்குமே; தீக்கோப**
**வெண்ணமே யாக்கும் இகல்.**

அன்பெண்ணம் = அனைவருக்கும் அன்பு செயும் நினைப்பு - ஏற்றம் அளிக்குமே = உயர்வையே தரும் - தீ, கோப எண்ணமே = கொடிய சினத்தாலாகிய எண்ணமே - இகல் ஆக்கும் = பகையை உண்டாக்கும்.

எல்லாரிடமும் அன்பாயிருந்தால் எல்லார் அன்பையும் பெற்று உயர்ந்த வாழ்வெய்தும். எண்ணப்படியே மனிதனாதலின், அன்பை எண்ணினோன் அன்பேயாகி அன்பே யடைவான். மனத்தில் கெட்ட எண்ணங்கொண்டு பிறர்மேற் சினந்து, அவரைக் கெடுத் தலையே எண்ணுவோன் பிறர் பகையையே அடைவான். இன்பமுந் துன்பமும் எண்ணியாங் கெய்தும்.

3. **இன்சொல்லின் உண்டோ, இயம்பின், இணங்காரின்**
**வன்சொல்லை மாற்றும் மருந்து.**

இயம்பின் = (ஆராய்ந்து) சொல்லுமிடத்து - இணங்காரின் = பகைவரின் - வன்சொல்லை = கடுஞ்சொல்லை - மாற்றும் = திருத்தும் -

மருந்து = மாற்று - இன் சொல்லின் = அன்பான சொற்களைத் தவிர - உண்டோ = வேறுள்ளதோ? (இல்லை).

கடுமையை மாற்ற இனிமையே வல்லது. இன்சொல்லாலே பகைவரும் இணங்குவர். இன்சொல்லாகும் வன்சொல் மருந்து.

4. கன்மீது கூர்செய்யுங் கத்திபோல், வன்சொல்லில்
இன்சொல்லைக் கூர்செய் இனிது.

கன்மீது = சாணைக்கல்லின் மேல் தீட்டவே - கூர் செய்யும் = கூராகும் - கத்திபோல் = வாளைப்போல - வன்சொல்லில் = பிறர் நம் மீது பாய்ச்சும் கடுஞ்சொல்லான கல் மீது - இன்சொல்லை = இன் சொல் திறத்தை - இனிது கூர் செய் = நன்கு கூராக்கு.

கல்லில் தீட்டினால் கத்தி கூராகும். வன்சொல்லைப் பொறுக்க பொறுக்க இன்சொல் கூராகும். இன்சொல் திறமை வன்சொற் பொறுத்தல்.

5. விருப்பினிய சொல்லேயாம் வெம்பகைவன் கோப
நெருப்பை யவித்திடுநன் னீர்.

வெம் பகைவன் = தீய விரோதியின் - கோப நெருப்பை = சினமென்னுந் தீயை - அவித்திடும், நல் நீர் = அணைக்கக் கூடிய நல்ல தண்ணீர் = விருப்பு இனிய சொல்லேயாம் = அனைவர் விருப்பிற்கும் இன்பமான இன்சொல்லே யாகும்.

தீயை நீர் அணைக்கும். பகைவன் சினத்தை இன்சொல்லே அவிக்கும். சாந்தமாக எதிரியின் மீது நல்லெண்ணத்துடன் இன்சொல் கூறி நீதியுரைத்தால் பகைவனும் சீற்றமொழிந்து திருந்துவான். சீற்ற மவிப்பது செந்தண் மொழியே.

## 3. இன்னாத செய்யாமை

1. இன்னாத செய்யாமை யென்னும் ஒழுக்கத்தில்,
மன்னுயிர்க் கெல்லாம் மறை.

இன்னாத, செய்யாமை என்னும் = ஒருவருக்குந் தீங்கு செய் யாமை, அஹிம்ஸை என்னும் - ஒழுக்கத்தில் = நடத்தையில் - மன் னுயிர்க்கெல்லாம் = உலகில் நிலைபெற்ற ஜீவராசிகளுக்கெல்லாம் - மறை = வேதநெறி யுள்ளது.

கொல்லாமையே வேதத்தின் கொள்கை. அஹிம்ஸா தர்மமே உலகத்திற்குச் சாந்தந்தரும். அது பகையை அன்பாகவும், போரைச் சாந்தமாகவும், பொய்யை உண்மையாகவுந் திருத்தி நலம் பயக்கும். மிருக பலத்தை அதுவே ஒடுக்க வல்லது. அப்பர், பிரகலாதன், காந்தி முதலியோர் அஹிம்ஸையாலேயே அறங்காத்தனர். அன்பு, பொறுமை, அடக்கம், தியாகம், இரக்கம், உதவி, அருள் முதலிய பல நற்குணங்கள் அஹிம்ஸையுடன் வளரும். கேடிழையாமையே பீடுறுமறமாம்.

2. இக்கணமோ, பின்னோ, இறக்குமுடலால்மாபோல்,
துக்கம் விளையேல் துணிந்து.

இக்கணமோ = இப்போதோ - பின்னோ = இன்னுஞ் சிறிதுகாலஞ் சென்றோ - இறக்கும் உடலால் = சாகப்போகும் தேகத்தால் (மிருக பலத்தால்) - துணிந்து = வேண்டுமென்றே - துக்கம், விளையேல் = தீங்கு செய்யாதே.

இவ்வுடல் நிலையற்றது. இதன் மேலுள்ள துராசையால் தான் பிறருக்குத் தீங்கு செய்கிறோம். தீங்கு செய்பவன் மனித மிருகமே யாவான். பகுத்தறிவுடன் தம்முயிர்போல் எவ்வுயிரும் என்றெண்ணி னால் பிறரைப் புண்படுத்த மாட்டான். நிலையறுமுடலால் நலனல செய்யேல்.

3. மக்கட் குணமாம் மனத்தி லிரக்கமிலா
மக்களும் மாக்கள் மதி.

மக்கள் குணமாம் = மனிதத் தன்மையான - இரக்கம் = ஜீவகாருண்யம் - மனத்தில் இலா மக்களும் = நெஞ்சில் இல்லாத மனிதரும் - மாக்கள் மதி = மிருகங்களென்று எண்ணுவாயாக.

பகுத்தறிவு, அன்பு, ஈகை, பரோபகாரம் முதலியவை இரக்க மாகும். இரக்கம் மனிதனுக்கு இயற்கையானது. விலங்குகள் நலந் தீதறியா. அத்தகைய மக்களும் விலங்கேயாவர். இரக்கம் இருப்பின் இகல் வினை யில்லை. போர், கொலை, களவு, பேராசை எல்லாம் ஒழியும்.

4. கதறவே கொன்றதனைக் கைதொட்டார்க் கன்போ,
மதுவுண்பார்க் கேதே மதி.

கதறவே கொன்று = கத்தக் கத்தக் (கருணையின்றி) கொலை செய்து - அதனை = அக்கொலையுண்ட உடலை - கைதொட்டார்க்கு =

புசிப்பவருக்கும் - அன்போ = அன்புண்டோ - மதுவுண்பார்க்கு = கள்ளுண்பவருக்கு - மதி = நிலையான புத்தி - ஏதே = ஏது?

''யான் ஒரு தீங்குஞ் செய்யவில்லையே, என்னை ஏன் கொல்லுகிறீர் ஐயோ!!'' என்று கதறுவதைக் கண்டும் இரங்காமல் பிராணிகளைக் கொலைசெய்து அந்த மாமிசத்தை வன்மனத்துடன் கடித்துண்போருக்கு அன்பும் ஜீவகாருண்யமும் பிறக்காது. மதுபானஞ் செய்பவர் உறுதியான அறிவின்றி மனந்தடுமாறுவர். கொல்வதும் கொன்றதை உண்பதும், மது உண்ணலும் நமது அன்பையும் புத்தியையும் கெடுக்கும். ஊன்மது வெண்ணா துயிர்க்கருள் பேணு.

5. கூற்றும் இடுகாடுங் கூடிய மாக்களே
நாற்றவுட லுண்ணும் நரர்.

நாற்ற... நரர், = துர்நாற்றம் வீசும் பிணத்தை (மாமிசத்தை)ப் புசிக்கும் மனிதர் - கூற்றும் = எமனும் - இடுகாடும் = சுடுகாடும் - கூடிய = சேர்ந்த - மாக்களே = விலங்குகளேயாவர்.

புலாலுண்பவர் உயிர் பிரிந்த பிணந்தின்னிகளே. அவர்கள் பிராணிகளின் உயிரை மாய்த்தலால் எமனைப் போல்வர். தமது வயிற்றில் பிராணிகளை உண்டு புதைப்பதால் அவர் வயிறு சுடுகாடாகும். புலாலுண்பது மனிதவியற்கையல்ல. புலாலுண்ணும் விலங்குகள் கூர்ந்த பல், நகங்களுடன் அமைந்துள்ளன. குரங்கு, யானை முதலியன அப்படியல்ல. மனிதன் அமைப்பில் தாவர உணவுண்பவனே. காய் கனி, கிழங்கு தானியங்களே மனிதனுக்கு நல்லுணவாகும். மரக்கறி உணவே மனிதர் உணவாம்.

## 4. தீயன விலக்கல்

1. தசைகாமஞ் சூதுகொலை தாகளவு தம்மால்
வசைபாவ மெல்லாம் வரும்.

தசை = புலால் - காமம் = ஆசைநோய் - சூது = சூதாடல் - கொலை = கொல்லல் - தா = தீங்கு - களவு = திருட்டு - தம்மால் = இவற்றால் - வசை, பாவம் எல்லாம் வரும் = (இவ்வுலகில்) பழியும், (மறுமையைக் கெடுக்கும்) பாவமும் வந்து சேரும்.

ஊனருந்தல், காமநோய், சூதாடல், கொலை, தீங்கு செய்தல், திருடல் முதலிய ஆறு குற்றங்களால் இவ்வுலகில் பழியும், மறுவுல

கின்பங் கெடுக்கும், பாவமும் வரும். பழிச்செயலொழித்து விழுச் செயல் புரிக.

2. புறங்கூறி வாழ்ந்திடுமப் புல்லரையே யோர்நாள்,
இருமருங்குஞ் சூழும் இகல்.

புறங்கூறி = கோட் சொல்லி - வாழ்ந்திடும் = பிழைக்கும் - அப்புல்லரையே = அந்த அற்பத்தனத்தரையே - ஓர் நாள் = ஏதாயினும் ஒரு காலத்தில் - இருமருங்கும் = இருபுறமும் - இகல் = பகை - சூழும் = வளைக்கும்.

கோட் சொல்லல் மிகவும் அற்ப புத்தியுடைமையாகும். பொய், பொறாமை, வஞ்சகம், பகை எல்லாம் அவனிடம் வளரும். புறங்கூற் றாலே போர் வினை பெருகும். புறங்கூற்றாற் பகை பெருகிய இருவரும் ஒருக்கால் சேர நேரும். அப்போது இருவரும் அவனைப் பகைப்பர். புறங்கூற்றொழியின் அறஞ்சீர் விளங்கும்.

3. தற்பெருமை சொல்லியே, தற்புன்மை காட்டிடுவோன்,
எற்பெருமை கண்டான் இயம்பு.

தன் பெருமை = தற்புகழ்ச்சி - சொல்லியே = பேசியே - தன் புன்மை = தனது அற்பத்தனத்தை - காட்டிடுவோன் = வெளிப்படுத்துவோன் - எற்பெருமை, கண்டான் = இந்தத் தற்புகழ்ச்சியில் என்ன பலன் அடைந்தான் - இயம்பு = சொல்லுவாயாக.

தற்புகழ்ச்சி செய்வோன் பிறரைக் கீழாகவே மதிக்கிறான். பிறர் வெறுப்பிற்குள்ளாகிறான். ''நான்'' என்னுஞ் செருக்கால் அழி கிறான். இறைவனின் கருவியேதான் என்பதை மறக்கிறான். நிலை யற்ற சிறு செயலைப் பெரிதாகப் பேசித் தன் சிறுமையைக் காட்டு கிறான். தற்புகழெல்லாந்தன்னிழிவாகும்.

4. ஊமைபோ லத்தோன்றி யுள்ளக் கவடுடையான்,
தீமை தருபுலியே தேர்.

ஊமைபோலத் தோன்றி = வெளிக்கு மௌனமாயிருந்து - உள்ளக்கவடுடையான் = மனதில் வஞ்சகமெண்ணுவோன் - தீமை, தரும், புலியே, தேர் = கெடுதலைச் செய்யும் புலியே யாவான் என்றறிக.

புலி மெதுவாகப் பதுங்கி, பேசாமல், சமயம் வந்தபோது தனது இரையின் மீது பாய்ந்து கொல்லும். பொற்காப்பைக் கொண்டு, சாந்தம் பேசி, பார்ப்பானைத் தந்திரமாகக் கொன்ற புலிக் கதையும் இங்கு எடுத்துக்காட்டாகும். அப்புலியைப் போன்று வெளியில் சாது வாகத் தோன்றி, மனத்தில் வஞ்சகமுடையோர் நட்பு, பெருந் தீங் கிழைக்கும். வஞ்சக வூமை நஞ்சினுங் கொடியன்.

5. **கொள்ளலே தீதாம்; கொடுத்தலே மாண்பாகும்;**
**எள்ளல் இழிவென்றே யெண்.**

கொள்ளலே = (வேலைசெய்யாது பிறரிடம் யாசித்து) வாங்குதலே - தீதாம் = கெட்ட பழக்கமாகும் - கொடுத்தலே = ஈதலே - மாண்பாகும் = பெருமையாகும் - எள்ளல் = பிறரை இகழுதல் - இழிவு என்றே எண் = (சுயமரியாதைக்கு) தாழ்வாகும் என்பதை நினை.

பிறர்பொருளை இரந்தோ வஞ்சித்தோ வாங்குதல் தன் சுய மரியாதைக்குத் தீங்கிழைக்கும். வேலை செய்யாது வாங்குதல் எதுவும் இழிவு. பிறர் உழைப்பாலே பிழைத்தல் பிழையாம். தன் உடல் பொருள் ஆவியை மக்கள் நலத்தின் பொருட்டுக் கொடுத்தல் பெருமை யானது. பிறரை இகழுவது அற்பத்தனமானது. அது அவரிடமிருக்கும் கடவுளை இகழுவதாகும். இகழ விகழப் புகழும் அகலும்.

## 5. சீர்மை

1. **மாற்றா னிடும்பையை மன்னித்தே தான்மறக்குஞ்**
**சீற்றமிலான் சீரியனே தேர்.**

மாற்றான் = பகைவன் செய்யும் - இடும்பையை = துன்பத்தை - மன்னித்தே தான் மறக்கும் = மன்னித்து மறந்துவிடும் - சீற்றமிலான் = சினமற்றவன் - சீரியனே தேர் = பெரியோன் என்பதை யறிவாயாக.

அறக் கொள்கையினின்று மாறுபட்டவன் மாற்றான். மாறுபா டுடையவர் தனக்குச் செய்யும் இன்னலைப் பொறுத்து, தன் உண்மையை விடாது நிலைநிறுத்தும் சீரியன் எதிரியையுந் தன்வழி திருப்புகிறான். அறியாமையால் செய்த குற்றத்தை அறிவுடையோர் பொறுத்து மன்னிப்பர். முகம்மது நபி தனக்கு இடர் செய்த கோரேஷியரை மன்னித்ததை எண்ணுக. என்னவ ரென்றே யின்னல் மறக்க.

2. தன்பிழை போக்கிப் பிறர்பிழை தாங்குவனை,
அன்பும் அடிவணங்கு மாம்.

தன் பிழை போக்கி = தன் குற்றங் களைந்து - பிறர் பிழை தாங்குவனை = மற்றோர் செய்யுங் குற்றங்களைப் பொறுப்பவனை - அன்பும் அடிவணங்குமாம் = அன்புக் குணமும் வணங்கி நிற்றல் முடியும்.

தன் பிழைகளை யறிந்து களைந்தால் தூய்மை பிறக்கிறது. பிறர் அறியாமையாற் செய்யுங் குற்றங்களைத் தாங்கும் சகிப்பு ஏற்படுகிறது. உலகின் அன்பையும் ஆதரவையும் முடிவில் அத்தகையோன் அடைகிறான். ஆத்ம வளர்ச்சி பெறுகிறான். கடவுளின் அன்பும் அவனைச் சேரும். திருந்திப் பொறுத்துச் சிறந்து விளங்கு.

3. கொல்லேன், விழையேன், குடிகளவுஞ் சூதெண்ணேன்,
பொய்யேன்யான் என்றுறுதி போற்று.

யான் கொல்லேன் = நான் கொலை செய்ய மாட்டேன் - விழையேன் = காமுறேன் - குடி, களவு, சூது எண்ணேன் = கள்ளையும், திருட்டையும், சூதாடலையும் (கனவிலும்) நினைக்க மாட்டேன் - பொய்யேன் = (மனச்சாட்சிக்கு) பொய்யாக நடக்கமாட்டேன் - என்று உறுதி போற்று = என்று விரதம் பூண்டு உறுதியாகப் பேணு.

கொலை, காமம், கள், களவு, சூது முதலிய பஞ்சமா பாதகங்களைச் செய்வதொழியும் உறுதி பூணுக. சுத்த நிலைக்கு அவ்வுறுதியே வழிகாட்டி. அருள்நலம் வேண்டின் ஐம்பிழை யொழிக.

4. சீரியரின் கேண்மை சிறிதுதாங் கொண்டாலும்,
பேரியல் நற்பயனாம் பேறு.

சீரியரின் கேண்மை = பெரியோர் நட்பை - சிறிது, தாம், கொண்டாலும் = சிறிதளவே வைத்துக்கொண்டாலும் - பேரியல் நல்பயனாம் = மதிப்பு மிகுந்த நற்பயனுண்டாகும் - பேறு = பெருமை கிடைக்கும்.

பெரியோரிடம் சிறிது பழகினும், நல்லொழுக்கமே வளரும். அவ்வொழுக்கம் நமது குற்றம்போக்கி சுத்தமாக்கும். பெரியோரைக் காண்பதும், கேட்பதும், பணிவதும் நமது வாழ்வைத் தூய்மையாக்கிப் பேரின்பத்திற்கு வழிகாட்டும். [illegible] புறுத்தும்.

5. வேறு வறியோர்க்கும் வேண்டுதுணை தாமேகிச்
சீரியரே செய்வார் சிறந்து.

வேறு = பிற - வறியோர்க்கும் = தாழ்ந்தவருக்கும் - வேண்டு துணை = தேவையான உதவியை - தாம் ஏகி = தாமே சென்று - சிறந்து = உயர்ந்த நோக்கத்துடன் - செய்வார் = செய்பவர் - சீரியரே = பெரியோரே யாவர்.

அறிவு, ஒழுக்கங்களில் தாழ்ந்தவரேனும் அவருக்கும் தாமே சென்று பெரியோர் உதவுவர். பிறர் துயர் தமதெனப் பேணுவர் பெரியோர். பிறருக்குதவும் பேறு கிடைத்ததேயெனச் சிறந்து நினைப்பர். வந்திக்கு அரனும் மண் சுமந்துழைத்தா னன்றோ!

**அறநூல், ஒழுக்கவியல் முற்றிற்று.**

-------

# 7. கல்வியியல்

ஒழுக்கத்துடன் கல்வியும் விளங்க வேண்டும். கருத்தரித் தன்றே கல்வி தொடங்கும். தாயின் வாழ்வு குழந்தையைப் புல்லு கிறது. தன் சுற்றத்தினின்று ஐம்புலன்கள் வழியாகவும் குழந்தை பல அனுபவங்களை யறிகின்றது. காண்பதும், கேட்பதும் கல்வி புகட்டு கின்றன. கல்வி புத்தகப் படிப்பு மட்டுமல்ல. நல்லறிவு, ஒழுக்கம், ஆற்றல், தொழில்திறன், சுவை நுகர்ச்சி இவ்வைந்தும் கல்வியின் ஐயுயிர்களாகும். உண்மைக்கல்வி, போலிக்கல்வி, ஆசானிடம் சீடன், கல்வி கற்கும் வகை, கல்வியை வாழ்க்கையிற் பயன்படுத்தும் விதம், பிரமச்சரியத்தின் இன்றியமையாமை முதலியவற்றைக் கல்வியியல் விரித்துரைக்கிறது.

## 1. உண்மைக்கல்வி

1. அறிவொழுக் கந்தொழிலோ டாற்றற் சுவைசேர்
அறிவே யறிவுள் ளணி.

அறிவு = நூலறிவு - ஒழுக்கம் = நல்லொழுக்கம் - தொழிலோடு = (ஜீவனத்திற்குத் தக்க) தொழிற் பயிற்சியுடன் - ஆற்றல் = சக்தியும் - சுவை = ரஸஞானமும் - சேர் = சேர்ந்த - அறிவே = கல்வியறிவே - அறிவுள் = உண்மை யான ஞானத்தில் - அணி = உயர்ந்ததாகும்.

மூளையைப் பெருக்குவதும், தூயவொழுக்கமும், கைத்தொழி லறிவும், தேகபலமும், சித்திரம் பாட்டு முதலிய சுவையறிவும் கூடியதே கல்வியாகும். நூலறிவு மட்டும் ''படிப்பு'' எனப்படும். மனிதன் சுத்த நிலை அடைவதே கல்வியின் நோக்கம். தன் நாட்டிற்கு ஏற்ற கல்வி முறை வேண்டும். சமூக ஊழியத்திற்குத் திறமை பெறுவதே கல்விப் பயனாம். மேற்படி ஐந்து அறிவையும் பெற்றால்தான் பூரணமான சமூக ஊழியனாக முடியும். ஐயறிவமைதலே கல்விக்கழகு.

2. அறமொழியே யெண்ணில்லா தாய்ந்தென்? அதன்வாய்,
சினமொழித்து நிற்றல் சிறப்பு.

எண்ணில்லாது = கணக்கற்று - அறமொழியே = தர்மசாஸ்திரத்தி லுள்ள கோட்பாட்டை - ஆய்ந்தென் = ஆராய்ந்தும் பயனென்ன? - அதன் வாய் = அதன் வழியில் - சினமொழித்து = கோபத்தை விடுத்து - நிற்றல் = ஒழுகல் - சிறப்பு = பெருமையாகும்.

அறநூற் கோட்பாடுகளைக் கற்பது மட்டும் பயனல்ல. அதன்படி சினத்தையடக்கி யொழுகலே மேலானது. அறிவாளிக்குச் சினமின்மையே அணியாகும். ஆசை, பொறாமை, வெறி, கொலை முதலியவை கோபத்தினால் உண்டாகும் பிழைகள். காய்சின மொழித் தல் கற்றவர்க்கழகு.

3. இராப்பகல் கற்கினும், இல்லையூங் காகிடுமே,
ஆராய்ப்போ ட்ராசைவிடா தாங்கு.

ஆராய்ப்போடு = ஆழ்ந்த அத்யாத்ம ஆராய்ச்சியுடனே - ஆசை விடாதாங்கு = பற்றை ஒழிக்காவிடின் - இராப்பகல் கற்கினும் = இரவும் பகலும் (தீவிரமாக) நூலாராய்ந்தாலும் - ஊங்கு இல்லை ஆகிடுமே = மேன்மை யில்லாததாகும்.

பற்றை யொழிப்பதே அறிவின் பயனாம். நூலறிவு மட்டும் அதற்குப் போதாது. கற்றதை ஆராய்ந்து உண்மையறிந்து, மனத்தை அடக்கித் தன் மயமான கடவுளை அறிய வேண்டும். நில்லாப் பொருளிற் செல்லாதுள்ளம், ஆசையடக்கின் அறவொளி பிறக்கும்.

4. புலனைவென் றோனே புலவனாம்; நூலால்
உலகை மிரட்டுவோன் ஊன்.

புலனை வென்றோனே = ஐம்புலன்களையும் அடக்கினவனே - புலவனாம் = அறிவாளியாவான் - நூலால் = புத்தகங்களை உருப்போட்டு -

உலகை மிரட்டுவோன் = உலகோரைத் திகைக்க வைப்பவன் - ஊன் = (புத்தகஞ்சுமந்த) மாமிசமேயாவான்.

ஐம்பொறி யவித்தோன் அரும் பெரும் புலவன். கல்விக்கு உயிர் மனமடக்கி உண்மையறிதலே. நூலறிவு, கல்வியின் உடல். நூலறிவால் உலகை வியக்கச் செய்து, உள்ளறிவு மலர்ச்சியைக் கருதா தவன் நூல் சுமந்த ஊனேயாவன். நூல்களை மூளையிலேற்றுவதினும், நெஞ்சிலும் வாழ்விலும் புகுத்தலே அறிவு.

5. **இன்னு மினுங்கற்க, எத்தனையோ நூல்களினுள், உண்மையொன் றேயறிதல் ஊங்கு.**

இன்னும்... நூல்களின் உள் = மென்மேலும் படிக்க எத்தனையோ கோடிப் புத்தகங்கள் உள்ளன. அவற்றுள்ளிருக்கும் - உண்மை ஒன்றே = சத்தியமான தத்துவம் ஒன்றுதான் - அறிதல் ஊங்கு = அதைத் தெரிந்து கொள்ளுதல் மிகச்சிறந்தது.

எத்தனையோ புத்தகங்கள்! அத்தனையும் கற்பதற்கு நேர மில்லை. கடவுளறிவே சிறந்த நூல்கள் முயன்று கூறும் உண்மை. தன்மயமான கடவுளை அறியச் சாதகஞ் செய்தலே ஓதலின் பயனாம். பரமஹம்ஸரின் வாழ்வைப் பார்த்தறிக.

## 2. போலிக்கல்வி

1. மெய்யும் அறிவுடனே மேலாம் உறுதிபெறாப் பொய்க்கல்வி யாலென் புகழ்?

அறிவுடனே = புத்தி விசாலத்துடனே - மெய்யும் = உடலும் - உறுதி பெறா = பலமுறாத - பொய்க்கல்வியால் = போலிக் கல்வியால் - புகழ் என் = என்ன பெருமை?

கல்வியறிவைத் தன் சமூகத் தொண்டில் பயன்படுத்த உடல் வலி வேண்டும். உடல் நலங் குன்றினால் உள்ள வலிமையும் குன்றும். தேகப் பயிற்சியால் உடலை உறுதி செய்விப்பது கல்வி முறையின் கடனாகும். தோட்டவேலை, சாரணப் பயிற்சி, பிராணாயாமம், பிரமச் சரியம் முதலியவற்றால் உடலை உறுதி செய்ய வேண்டும். திண்ணுட லுடனே பண்புறுங் கல்வி.

2. அருளில் லகத்துள் அடைபடுநூற் குப்பை,
இருள்வீட் டடசலென் றெண்.

அருள் இல் = ஜீவராசிகளிடம் பேரன்பில்லாத - அகத்துள் = மனத்துள்ளே - அடைபடும் = பொதிந்திருக்கும் - நூற்குப்பை = புத்தக அறிவின் மிகுதி - இருள் வீட்டு அடசல் என்று = இருளடைந்த ஒரு வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கும் அடைசலுக்குச் சமானமென்று - எண் = நினைப்பாயாக.

ஜீவகாருண்யமில்லாதவன் நூலறிவு இருள் வீட்டில் அடைபட்டிருக்கும் சாமான்களுக்குச் சமானமாகும். அவை எத்துணை உயர்ந்தவாயினும் ஒளிரா. உள்ளே செல்பவரைத் தடுக்கி விழும் படியும் செய்யும். அருளில்லாதவன் தன் கல்வியை வாதத்திலும், பொருள் சேர்ப்பதிலுமே செலவழிப்பான். தன் கல்விச் செருக்கால் பலரைத் தாக்குவான். அருண் மனமாகும் அறிவின் விளக்கே.

3. மனப்பாடஞ் செய்ததில் மாண்பில்லை; உள்ளக்
குணத்தாலே மாண்பைக் குறி.

மனப்பாடம்... மாண்பில்லை = நூல்களை மனப்பாடஞ் செய்வதில் மட்டும் பெருமையில்லை - உள்ளக் குணத்தாலே = மனதின் தன்மையாலேயே - மாண்பை = ஒருவன் பெருமையை - குறி = அறிவாயாக.

உருப்போட்டு வைப்பதும் போதாது. மனத்தைக் கற்ற வழியில் திருத்தி குணத்தைப் பெருக்குவதே பெருமை. முத்தூய்மைக்குரிய குணங்களையே கல்வியின் பயனாக அடையவேண்டும். மனதை நிறைப்பதினும் மனதைத் திறப்பதே கல்வியாகும். மணம் பெறு கல்வி குணத்தினிற் காணும்.

4. செருக்கில்லாச் செம்மனமே தேறுமுயர் நூலைத்
தருக்கக் கலையோன் சமர்.

செருக்கில்லா = அகந்தையில்லாத - செம்மனமே = நற்குணம் நிறைந்த மனமே - உயர் நூலை = மேலான ஆத்ம வித்தையை - தேறும் = அறியும் - தருக்கக் கலையோன் = வாதம் புரியும் பண்டிதன் - சமர் = வாதமே (அறிவான்).

அகங்காரத்தை யொழித்தலே மனதைச் செம்மைப்படுத்திக் கடவுளுக்கிடமாக்கும் நெறி. ஆத்மஞானத்தை அறிந்து சுத்தநிலை

பெறுங்கல்வியைத் தர்க்கத்தில் செலவழிப்போன் ஆயுள் முழுதும் ஓயா வாதத்திலேயே கழித்து வீணாவான். செருக்கற வடங்கலே தெருட் கிடமாகும்.

5. ஒப்புரவே யோராதான் ஓதிய நூலெல்லாம்,
இப்புவியிற் செல்லாதென் றெண்.

ஒப்புரவே = உலக நடை, பரோபகாரம் முதலியவற்றையே - ஓராதான் = அறியாதவன் - ஓதிய = சொன்ன - நூல் எல்லாம் = படிப் பறிவெல்லாம் - இப்புவியில் செல்லாது என்று எண் = இவ்வுலகில் மதிப்புறாது என்று நினை.

உலக நிலைக்குத் தக்கபடி பரோபகாரஞ் செய்தல் கல்விப் பயனாகும். காலப்போக்கறியாமல், தேசத்திற்குத் தக்க பணியுமில் லாமல், எவ்வளவு கற்றாலும் நூலறிவு விளங்காது. கல்வியறிவால் உலகின் மடமையைப் போக்கத் தொண்டு செய்தல் வேண்டும். காலத் திற்கொவ்வாப் பழைய எண்ணங்களை யொழித்துக் காலத்திற் பயன் படக் கூடிய எண்ணங்களைத் தழுவி நடத்தல் ஒப்புரவாகும். ஞால மறிந்து நூலைப் பயன்செய்.

## 3. ஆசான், சீடன்

1. ஆசான் கொடுத்த வழியா விளக்கொளியே,
காசினிக் காகுமுளக் கண்.

ஆசான் = குரு - கொடுத்த = அளித்த - அழியா = நிலையான - விளக்கொளியே = அறிவுச்சுடரே - காசினிக்கு = உலகிற்கு - உளக்கண் = மனக்கண் - ஆம் = ஆகும்.

பகுத்தறிவால் சீடனுக்குச் சிறந்த ஆத்மஞான மீந்து, மனத்தைத் திறப்பித்து, அதில் பரமாத்மாவைக் கண்டு, அதன்மயமாகவே உலகை யெல்லாங் காணச் செய்வது ஆசிரியன் கடனாகும். இந்த ஆத்ம ஞானமே உலகோருக்கு மனக் கண்ணாகும். அக்கண்ணாற் கண்டால் உலகெல்லாம் தன்மயமாகவும், சின்மயமாகவும் தோன்றி ஆனந்த முண்டாகும். சிறந்த குருவின்றி இத்தகைய ஆத்மஞானம் பெறலரிது. மனக்கண் விளக்கியோன் மாசறு மாசான்.

2. பெற்றோர் உடலீந்தார்; பேரறிவால் ஈந்துயிரைக்
குற்றங் களைந்தான் குரு.

பெற்றோர் = தாய் தந்தையர் - உடல் ஈந்தார் = ஊனுடலை மட்டும் தந்தார்கள் - பேரறிவால் = தனது அறிவு விரிவால் - உயிரை ஈந்து = ஆவியைப் போன்ற கல்வியைத் தந்து - குரு குற்றம் களைந் தான் = குருதேவன் (காமம், வெகுளி மயக்கம் முதலிய) பிழைகளைப் போக்கினான்.

பெற்றோர்கள் குழந்தைகளின் உடலை வளர்க்கிறார்கள். மக்களுக்கு உயிர் போன்ற அறிவை ஆசான் வளர்க்கிறான். ஆத்ம வளர்ச்சிக்குப் பகையான குணங்களை நீக்குகிறான். பெற்றோரினும் ஆசானே மேலானவன். பிள்ளைகளின் வாழ்வைப் பயன்படச் செய் பவன் ஆசானேயாவன். அறிவை ஈந்தோன் அன்னையின் மிக்கோன்.

3. நாடி வணங்கியே, நற்சேர்க்கைத் தொண்டுடனே,
சீடன்மெய் கற்றல் சிறப்பு.

நாடி = குருவிடம் சென்று - வணங்கியே = அவரைப் பணிந்தே - நற்சேர்க்கை = நல்ல சகவாசமும் - தொண்டுடனே = பணிவிடை செய்வதோடும் கூடி - சீடன் = மாணவன் - மெய் கற்றல் = உண்மை யறிவைப் பழகுதல் - சிறப்பு = மேலானது.

குருவைத் தேடியே சீடன் செல்ல வேண்டும். ஆசானைக் கடவுளெனப் பணிதல் வேண்டும். தூய நேயருடனும், தூய சுற்ற முடனும் பழக வேண்டும். குருவின் கட்டளைகளைக் குறித்து நடக்க வேண்டும். இப்படிச் செய்தே மெய்யறிவைக் கற்றல் சிறந்தது. குரு குலவாசஞ் செய்வதால் குருவின் உதாரணமும் தூய வாழ்வும் சீடன் வாழ்விற் பதிகிறது. குருகுலக் கல்வியே சிறந்தது. இயற்கை வனப்புள்ள வனமே சிறந்த இடமாகும். பேச்சு பழக்கம், நினைவு, செயல், உணவு, உறக்கம் முதலியவற்றில் சுத்தமாயிருத்தல் மாணவன் கடமை. மனித சக்தியை தெய்வ சக்தியடையப் பயன்படுத்தல் வேண்டும்.

4. சீர்கடமை நாட்டுச் சிறியோரை யோதுவிப்பான்
ஆருலகில் ஏற்பான் அறி.

நாட்டுச் சிறியோரை = தேசத்திலுள்ள குழந்தைகளை - ஓதுவிப்பான் = கல்வி பயிற்றுவிக்கும் ஆசிரியனே - ஆர், உலகில் =

ஒளி பொருந்திய உலகில் - சீர்கடமை = மேலான கடமையை - ஏற்பான் = பெறுவான் - அறி = தெளிவாயாக.

மாணவரே தேசமனிதராவர். இளைஞரிடமே வருங்காலம் உள்ளது. அவர்களை நல்வழியிற் பழக்கிச் சீரிய ஞானிகளாகவும் வீர ராகவும் செய்வது ஆசாரியனே. எல்லாக் கடமைகளிலும் ஆசிரியத் தொழிலே மிகவும் மேலானது. தேசம் ஆசிரியர் கையிலேயே உள்ளது. நாட்டில் உயர்ந்தோன் நல்லாசானே.

5. அழகுநிறை யாசானுக் கன்புடைமை யீந்தே
பழகிடலே நல்லறிவைப் பண்பு.

அழகு நிறை, ஆசானுக்கு = ஆசிரிய லக்ஷணம் பொருந்திய குருவிற்கு - அன்பு உடமை = உள்ளன்பையும், பொருளையும் - ஈந்தே = கொடுத்தே - நல்லறிவை = சிறந்த ஞானத்தை - பழகிடலே = பயிற்சி செய்வதே - பண்பு = மேலானது.

முத்தூய்மை, விரிந்த அறிவு, அத்யாத்ம ஞானம், மேலான நோக்கம், உலக அறிவு, போதனா சக்தி, இனிய தன்மை, தவவாழ்வு முதலியவை ஆசிரியனுக்கு அழகாகும். முழு மனத்துடன் சீடன் அன்பு செலுத்தித் தன் உடைமையான உடல், பொருள், மனதை அவனுக் கீந்து தன் வாழ்வின் வழிகாட்டியாகும் ஐவகைக் கல்வியைப் பயிலுதல் வேண்டும். அன்புப் பணி செய்தறிவைப் பயில்க.

## 4. கல்வியும், வாழ்க்கைப் பயனும்

1. குற்றங்கள் தோயானே கற்றோன்; குணமில்லான்
கற்றிடினுங் கல்லானே காண்.

குற்றங்கள், தோயானே = (நடத்தையில்) பிழையில்லாதவனே - கற்றோன் = கற்றவனாவான் - குணமில்லான் = நற்குணமில்லாதவன் - கற்றிடினும், கல்லானே, காண் = படித்திருப்பினும் அறியாதவனே யாவான்.

தூயவாழ்வே கற்றதன் பயனாகும். குற்றங்களைந்து குண நிறைவளித்தலே, கல்வியின் நோக்கம். ஆசை, செருக்கு, பொறாமை, மடமை, கொடுந்தொழில் முதலிய குற்றங்களைப் போக்கி முத் தூய்மையுடன் வாழுபவனே அறிவாளி. குற்றமில்லானே கற்றவ னாவான்.

2. கல்வியொடு வாழ்வுநலங் காணிற் கலைமகளுஞ்
செல்வியுஞ் சேருஞ் சிறப்பு.

கல்வியொடு = கல்வியறிவுடனே - வாழ்வுநலம் = (அக்கல்வி நெறிப்படி) யொழுகும், தூயவாழ்வின் மேன்மையும் - காணின் = ஒருவனிடம் காணப்பட்டால் - கலைமகளும் செல்வியும் = நாமகளும், திருமகளும் - சேரும் சிறப்பு = சேர்ந்து அவனிடம் வாழும் பெருமையைப் போலும்.

நல்ல கல்வியும் தூயவாழ்வும் ஒன்று சேர்ந்து காணப்படுதல், கலைமகளும், திருமகளுஞ் சேர்ந்து வாழுவதற்கு ஒப்பாகும். அப்படிப் பட்டவனுக்கு அறிவுச் சுடரும், செல்வ மிகுதியும், ஞானமும், போகமும் எய்தும். ஆத்மானந்தமும், உலக இன்பமும் கைகூடும். அறிவும் ஒழுக்கமும் அமைவுற வாழு.

3. அருட்பொருளும், யாப்பும், அணிகவிபோற் கல்வி,
அருட்பணியி னோடே யமைப்பு.

அருட்பொருளும் = சக்திபெற்ற விஷய நிறைவும் - யாப்பும் = கவியிலக்கணப் பொருத்தமும் - அணி = கொண்ட - கவிபோல் = செய் யுளைப் போல - கல்வி = கல்வியறிவும் = அருட்பணியினோடே = தன் னலமற்ற தொண்டுடன் - அமைப்பு = பொருத்தமானது.

கடவுளருள் பெற்ற உயர்ந்த பொருள் நலமும், யாப்பிலக்கணப் பொருத்தமும் நிறைந்து அணியாக விளங்கும் காவியத்தைப் போலவே தெய்வீகக் கல்வியும், அருட்பணியும் சேர்க்கையுடையன. வாழ்வே கவியைப் போன்று இன்பமானது. அக்கவி பாடுவதால் மகிழ்வைத் தருவது போல, கல்வியும் அருட்பணியாலேயே மகிழ்வுறுத்தும். கல்வி யும் பணியுங் கவிநயம் போலாம்.

4. தூயவாழ் வின்னொளியால், தோன்றா தொழியவிருள்,
ஏயதொழி லால்மிடியை எத்து.

தூய வாழ்வின் = முத்தூய்மை பெற்ற வாழ்க்கையின் - ஒளி யால் = சுடரால் - இருள் = மடமை - தோன்றாது ஒழிய = காணாது மறை வதற்கு - மிடியை = வறுமையை - ஏய = உனக்குப் பொருந்திய - தொழி லால் = தொழில் முயற்சியால் - எத்து = போக்குவாயாக.

வறுமை யற்றால்தான் தூய வாழ்வு எய்தும். தன் தேவை யளவு ஊனுடைக்கு வேண்டியதை ஒரு பாபமற்ற கைத்தொழிலால் பெற்று, வறுமை நீங்க வேண்டும். தனது இயல்பிற்கும் ஆற்றலுக்கும் ஏற்ற தொழிலே இனிது. வறுமை நீங்கிப் பெருமையாய் வாழு.

5. **வாய்மை முயற்சியொடு, வாழ்வுநல நன்னினைவுந்**
**தூய்மை யறத்தின் றுணிபு.**

வாய்மை = உண்மை - முயற்சியொடு = (தவம், தொழில்) முயற்சியுடன் - வாழ்வு நலம் = (கற்றபடி) வாழ்க்கையைச் செலுத்தும் நன்மையும் - நல் நினைவும் = (எல்லாரும் இன்புற வேண்டுமென்ற) நல்லெண்ணமும் - தூய்மை = முத்தூய்மை - அறத்தின் = தர்மத்தின் - துணிபு = தீர்மானமான சாரம்.

வேதங்களுக்கெல்லாம் தாயாக விளங்குவது தர்மம். அதன் சாரமாவன: உண்மை, உறுதி, தவமுயற்சி, ஜீவனத்திற்காகத் தொழில் முயற்சி செய்தல், ஒழுக்கம், பரோபகாரமான நல்வாழ்வு, எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டுமென்ற நல்லெண்ணம், மனோவாக்குக்காய சுத்தம் முதலியவையே யாகும். முத்தூய்மை யுறல் மூதறத் துணிபாம்.

## 5. பிரமச்சரியம்

1. **வன்னி யறத்தின் வழிநின்றே வாழ்வினிலே**
**யின்னிய வெல்லா மியற்று.**

வன்னி அறத்தின் = பிரமச்சரிய தர்மத்தின் - வழிநின்றே = நெறியில் ஒழுகியே - வாழ்வினிலே = வாழ்க்கையில் - இன்னிய எல்லாம் = ஆன்மாவுக்கும் ஆருயிர்க்கும் இனிய நலங்களெல்லாம் - இயற்று = செய்வாயாக.

பிரமச்சரியமே ஜீவசக்தி. தூய வாழ்வே பிரம்மச்சரியம். காமம் முனிதல், கண் நெறி காத்தல், அரிவையர் தம்மை யன்னையா யெண்ணல், உடல் மனத்தூய்மை, உரையைச் சுருக்கல், தூய நல்லுணவு, துயிலினைக் குறைத்தல், இயற்கை வாழ்வும் இன்ப உணர்வும், போக மறப்பும், யோக வளர்ப்பும், ஆசார்ச் சேவையும், அறிவுப் பயிற்சியும், தெய்வ வணக்கமும், தேசுறு வாழ்வும், பெற்றொளி சிறந்தோர் பிரமச் சரியரே. பிரமச்சரியத்தாலே வாழ்வில் நாம் நினைத்த இனிய காரியங் களெல்லாஞ் செய்யலாம். அதற்கேற்ற திண்மையும் வன்மையும் பிரமச்சரியமே தரவல்லது. அனுமானின் வாழ்வை அறிக.

2. வன்னிப் பருவத்தை வாகாகக் காத்தோர்க்கே,
துன்னுமே தானாய்ச் சுகம்.

வன்னிப் பருவத்தை = பிரமச்சரியம் இருக்க வேண்டிய வயதை - வாகாக = அதற்கேற்ற விதிப்படியே - காத்தோர்க்கே = காப் பாற்றி யொழுகினவருக்கே - தானாய், சுகம் துன்னுமே = நிலைபெற்ற பேரின்பச் சுகம் தானாக வரும்.

பிரமச்சரியத்தை வாலிபத்தில் ஒழுங்காகக் காத்தவருக்கு உடலுறுதி, மனத்திண்மை, தூயவொழுக்கம், தெள்ளறிவு முதலியவை ஏற்படுவதால் அவர் உலகில் சுகவாழ்வடைவர். பிரமச்சரியம் பேரின்ப மளிக்கும்.

3. இன்கல்வி தேர்ந்தே, இருபத்தோ டைந்துவரை,
வன்னியாய் நிற்றல் வழக்கு.

இன்கல்வி தேர்ந்தே = தூய வாழ்விற்கினிய கல்வியை நன்கு பயின்றே - இருபத்தோடைந்து வரை = இருபத்தைந்து வய்து மட்டும் - வன்னியாய் நிற்றல் = பிரமச்சரியாக வாழுதல் - வழக்கு = அறத்தின் கோட்பாடாகும்.

உண்மையான கல்விப் பயிற்சியடைந்து உரு (25) - வயது வரையில் பிரமச்சாரியாயிருந்து, பிறகே இல்லறம் புகவேண்டும். உரு (25) வயதுக்குள் தேடிய ஆற்றலே ஆயுள் முழுதும் நிலைத்திருக் கும். இருபத்தைந்து முன் இல்லற மெண்ணேல்.

4. வன்மை, நலமொளியும் வாய்ந்திடலால் வாழ்வெல்லாம்,
வன்னியற மேன்கொள்ளா வாறு?

வன்மை, நலம் = பலத்தின் மேன்மையும் - ஒளியும் = அறிவுச் சுடரும் - வாய்ந்திடலால் = பொருந்துவதால் - வாழ்வெல்லாம் = வாழ் நாள் முழுவதுமே - வன்னியறம் = பிரமச்சரிய நெறியை - ஏன் கொள்ளா வாறு = ஏன் கொள்ளாமலிருக்கின்றனர்?

பிரமச்சரியத்தால் நல்ல தேகக்கட்டும் அறிவொளியும் ஏற்படு கிறது. ஆயுள் முழுதும் பிரமச்சரியமிருந்தால் அளவற்ற பலமும், பேரின்பப் பெருக்கும், ஆத்மலாபமும் உண்டாகும். உலகிற்குப் பெருத்த தொண்டு புரியலாம். வாழ்தொறும், வாழ்வெலாம் வன்னி வாழ்வின்பே.

5. மணந்துமே வன்னியற மாண்பாகுந் தூய
உணர்வும், வினையும், உறின்.

தூய உணர்வும் = பரிசுத்தமான எண்ணமும் - வினையும் = நல்ல செயலும் - உறின் = சேர்ந்தால் - மணந்துமே = விவாகஞ் செய்தும் - வன்னி அற மாண்பு ஆகும் = பிரமச்சரிய நெறியின் பெருமையைப் பெறலாம்.

மனைவியைச் சகோதரிபோல எண்ணும் பரிசுத்தவுணர்ச்சியும், தவவாழ்வும், அருட்பணியும் சேர்ந்தால், மணந்தும் பிரமச்சாரி யாயிருக்கலாம். சுத்தமுற் றவனே உத்தம வன்னி.

**அறநூல், கல்வியியல், முற்றிற்று.**

---

# 8. இல்லறவியல்

நற்கல்வியுடன், பிரமச்சரியங்காத்து, உரு (25) - வயதான பிறகே இல்லறம் புகுதல் இன்பமாகும். நல்ல நிர்வாக சக்தியும், இல்லற நெறியும், ஜீவனோபாயமும் பெற்றே மணவினை முடிக்க வேண்டும். இல்லறம் தெய்வ சம்மதமான சிறந்த தர்மம். அஃதின்றி உலகு அமையாது. அறிவும் நெறியுமுள்ள ஆடவரும், கற்புப் பூண்ட பொற் புடைத் தெய்வமாகிய மனைவியுங்கூடி இல்லறம் நடத்தும் வகையை இவ்வியல் கூறுகிறது. இனி ''திருநூலையும்'' சேர்த்தே ஆராய்க.

## 1. இல்லறம்

1. இல்லறம் ஈசனருள் எய்திய நல்லறமஃ
தில்லேற்பூ வில்லையாம், எண்.

இல்லறம் = கிரகத்தாச்சிரமம், மணவாழ்வு - ஈசனருள் எய்திய = கடவுளின் அருளைப் பெற்ற - நல்லறம் = மேலான தர்மம் - அஃதில் லேல் = அவ்வில்லறம் இல்லாவிடின் - பூ இல்லையாம் எண் = உலகே உயிர் பெற்றிருக்காது என்பதை நினைப்பாயாக.

உலகம் உயிருடனிருப்பதற்கு அடையாளம் அதன் ஜீவ ராசிகள் பெருகுவதே. இல்லறமில்லேல் இன்னுயிரில்லை. இல்லறம் கடவுளின் கருணை பெற்றது. உலகும் உலகின் பணியும் இல்லறத்

தாலேயே இயலும். தவத்தோர் கண்ட அறத்தைக் காப்போர் இல்லறத் தோரே. இல்லறமின்றி யில்லை யிவ்வுலகே.

2. இல்லறமே வீட்டின்பம், இல்லாளு நல்வாழ்வும்
புல்லிய தாயின் புகழ்.

இல்லறமே = (அறவழி நடத்தும்) மனைவாழ்வே - வீட்டின்பம் = மோட்சசுகமாகும் - இல்லாளும் = (நற்குண) மனைவியும் - நல்வாழ்வும் = தூயவாழ்க்கையும் - புல்லியதாயின் = ஒன்று சேர்ந்தால் - புகழ் = சிறப் பாகும்.

அறநெறிப்பட்ட இல்வாழ்வு பலவகைப்பட்ட நற்செயல் களையுடைத்து. ஆண்மையும் பெண்மையும் அழகுடன் கூடி, மாணறங் காத்து, மக்களையீன்று, அண்டிய விருந்திற் கன்புடனூட்டி, காதலுங் கற்புந் தீதறக் காத்து, கடவுட் பணிகள் சுடருறச் செய்து, தாமும் வாழத் தருமமும் வாழ, தாரணிவாழத் தாங்கிய தில்லறம். சாந்தமும், அன்பும், தன்னல மறுப்பும், இன்பமும், இன்னலும் இல்லறத்தெய்தும். தூய தொழிலால் துய்ப்பன துய்த்து, மகப்பேற்றெய்தவே யுகப்பொடு முயங்கி, பிறபொழுதெல்லாம் பிரமச்சரியமே திறமுடன் காப்பர், அறநெறிக்காதலர். இல்லறத்தார் இருவேளையே தூயவுணவு கொண்டு, புலனடக்கிக் கடவுள் வழிபாடு செய்து, தூய கைத்தொழிலால் ஜீவித்து, மகப்பேறு வேண்டும்போது மட்டும் புணர்ந்து, மீதி காலத்தில் காமவுணர்ச்சியை யடக்கித்தூய்மையாய் வாழவேண்டும். ஒன்றிய காதலர் வன்றவ மில்லறம்.

3. அகப்புறத்தில் இன்னியளா யாகுமனை சேரின்,
இகவாழ்வின் ஏதே யினிது.

அகம், புறத்தில் = உள்ள உணர்ச்சியிலும், வெளியொழுக் கங்களிலும் - இன்னியளாய் ஆகும் = இன்பந்தரத்தக்கவளாக ஒழுகும் - மனை சேரின் = இல்லாள் அமைந்தால் - இகவாழ்வின் = இவ்வுலக வாழ்வைவிட - ஏதே இனிது = வேறெது மேலான இன்பமுடையது.

மனத்தில் கற்பும், அன்பும், கருணையும், பொறுமையு மெய்தி, புறத்தே பணிவும், நாயகன் பணியும், நாணும், அழகும் உள்ள ஒரு மனைவியோடு கூடி அறநெறியில் இல்வாழ்வு வாழ்வதை விட மேலான இன்பம் இல்லை. அது இவ்வுலக வாழ்வையே அமர வாழ்வாக்கும். நன்மனையாலே இன்புறும் வாழ்வே.

4. **வள்ளுவர் இல்லறம்போல் வாய்க்கின் மணமினிதே;**
**இல்லையேல் நற்றுறவை எண்.**

வள்ளுவர் இல்லறம்போல் = திருவள்ளுவநாயனாருக்கு அமைந்த மனைவாழ்வுபோல் - வாய்க்கின் = அமைந்தால் - மணம் இனிதே = மணவாழ்க்கை மிக்கநலமே - இல்லையேல் = அப்படி யில்லாவிடின் - நல், துறவை = மேலான துறவு நெறியை - எண் = எண்ணுவாயாக.

திருவள்ளுவர் வாசுகியுடன் சேர்ந்து நடத்திய இல்வாழ்வே மனைவாழ்விற்கு உதாரணம். வாசுகியின் கற்பும், நாயகன் பணியில் நேயவுறுதியும், அடிசிற்கினிமையும், அன்பும், பணிவும் இணையற்றது. பாபமற்ற நெசவுத்தொழிலால் வள்ளுவர் நாள்தோறும் தேவையளவு ஜீவனத்திற்குப் பெற்றார். வள்ளுவர் சிறந்த நூலையெழுதி மனித சமூகத்திற்கே நிலையான தொண்டு செய்தார். தவவாழ்வு வாழ்ந்தார். சீடரைப் பயிற்றினார். இத்தகைய இல்வாழ்வே இன்பம். முரண்பட்ட மனைவியும், முரட்டுத்தனமான கணவனும், காமவிகாரமும், சச்சரவும், எதிர்ப்பும், சோம்பலும், இடம்பமும், அடிமையும், பணத் தாசையும், மடமையும், பிணியும், வறுமையும் உள்ள மனைவாழ் வினும்துறவறமே மேலானது. மனையறம் வேண்டின் வள்ளுவர் சான்று.

5. **வாழ்க்கைத் துணையை வழிக்கூறின் இல்வாழ்வாம்**
**ஆக்கம்; அறத்தின் அணி.**

வாழ்க்கைத் துணையை = தன் உலக வாழ்விற்குத் தக்க ஆதரவை - வழிக்கூறின் = முறையாகச் சொல்லுமிடத்தில் - இல்வாழ் வாம் = மனைவாழ்க்கையே யாகும் - ஆக்கம் = (அதுவே) செல்வம் - அறத்தின் அணி = தர்மத்திற்கே அழகு போன்றது.

இவ்வுலகில் ஆண் பெண் இருவருக்கும் இன்பவாழ்வைத் தந்து ஆதரிப்பது இல்வாழ்வேயாகும். அறத்துறைனின்ற மனைவாழ்வு வீட்டின்பத்திற்கும் நற்றுணையாகும். உடலின்பத்திற்கு மனைவியினும் சிறந்த துணையில்லை. செய்ய மனைவி வீட்டுத் திருமகள். அவளுக் குண்டாகும் மக்கட் செல்வம் வாழ்வின் கனியாகும். அறநூலுக்குப் பயிற்சிக் கூடம் இல்வாழ்வேயாகும். செல்வம், அழகு, காதல், அன்பு, சந்ததி முதலிய யாவற்றிற்கும் இல்வாழ்வே நிலைக்களன். இல்லற வாழ்வே நல்லியற் துணையாம்.

## 2. மனைவி

1. மென்மை யுடலின்பம் மேதக்க வாழ்வணியிற்
பெண்மையின் உண்டோ பிற.

மென்மை = மெல்லிய தன்மை - உடலின்பம் = சரீரசுகம் - மேதக்க = மேலோங்கிய - வாழ்வு அணியில் = வாழ்க்கையின் அழகில் - பெண்மையின் = பெண் தன்மையைக் காட்டிலும் - பிற = வேறு (அணி) - உண்டோ = இருக்கின்றதோ? (இல்லை).

மெல்லிய தன்மை மின்னார்க்குரியதே. பாட்டு, அணி, குழந்தைகளைப் பேணல், இன்சொல், அன்பு, இரக்கம் முதலிய இன்பமான குணங்கள் பெண்களிடமிருந்தே வந்தன. நன் மனைவாழ்க்கை மனிதனுக்கு ஈகை, இரக்கம், அன்பு, தெய்வபக்தி முதலிய குணங்களை ஈயும். மனைவி முகங்கண்டால் மனத்துயர் நீங்கும். பிணியும் பசியும் பெண்கள் தீர்ப்பர். ஆண்மைக்குப் பெண்மை அழகு செய்யும். மங்கலமனையே மாதவச் செல்வம்.

2. அறமன்பும், ஐங்கடனும், ஆற்றிடலுக் காதி
நிறைமனைவி யாகும் நினை.

அறம், அன்பும் = தர்ம உணர்ச்சி, அன்புணர்ச்சி - ஐங்கடனும், ஆற்றிடலுக்கு = கடவுள், பெரியோர், விருந்தினர், சுற்றத்தார், தான் ஆகிய ஐவருக்கும் உரிய கடமைகளைச் செய்வதற்கு - ஆதி = முதன்மையாயிருப்பது - நிறைமனைவியாகும் = கற்புள்ள பத்தினியே யாவள் - நினை = எண்ணுவாயாக.

இல்லறத்தை நல்லறமாக்குங் கடமைகளை நிறைவேற்ற இல்லாளே முதல் துணையாயிருக்கிறாள். உடல் நலத்தைப் போற்றி, அறம் வளர்த்து, ஆருயிருக்கு அன்புப் பணி செய்யும்போதும், தன் மக்களைப் பேணும்போதும், கடவுள் வழிபாடு, பெரியோர் வழிபாடு, விருந்தோம்பல், சுற்றத்தாருக்குதவல், தன் ஜீவனத்திற்கு வேண்டுவதை ஈட்டல், திருநாட்கள் கொண்டாடல் முதலிய எல்லாவற்றிற்கும், உடல் வலிமையும், மனக்களிப்பும், அருந்துணையும் தருதல் கற்புள்ள மனைவியே யாகும். அறவுணர்ச்சியையும் அன்புணர்ச்சியையும் பயன்படச் செய்வது இல்லாளே. முயலுறு மறத்தின் முதற்றுணை மனைவி. அதிகாலை, சூரியோதயம், உச்சிவேளை, மாலை, இரவில் உறங்குமுன் ஐந்தொழுகையும், மக்களை சுத்தப்படுத்தும்படியான உபதேசமும், ஆருயிர்ப் பணியும், முன்னோர் பெயர் விளங்கவைத்தலும், ஆத்ம முயற்சியும் இல்லறத்தானுக்கு தெய்வீகக் கடனாகும்.

3. நல்ல குணமணியாய் நாணுடுத்த நல்லாளைக்
கொள்ளுக வன்றே குறித்து.

நல்ல குணமணியாய் = சிறந்த குணமே பூணாக - நாண் உடுத்த = நாணத்தையே ஆடையாக உடுத்த - நல்லாளை = நல்லியலுடைய கன்னியை - அன்றே = தன் விருப்பிற்குச் சம்மதித்த அத்தினமே - குறித்து, கொள்ளுக = மனைவியாகக் குறிப்பிட்டு மணந்து கொள்ளுவாயாக.

நற்குணமே அணியும், நாணே உடையுமாயுள்ள கன்னிகையை, பிரமச்சரியத்தை ஒழுங்காகக் காத்தபின் மணத்தல் நல்லது. அழகு, அன்பு, இரக்கம், மென்மை, இன்சொல், பாட்டு, அடக்கம், புன்னகை, மரியாதை, இடம்பமின்மை, பொன்னகை, வெறுப்பு முதலிய குணங்கள் மணமகளுக்கு அழகு. குணமும் நாணும் மணமகட்கினிது.

4. புன்னகையும் மின்னொளியும், போதவருள் பூத்தினிய
நன்னிலையு நங்கைக் கழகு.

புன்னகையும் = புன்சிரிப்பும் - மின்னொளியும் = மின்னற் கொடி போன்ற காந்தியும் - போத அருள் = நல்ல ஞான சக்தியும் - பூத்து = விளங்கி - இனிய நன்னிலை = பேரின்பமான தவநிலையும் - நங்கைக்கு = பெண்ணிற்கு - அழகு = பொருத்தமாகும்.

பெண்கள்தவஞ்செய்து பிரமச்சாரியாகவும் இருத்தல் பாங்காகும், அல்லது மனையிலேயே தானும் ஆசையொழித்துக் கணவனுடன் அருந்தவம் புரியலாம். சிரித்த முகமும், மின்னலைப் போன்ற தேக காந்தியும், தவத்தால் இளைத்த உடலும், பேரின்ப அறிவு மலர்ச்சியும், மனக்களிப்பும் குறியாகக் கொண்ட நன்னிலையான தவம், பெண்களுக்கு அழகு செய்யும். 8 முதல் 16 வயது மட்டும், தூய குருவிடம் ஞானம் பயின்று, 16 முதல் 25 மட்டும் தனியாயிருந்து யோகம் பயின்று பராசக்தியை வழிபட வேண்டும். இயற்கையுணவையே மிதமாகக் கொள்ளல் வேண்டும். மௌனம் மிகவும் நலம். அடிக்கடி பிராணாயாமஞ் செய்தல் வேண்டும். பெண்களுக்காகத் தனிக் குருகுலமமைத்தல் நலம். நாயகனும் தவவாழ்வு வாழவேண்டும். இல்லேல் இத்தகைய தவப்பெண்கள் நாயகனைத் திருத்துதல் கடனாகும். தகையே நங்கை தவப்பொலிவெய்தல்.

5. உணவு முயக்கிற்கே யுன்மனைவி யல்ல;
அணங்கவள் வீட்டின் னணி.

உணவு, முயக்கிற்கே = உணவாக்கவும், சிற்றின்பச் சேர்க்கைக்குமே - உன் மனைவி அல்ல = உனக்கு இல்லாள் ஏற்படவில்லை -

அவள் = அம்மனைவி - அணங்கு = சக்தி வடிவான தெய்வம் - வீட்டின் அணி = வீட்டிற்கு அழகேயாவாள்.

கேவலம் சமைக்கவும் புணரவும் மனையறமல்ல. ஆடவன் வாழ்வை அன்பினிலுய்க்கத் தேடருந் திருவே செவ்விய மனையாம். இருவரும் புல்லியொரு மனவாழ்வால், தருமங் காத்துத் தவஞ்செயல் கடனே. பெண்களை அடிமையாக்கினால் அடிமைப் புதல்வரே உண்டாகி நாடும் அடிமையாகவே வாழும். மிருகத்தினுங் கேடான சிற்றின்பத்தை யொழித்து, சந்ததி வேண்டும்போது கூடி, பெரும்பாலும் புலனடக்கியே வாழவேண்டும். இந்திரியக் கட்டுள்ளவரே வீரப் புதல்வரைப் பெறுவர். காமதேனுவெனக் கருதுக மனையை. உய்யும் நெறிக்கே யுறுதுணை மனைவி. மங்கள மனைவி மனைக்கருஞ் சுடரே.

## 3. மனையொழுக்கம்

1. குணமே ரடுசுவையுங் கோமளமும், நாணும்
மணமாத ரார்க்கு மதிப்பு.

குணம் = (அன்பு, அடக்கம், பொறுமை முதலிய) குணங்களும் - ஏர் = அழகும் - அடு சுவையும் = உணவு சமைத்தலில் இன்பமும் - கோமளமும் = இளமையும் - நாணும் = மரியாதையும் - மணமாதரார்க்கு = மணமுடிக்கும் பெண்களுக்கு - மதிப்பு = சிறப்பாகும்.

அன்பு, இனிமை, மென்மை, அடக்கம், சாந்தம் முதலிய குணங்கள் பெண்மைக்கு அழகு. இயற்கை அழகேயல்லால், ஆடையாபரண அழகு பாங்கல்ல. சுத்தமே அழகு. புன்னகையே நன்னகை. மனந்தளராமல் என்றும் இளமையுணர்ச்சியுடனிருத்தல் இன்பமானது. மெல்லிய குரலும், சுருங்கிய சொல்லும், வீண்சொல்லின்மையும், நாணமும், பயிர்ப்பும், மெல்லிய நடையும், விழுமிய ஒழுக்கும் பெண்மைக்குப் பெருமையாகும்.

2. அட்டலும், நூற்றல், அணிபா, கடனீர்மை,
கற்றலும் பெண்டிர் கடன்.

அட்டலும் = உணவைத் தயாரித்தலும், நூற்றல் = நூற்றலும் - அணி = வீட்டை அழகு செய்வதும் - பா = பாட்டும் - கடன் நீர்மை = இல்லறத்தில் செய்ய வேண்டிய கடமைகளின் தன்மையும் - கற்றலும் = கல்விப் பயிற்சியும் - பெண்டிர், கடன் = பெண்களுக்குக் கட்டாயமான கடமையாகும்.

சமைத்தல், கணவன், மக்கள் முதலியோரின் உடல் நலம் பேணல், சுகாதாரமறிந்து (அளவொடு உண்டுறங்கி முயங்கல்), இயற்கை வைத்தியம் முதலியவற்றில் திறமையுள்ளவராக வேண்டும். இயற்கை உணவைத் தயாரித்தல் இனிது. கடலை, பழம், தேங்காய், பச்சிலை களை இரண்டு வேளையுண்டால் போதுமானது. அல்லது சாத்வீகச் சமையல் செய்தல் வேண்டும். தமது ஆடைக்கு மனைவியுங் கண வனும் நூற்றுக்கொள்ள வேண்டும். மனையை சீதேவி வாழுங் கோயி லென்றெண்ணிச் சுத்தப்படுத்த வேண்டும். மெழுகல், கோலமிடுதல், படமெழுதல், பாசிகோத்தல், அவ்வவ்விடத்தில் அவ்வவை வைத்தல், பயிர் வளர்த்தல் முதலியன வீட்டிற்கு அணிசெய்தலாகும். காலையும், மாலை விளக்கு வைத்தலும், இனிய குரலுடன் கடவுட் பாக்கள் பாடுதல் இன்பமானது. பசுவளர்த்தல், விருந்தோம்பல், நாயகன் பணி முதலி யவைகளைப் பெண்கள் திறமையுடன் செய்தல் வேண்டும். கல்வி கண்ணாகும். தன் குழந்தைகளுக்குத் தாய்மாரே சிறந்த ஆசிரியராவர். பெண் குழந்தைகள் தாயிடமே சிறந்த கல்வி பெறுதல் நலம். கற்புங் கடமையுங் காரிகைக்கழகு.

3. கொழுநன் வகுத்த குணநெறியில் நிற்பாள்;
தொழுநோன்பு வேறுண்டோ சொல்.

கொழுநன் = கணவன் - வகுத்த = இட்ட - குணநெறியில் = சன்மார்க்கத்தில் - நிற்பாள் = ஒழுகும் மனைவி - தொழும் = வணங்கும், மதிக்கும் - வேறு நோன்பு = வேறு தவம் - உண்டோ, சொல் = இருக் கிறதோ சொல்வாயாக.

தன் கணவன் சொல்லும் நன்னெறியே குலமகட்கு அறவழி யாகும். முத்தூய்மை யடையவும் உடல் நலத்திற்கும் - குடும்ப முன் னேற்றத்திற்கும் தேச முன்னேற்றத்திற்கும் வேண்டியவற்றை மனைவி கணவனுடன் முயல வேண்டும். தீயவழிகளில் தூண்டுங் கணவனை நீதியுரைத்து நேர்வழி திருப்ப வேண்டும். கொழுநற் பேணல் குல மகட்கழகு.

4. பகட்டவணி கொள்ளாள்; பதிக்கணி யாவாள்,
அகத்திற் குரியாள் அறி.

பகட்ட = (பிறர் மயங்க) மினுக்குவதற்கு - அணி = பொன் நகைகளை - கொள்ளாள் = பூணமாட்டாள் - பதிக்கு அணி ஆவாள் = நாயகனுக்கு, தானே ஒரு ஆபரணமாவாள் - (அத்தகையாள்) - அகத்திற்கு உரியாள் அறி = இல்லறம் நடத்த யோக்கியதை யுடையவள் என்று அறிவாயாக.

நற்குணமுந் தூய ஒழுக்கமுமே பெண்களுக்கு அணியாகும். பொன்னகை மினுக்கெலாம் போலியழகே. செருக்கும், அச்சமும் தீயவிழைவும் பெருக்கிடும் பொன்னகைப் பிணியை யொழிக்க. இயற்கைப் பொலிவும், இன்பவொழுக்கமும், எளிய வாழ்வும், இல்லாட்கழகு. சுத்தமான கதராடையும், இரவிக்கையும் போதிய அணியாகும். திருட்டு பயமும், செல்வச்சேதமும் நகையால் ஏற்படும். நகைசெய்வதைத் தொழில் முயற்சியிற் செலவிட வேண்டும். மினுக்கிடும் பூண்கள் குணத்தினும் மாண்போ?

5. கற்புயிர், நாணழகு; காரிகைக்குத் தன்கணவன்
சொற்படி நிற்றல் சுகம்.

காரிகைக்கு = ஒரு பெண்ணுக்கு - கற்பு உயிர் = கற்பே உயிராகும் - நாண் அழகு = நாணமே அழகாகும் - தன் கணவன் சொற்படி நிற்றல் = தன் நாயகன் கட்டளைப்படி நடத்தல் - சுகம் = இனிது.

கற்பை உயிர்போலக் காக்க வேண்டும். நாணத்தையே அணியாகக் கொள்ள வேண்டும். நாயகன் சொற்படி நிற்றல் வேண்டும். கற்பொடு நாயகனைப் பணிந்து, நாணத்தோடு பிறரிடம் பழக வேண்டும். நாயகன் சுற்றத்தாருடன் நயந்து பழகவேண்டும். கணவனைப் பணியாள் கடவுளும் மதியாள்.

## 4. இல்லாளன்

1. இல்லாளை யன்பா லிணக்குவன செய்யாக்கால்,
இல்லாள னுக்கே யிழிபு.

இல்லாளை = மனைவியை - அன்பால் = அன்பு பாராட்டுவதால் - இணக்குவன = கீழ்ப்படியும் வகைகளை - செய்யாக்கால் = செய்யாவிடின் - இல்லாளனுக்கே = கணவனுக்கே - இழிபு = அவமானமாம்.

மனைவி தன்னிடம் அன்பு குன்றாதிருக்கும்படி இல்லாளன் நடந்துகொள்ள வேண்டும். தன் மனைவி பிறரிடம் காதல் கொண்டாலும், தன்னோடு முரண்பட்டுச் சச்சரவிட்டாலும், வேறிடம் ஓடினாலும், உலகம் இல்லாளனையே பழிக்கும். நெறியுடன் புணர்தல், குறிப்பறிந்தொழுகல், பரிவுடன் பேணல், பசிப்பிணி நீக்கல், திருவேயாயினும் பிறர் மனை விலக்கல், அறச்செயலுரைத்தே யதன்படி யொழுகல் முதலியன இருவரும் ஒன்றி யின்புறு வழியே. அரற்றலும், வைதலும், அடித்தலும், கடிதலும், காமவெறியாற் காதல்நெறி பிழைத்தலும், தீய

நடத்தையும் செருக்கு மழுக்கும் நோயென வாழ்வைத் தேய்த்திடுங் கண்டீர். காதலி தன்னைக் காதலாலிணக்கு.

2. பெண்ணி னினைப்பையே தன்னினைப்பாய்ப் பெற்றொழுகின், என்னபய னீயும் இல்?

பெண்ணின் நினைப்பையே, தன்னினைப்பாய், பெற்று ஒழுகின் = பெண்களின் போக எண்ணத்தையே தன் மனத்தில் நினைக்கப் பெற்று நடந்தால் - இல் = இல்லறம் - என்ன பயன் ஈயும் = என்ன சுகத்தைக் கொடுக்கும்?

எப்போதும் பெண்வெறி பிடித்தலையும் காமப்பித்தன் பிணியாலும் மனைவியரின் வெறுப்பாலும் நோவுற்று அழிவான். அவனுடைய இல்லறம் துயரக்கடலாகவேயிருக்கும். பிரமச்சரியத்தை ஒழுங்காகக் காத்தவருக்கே சிற்றின்பத்தில் நிறைவுடன் ஒழுக முடியும். பெண் பைத்தியன் இடம்பமும், தீயபழக்கமும், வீண்பேச்சும், மினுக்கும், தளுக்கும், செருக்கும், பொருள் நாசமும் செய்து பிணியும், சோர்வும், கவலையும், வறுமையுமுற்று, உலகில் நரகத் துன்பத்தை அனுபவிப்பான். குடும்பத் துயர்களெல்லாம் காமத்தில் நெறிகடந்த காதலரால் வருவதே. பெண்வெறி கொண்டோன் புண்ணுற்றழிவான்.

3. மனையிடமே காதலாம்; மக்களிடத் தன்பாம்;
அனைத்திடமும் நாட்டுன் னருள்

மனையிடமே = மனைவியினிடமே - காதல் ஆம் = நிறையுள்ள காமத்தைக் காட்டலாம் - மக்களிடத்து = தன் குழந்தைகளிடத்தில் - அன்பாம் = அன்பைக் காட்டக்கூடும் - அனைத்திடமும் = எல்லா உயிர்களிடமும் - உன் அருள் = உனது பேரன்பை - நாட்டு = (அருட் பணியால்) செலுத்துவாயாக.

மனையறங் காப்பவன், காதலைத் தன் மனைவியிடமே காட்ட வேண்டும். காதலென்பது கற்புடனின்புறல். மக்களிடம் உள்ளன்பு பாராட்டிப் பிரியமாயிருத்தல் வேண்டும். அவர்கள் கல்வியொழுக்க முன்னேற்றத்தில் அன்பு வைத்தலே வேண்டும். ஆருயிர்களிடம் அருளோடு நடத்தல் வேண்டும். காதலை அற்பமாயும், அன்பை மத்திமமாயும், அருளை விரிவாயும் காட்ட வேண்டும். அருள் தெய்வீகமானது. காதலன் பருளுங் கணித்துற் றுயருக.

4. கொள்க வொருமனைவி; கோதற் றுவாழ்இலதேல்,
நில்கநீ காதலித்த லின்று.

ஒரு மனைவி கொள்க = ஒரே நல்லாளை மணந்துகொள் - கோதற்று வாழ் = குற்றமற்று வாழுவாயாக - இலதேல் = அப்படி வாழ முடிந்திலதேல் - காதலித்தல் நின்று நில்க = பெண்களைக் காதலிப்பத னின்றே மனதை யகற்றுக.

ஒரு மனைவியுடன் இல்லற நெறிப்படி தூயவாழ்வு வாழ வேண்டும். தனக்கு வேண்டா மணமும், வறுமையும், பிணியும், குறைவும், குற்றமும் இருந்தால் வீணாக ஒரு பெண்ணைக் கெடுக்காமல், பிறர் மனையும் பாராமல் காதலையே ஒழிக்க முயலுக. பொதுஜன ஊழியத் தால் மனையைப் பேண முடியாதாரும் காதலை யொழித்துக் கடிமணம் மறத்தலே நலம். திறனிலார்க் கில்லை மனையறத் தின்பம்.

5. அயல்சார்தல் ஆண்மை யறன்போக்கு மஃதைத்
துயிலினுந் தூயர் தொடார்.

அயல் சார்தல் = பிற மனைவியரை நாடல் - ஆண்மை = ஆண்மைத்தனத்தையும் - அறன் = தருமத்தையும் - போக்கும் = அழித்துவிடும் - அஃதை = அந்த விபசாரத்தை - தூயர் = பரிசுத்தமானவர் - துயிலினும் = தூங்கும்போதும் - தொடார் = தீண்டமாட்டார்கள்.

மனித வாழ்வை நரகமாக்குவது விபசாரம். ஆண்மைக்குரிய தைரியம், வீரம், ஆற்றல் எல்லாம் விபசாரத்தால் கெடும். அச்சமும், துயரும், அழிபிணியிழிவும், மெலிவும், தளர்வும், வெட்டையுஞ், சாவும், பிறர்மனைப் பித்தர் பெற்றழிவாரே. தூயவர்கள் கனவிலும் பிறர் மனைவியை எண்ணார். கனவில் விழையினும் பிணி பலவாகும். பெண்களைத் தாயென மதித்தல் வேண்டும். சக்தி வழிபாடும், தியானமும், நற்பழக்கமும் வேண்டும்.

## 5. விழைவு

1. அயல்சார் விழைவை யடக்கவாற் றாதான்,
செயல்மணத்தை, அன்றே சிறப்பு.

அயல்சார் விழைவை = பிற மாதரைக் காமுறும் தீய ஆசையை - அடக்க ஆற்றாதான் = அடக்க முடியாதவன் - அன்றே மணத்தைச் செயல் சிறப்பு = அன்றே விதிப்படி விவாகஞ் செய்துகொள்ளுதல் நல்லது.

காம வெறியால் பிறர் மனைவியரைக் கெடுப்பதைவிடக் கலியாணஞ் செய்து, இல்லறம் புகுதலே சிறந்தது. அடங்காமனத்தன் அன்றே மணக்க.

2. பிறனில் விழிக்கும் பிணியொருவன் வாழ்வினையே,
நரகில் அழுத்தும் நமன்.

பிறனில் விழிக்கும் பிணி = பிற மனைவியரைக் காமுறும் நோய் - ஒருவன் வாழ்வினையே = ஒரு மனிதனுடைய வாழ்வு முழுதையும் - நரகில் = நரக வேதனையில் - அழுத்தும் = ஆழப் புதைக்கும் - நமன் = எமனைப் போன்றது.

விபசாரத்தால் நோயும் கவலையுமுற்று, உலக வாழ்வு நரக வாழ்வாகிறது. விபசாரன் காம நரகில் மீளாது ஆழுகிறான். நடைப்பிண மாகிறான். எமன் உடலைப் பிரிக்கிறான்; காமம் ஆன்மலாபத்தை யும் சித்திரவதை செய்கிறது. இந்திரியமே மனிதனுடைய உயிர்; அதைப் பல தீய வழிகளால் செலவழிப்பதனால்தான் மனித வாழ்வு கெடுகிறது. ஆசிரமக் கல்வியும், பிரமச்சரிய வாழ்வும், இயற்கை உணவும், பிராணாயாமமும், கடவுள் நினைப்பும், துயில் சுருக்கமும், தூய வாழ்வுமே காமத்தை அடக்க வழி. நரகினுங் கொடிதயல் நாரியர் புணர்ச்சி.

3. இளமை யெனினும், இடமிற்பெண் ணாசை
பெருமை யழிக்கும் பிணி.

இளமை எனினும் = வாலிபத்தால் தூண்டப்பட்டாலும் - இடமில் = (தன்குலம், நோக்கம், வயது, வாழ்விற்கு) தகுதியற்ற - பெண்ணாசை = பெண்ணிச்சை - பெருமை அழிக்கும் பிணி = நமது வாழ்வின் மேன்மையைக் கெடுக்கும் நோயாகும்.

தன் நிலைமைக்கும், வயதிற்கும், நோக்கத்திற்கும் ஏற்ற பெண்ணை மணந்தால்தான் முரணில்லாது இல்லறவின்பமெய்தும். இளமையின் மயக்கத்தால் அல்லது வரதட்சிணையாசையால் தகாத விடத்தில் மனைகொண்டால் நமது வாழ்வே பல தொல்லையாற் கெட்டுப் போய்விடும். குடும்பச் சச்சரவுக்கு வாழ்வு பலியாகிவிடும். காதலர் இருவரும் கணித்தாராய்ந்தே மணவினை முடித்தல் மாண் பாகுமே. இடமுள காதல் கடனிலாச் செல்வம்.

4. நிலவுசிறு காற்பா நிறமா ரியற்கை,
இலவாமே காமிகளுக் கின்பு.

நிலவு = சந்திரனும் - சிறுகால் = தென்றலும் - பா = பாட்டும் - நிறம் ஆர் = பல வர்ணங்களுடைய - இயற்கை = இயற்கை வனப்பும் - காமிகளுக்கு = காமவெறி பிடித்தவருக்கு - இன்பு இலவாமே = இன்பமாயிராவாம்.

கவிகளுக்கும் தவத்தினருக்கும் தூய வாழ்வினருக்கும் சந்திரன், தென்றல், இயற்கை வனப்புகளெல்லாம் தெய்வீகத் தோற்றமாகி வேதமோதிப் பேரின்பந்தரும். ஒருதலைக் காமவெறி கொண்டவருக்கு இவை தீ போலவும், அம்பு போலவும், நாகம் போலவும் இன்ன லுறுத்தும். இல்லை காமிகட் கியற்கை யின்பம்.

5. காத லெனுமெண்ணங் காலத்தா லோங்கியே,
வீத லடையுமாம் வீண்.

காதல் எனும் எண்ணம் = பெண்களைக் காமுறல் என்னும் நினைப்பு - காலத்தால் ஓங்கியே = வயக்கிரமத்தில் பெருகி - வீதல் அடையுமாம் வீண் = முடிவில் நலிந்து போகும் மாயையேயாகும்.

காதலென்பது கருத்தின் கனவே. அது வயதால் ஓங்கி வலிவையுருக்கி, வயது முதிர்வில் மங்கிடும் மாயை. மனது புலன்களால் மயங்கும்போது, சென்ம மணத்தால் சிற்றின்பச் சுவை, 13 ஆண்டில் பற்றிடும். 16 வயதில் முதிரும். அப்போது தூயவாழ்வும் நற்பழக்கமும் இல்லையேல் பெண்வழி சேர்தலும், கனவு காணலும், விந்து நாசமும், மதிமயக்கமும், வாலிபனை உருக்கும். 50 ஆண்டுமட்டும் இந்த விழை முதிர்ந்து பிறகு உடல் நலக் கேட்டாலும் குடும்பக் கவலையாலும் ஆற்றலின்றித் தளரும். காதற் கனவு காலக் கூத்தே.

அறநூல், இல்லறவியல் முற்றிற்று.

---------

# 9. குடும்பவியல்

இல்லற இன்பத்தின் பயனாக நன்மக்களும் சுற்றமும் உண்டாகும். தாய், தந்தை, மகன், சுற்றத்தார், உறவினர் இவர்கள் ஒழுகு நெறியைக் குடும்பவியல் விரிக்கிறது.

## 1. குடும்பம்

1. உணவுவயிற் றிற்காம்; உயர்பெற்றோர் வாழ்க்கை,
உணவுமகர் வாழ்விற்கென் றோர்.

உணவு, வயிற்றிற்காம் = ஆகாரம் வயிற்றை நிரப்ப உதவும் - உயர் பெற்றோர் வாழ்க்கை = ஒழுக்கத்தில் மேலான தாய் தந்தையரின் வாழ்க்கை - மகர் வாழ்விற்கு உணவு என்று ஓர் = குழந்தைகளின் வாழ்க்கைக்கே உணவாகும் என்பதை அறிவாயாக.

உணவு வயிற்றிற் புகுந்து உடலைத் திண்மை யுறுத்துவது போல, பெற்றோரின் பழக்க வழக்கங்களும் சிறுவரின் புலன்களிற் புகுந்து மனத்தைப் பெருக்கி வாழ்வைத் திருப்பும். தீய உணவால் நோய் பிறப்பதுபோல் தீய தோற்றங்கள் புலன்களிற் புகுந்து மனதைக் கெடுக்கின்றன. பெற்றோர்கள் மிகவும் பரிசுத்தமாக வாழ வேண்டும். பெற்றோரெப்படி அப்படிப் பிள்ளை.

2. பெற்றோரின் வாழ்க்கையாற் பெற்றசே யின்குணமாம்;
பெற்றோர்க்குத் தூய்மை பெரிது.

பெற்றோரின் வாழ்க்கையால் = தாய் தந்தையரின் ஒழுக்கத்திற்குத் தக்கபடியே - பெற்ற சேயின் குணம் ஆம் = தாம் ஈன்ற குழந்தையின் இயற்கையும் அமையும் - ஆதலின் - பெற்றோர்க்கு, தூய்மை, பெரிது = பெற்றோருக்கு பரிசுத்தமான வாழ்க்கை மேலானது.

ஒழுங்கான பிரமச்சரியத்தின் பிறகு இல்லறம் புல்லி நல்லறஞ் செய்வோர் நற்குணப் புதல்வரையே யடைவர். பிணியாலும், ஆசையாலும் தீய நடத்தையாலுங் கெட்டுப் போனவருக்குத் தீக்குண மைந்தரே பிறப்பர். ஆதலின் பெற்றோர்கள் சுத்தவாழ்வு வாழவேண்டும். சுத்த வாழ்வாற் சுடருறு மைந்தராம்.

3. பெற்றோருங் கூடப் பிறந்தோருஞ் சுற்றமெனா,
அற்றுமனை, நாடுலகு மாம்.

பெற்றோரும் = தாய் தந்தையரும் - கூடப் பிறந்தோரும் = சகோதரரும் - சுற்றம், எனா = உறவினரும் போலவே - மனை, நாடு, உலகும் = வீடும், தேசமும், புவியும் - அற்று ஆம் = அத்தன்மையான தொடர்புடையதாகும்.

ஒரு குடும்பத்தில் பெற்றோர், சகோதரர், வேறு உறவினருக்கும் உள்ள தொடர்பைப் போலவே, ஒருவனுக்குத் தன் சொந்த வீட்டிற்கும் தாய் நாட்டிற்கும் உலகிற்கும் உள்ள சம்மந்தமும் ஆகும். தாய் தந்தையர் பணிபோல், தன் குடும்பப் பணியைக் கட்டாயம் ஒருவன் செய்தல் கடன். சகோதரருடன் ஒற்றுமையாயிருந்து தன் குடும்ப சுக துக்கங்களில் ஈடுபடுவதுபோல், தன் தேசத்தாருடன் ஒற்றுமைப்பட்டு நாட்டுப் பணிகளாற்றுதல் கடனே. தன் உறவினருடன் அன்பொடு பழகுதல்போல, இவ்வுலகினரிடமும் உள்ளன்புடன் பழகி அவர்களுக்குற்ற இன்னலைத் தீர்க்க முயல வேண்டும். கட்சி, ஜாதி, நிறம், பேராசைச் சண்டைகள் ஒழிவதற்கு ஒவ்வொருவனும் உலகுடன் இத்தகைய உறவு வைத்துப் பழகவேண்டும். வீடுகளின் ஈட்டமே நாடும், உலகுமன்றோ? குவலயமெல்லாங் குலமொன்றாமே.

4. ஊர்க்குச் செலவல்ல; உள்ளசெயற் கேற்பச்
சீர்வழியிற் செய்தல் சிறப்பு.

செலவு = பொருளைச் செலவிடுவது - ஊர்க்கல்ல = ஊரார் மெச்ச வேண்டியதற்காக வில்லை - உள்ள செயற்கேற்ப = தனக்கிருக்கும் சக்திக்குத் தக்கபடியே - சீர்வழியில் = வீடு, நாடு, உலகிற்குப் பயனாகும் சிறந்த வழியில் - செய்தல் = செலவிடுதல் - சிறப்பு = மேலானது.

தன் நிலைமைக்குத் தக்கபடி சிக்கனமாகவும், பிறர்க்கும் தனக்கும் பயன்படும்படிக்கும் ஒருவன் செலவு செய்தல் வேண்டும். ஊரார் புகழுக்காகக் கடன் வாங்கி இடம்பச் செலவு செய்தல் தீது. திருமணம், சாவு, சடங்குகளுக்கு இடம்பச் செலவிடுவதை யொழித்தல் வேண்டும். வீண் அணி, விருந்து, வரதட்சிணை, ஊர்கோலம், சடங்குகள் முதலியவற்றில் செலவழிப்பதை, நாட்டுத் தொழில் முன்னேற்றத்திற்கிடலாம். செயலை நோக்கிச் சிக்கனஞ் செய்க.

5. சுற்றமே, ஐம்புலனுட் டோய்ந்துவாழ்க் கைத்துணையாஞ்
சுற்றமே சுத்தமுறத் துன்.

சுற்றமே = சுற்றுமுள்ள பழக்க வழக்கங்களே - ஐம்புலனுள் = ஐம்பொறிகளுக்குள்ளும் - தோய்ந்து = பதிந்து - வாழ்க்கைத் துணை யாம் = மனிதவாழ்வின் சேர்க்கையுமாகும் (ஆதலால்) - சுற்றமே = தன்னைச் சுற்றியிருப்பனவற்றை - சுத்தம், உற, துன் = பரிசுத்தமாக இருக்கும்படி கவனிப்பாயாக.

நமது மனம் ஒரு படம் பிடிப்பான் போன்றது. தன்னைச் சுற்றி யுள்ள பொருள்கள், பேச்சுகள், நடையுடைகளெல்லாம் பொறிகளின் வாயிலாக மனத்துட்போய்ப் பதிகின்றன. நாம் காணுங்காட்சி கருத்திற் பதிந்து எண்ணமாக மாறுகிறது. எண்ணமே தன்மையாக (இயற்கைக் குணமாக) மாறுகிறது. குணமே செயலாகிறது. செயலே வாழ்வாகிறது. தூயசுற்றம் தூயவாழ்வாம். தீயசுற்றம் தீயவாழ்வாம். சுற்றம் எற்றோ அற்றே வாழ்வாம்.

## 2. தந்தை

1. தந்தை செயலே, தனயன் செயலாகுந்
தந்தைக்குத் தூய்மை தலை.

தந்தை செயலே = தகப்பனின் நடத்தையே - தனயன் செய லாகும் = மகனின் ஒழுக்கமுமாகும் - தந்தைக்கு தூய்மை தலை - தகப்பனுக்குப் பரிசுத்தமான வாழ்க்கை முக்கியமானது.

ஒரு தகப்பன் சுத்தமாக வாழ்ந்தால் தனக்கும் தன் மைந்த னுக்கும், மரபிற்கும் நல்லொழுக்கத்தைப் புகட்டுகிறான். மாறாக நடந்தால் தன் மகன், மரபுகளைக் கெடுக்கிறான். தந்தை யொழுக்கந் தனயருக் கெய்தும்.

2. ஞானம், உடல்வலிமை நல்குதல் தந்தையுடன்,
ஈனுந்தாய் ஏற்குங் கடன்.

ஞானம் = நல்ல கல்வியறிவும் - உடல் வலிமை = தேக பலமும் - நல்குதல் = மக்களுக்குக் கொடுத்தல் - தந்தையொடு, ஈனுந்தாய் = தகப்பனும், பெற்ற தாயும் - ஏற்கும் கடன் = கொள்ளுங் கடமை யாகும்.

தன் மக்களுக்குத் தந்தை கல்விக் கடனும் தாய் உடற் பாது காப்புஞ் செய்தல் வேண்டும். கல்வியறிவால் மகனின் ஞானக் கண்ணைத் திறந்து நல்லொழுக்கப் படுத்தலும், இயற்கை நெறியறிந்து ஊட்டிப் பேணி, உடலுறுதி செய்து, மனை, நாடு, உலகின் ஊழியத்

திற்கு சக்தியைத் தருதலும் வேண்டும். அறிவைத் தந்தையும் ஆற்றலைத் தாயும் உரிய மைந்தருக்குதவுதல் கடனே.

3. இன்றுசேய் நாளையே யிப்புவியின் கையாகும்,
என்றவரைப் போற்ற விசை.

இன்று, சேய் = இன்றைக்குக் குழந்தையாயிருப்பது - நாளையே = (அதற்குப் போதிய வயதுவந்த) நாளிலேயே - இப்புவியின் கையாகும் = இவ்வுலகின் பணிகளைச் செய்யக் கைபோலாகும் - என்று அவரை போற்ற இசை = என்ற அறிவுடன் அக்குழந்தையைப் பேணி வளர்க்க உடன்படு.

ஒவ்வொரு மைந்தனும் உலகிற்கு ஒரு பணிதாங்கியே வரு கிறான். இப்போது குழந்தையாயிருப்பவன் மனிதனாகும்போது உல கிற்கு ஒரு கைபோலத் தன் வினையைச் செய்கிறான். அதை ஒழுங்குறச் செய்ய அறிவும், ஒழுக்கமும், ஆற்றலும் வளரும்படி மைந்தரைத் தந்தை தாய் வளர்க்க வேண்டும். நல்ல கல்வியாலும், சுத்த வாழ் வாலுமே குழந்தைகளைப் பேணவேண்டும். இன்றைப் பிள்ளை நாளைப் பெரியோன்.

4. கடிமணந் தன்றன் கருத்தேயா மல்லால்,
இடராகுங் கட்டாய மில்.

கடிமணம் = விவாகஞ் செய்து கொள்வது - தன்தன் கருத்தே யாம் = அவரவருடைய மனப்பிடித்தத்திற்குத் தக்கபடியேயாகும் - அல்லால் = அப்படியின்றி - இடராகும் = துன்பப்படுத்தும் - கட்டாயம் = பலாத்காரம் - இல் = சுகம் இல்லை.

விவாக விஷயத்தில் மைந்தரைக் கட்டாயப்படுத்தி இடர் செய்யக் கூடாது. மனத்தைப் பொறுத்து மணப்பதும் இல்லதும். ஒருவன் பிரமச்சாரியாக இருந்து ஆயுள் முழுதும் தவத்திலும் பணியிலுங் கழிக்க எண்ணினால் அவனிடம் விவாகத்தை வற்புறுத்தல் கூடாது. மனையறம் விரும்பும் மக்களை அவரவர் கருத்திற்கிசைந்த காதலரைத் தேர்ந்து ஆய்ந்து மணக்கும்படி செய்தல் வேண்டும். பெற்றோர்கள் தங்கள் விருப்பிற்கு மக்களைக் கட்டாயப்படுத்தக் கூடாது. பிரமச்சரியங் காத்தே உரு (25) வயதிற்கு மேல் மணவினை நினைக்க வேண்டும். பாலிய விவாகம் கூடாது. மனத்தையறிந்து மணவினை பேணுக.

5. தன்சுகத்திற் கேயல்ல; தாய்நாட்டின் றொண்டிற்கே
யுன்சேய் பிறப்பா முணர்.

உன்சேய் பிறப்பு = உன் மைந்தன் பிறந்தது, - தன் சுகத்திற்கே, அல்ல = அவனுடைய சுயநலத்திற்கே இல்லை - தாய் நாட்டின் தொண்

டிற்கே = சுதேச ஊழியத்திற்கே - ஆம் உணர் = பிறந்ததாகும் என்பதை அறி.

கால தேசத்திற்குத் தக்க பணியாற்றவே கடவுள் மக்களைப் படைக்கிறார். நாட்டிற்குச் செய்ய வேண்டிய வினைக்கே மக்கள் பிறப்பதால் அவர்கள் பிறர்க்கென வாழும்படி பயிற்றுக. தேசத்தையும் குடும்பத்தையுங் காத்து மனித சமூகத்திற்கு அருட்பணி செய்தல் மக்கள் கடன். அவர் நலமும் தாய்நாட்டு நலமும் சேர்த்துப் பேண வேண்டும். பிறர்க்கென வாழப் பிறந்தனர் மக்கள்.

## 3. தாய்

1. தாய்மாரின் கண்ணாகுந் தன்னாட்டின் சீர்மையெலாஞ்
சேய்வடி வாகச் செறிந்து.

தன் நாட்டின் சீர்மை எலாம் = தன் தேசத்தின் பெருமை யெல்லாம் - சேய்வடிவாக = பிள்ளையின் உருவாக - செறிந்து = சேர்ந்து - தாய்மாரின் கண்ணாகும் = அன்னைகளிடமே உண்டாகும்.

நல்ல சேய்கள் பிறப்பது நல்ல தாய்மாரின் தூய வாழ்வினால் தான். தாய்மாரே தேசத்தின் பெருமையைத் தங்கள் வயிற்றில் குழந்தைகளாகச் சுமந்து தருகிறார்கள். ஆதலின் பெண்களுக்கு நல்ல தாய்மார்களாகுங் கல்விப் பயிற்சி வேண்டும். தாயின் சீரே தேயச் சீராம்.

2. வீர மகனையே யீன்றதோர் மெல்லியகட்கு
வேறுதவ மேனோ விளம்பு.

வீர மகனையே = வீரப்புகழ்பெற்ற மைந்தனையே - ஈன்றதோர் மெல்லியட்கு = பெற்ற ஒரு நல்லாளுக்கு - வேறு தவம் ஏனோ விளம்பு = செய்ய வேண்டிய தவம் இன்னும் எதற்கு, சொல்?

தன் மகன் வீரன் எனப் பேரெடுத்தலே தாய்க்குப் பெருமை. தன் தூய வாழ்வால்தான் வீரனைப் பெறமுடியும். வீரனைப் பெற்றாள் வேறு தவம் செய்ய வேண்டுவதில்லை. இராமன், புத்தன், ஏசு, சிவாஜி முதலியோரைப் பெற்ற கோசலை, மாயாதேவி, மேரி, ஜீஜாபாய் முதலியோரின் பெயரும் வணங்கப்படுகிறது. வீரனைப் பெற்றாள் மெய்த்தவமுற்றாள்.

3. தாயிற் பெரிதுண்டோ, தன்சடல வாலயமே,
தூய்மை பெறச்செய் துணை.

தன் சடல ஆலயமே = தன் உடலாகிய கோயிலை - தூய்மை பெறச்செய் = பரிசுத்தமாகச் செய்யும் - துணை = ஆதரவாயிருப்பது - தாயின் பெரிது, உண்டோ = தாயை விடப் பெரிய துணை இருக்கிறதோ? (இல்லை).

உடல் கடவுளைத் தாங்கிய கோயில். அதில் நமது ஜீவாத்மா குடியிருக்கிறான். அதைச் சுத்தமாகவும், கடவுள் தந்த வினையைச் செய்ய உறுதியாகவும் வைத்திருக்க வேண்டும். நமது உடலைப் பேணு வதில் தாய்க்கு நிகராக வேறொருவருமில்லை. தாய்மார்களுக்கு இயற்கை வைத்தியம் இன்றியமையாதது. அதன் வழிகளில் புதல்வரைத் திண்மை யுற வளர்த்தல் வேண்டும். திண்ணுடலாக்கல் அன்னையின் பொறுப்பு. புதல்வர் தாய்ப் பணி செய்யுங் கடனையும் உணர்க.

4. சோறூட்டும் போதன்பாய்ச் சொல்லிவாழ் வின்கடமை
வீரத்தா யூட்டும் விருப்பு.

சோறூட்டும்போது = உணவைப் புகட்டும்போதே - அன்பாய் = உள்ளன்புடன் - வாழ்வின் கடமை = மைந்தன் தனது வாழ்வில், வீடு, நாடு, உலகிற்குச் செய்ய வேண்டிய கடமைகளை - சொல்லி = (கதை யாகவும் பாட்டாகவும்) செப்பி - வீரத்தாய் = வீர வுணர்ச்சியுள்ள தாய் - விருப்பு ஊட்டும் = தான் வீரனாய் வரவேண்டுமென்ற விருப்பையும் சேர்த்து ஊட்டுவாள்.

தங்கள் மைந்தர் சிறந்த வீரராக வேண்டும் என்ற விருப்பம் தாய்மாருக்கெல்லாம் இருக்க வேண்டும். சோறூட்டும்போது வீரர் கதை களும் பாட்டுகளுஞ் சொல்லி அவர் போன்று மைந்தனு மிருத்தல் வேண்டுமென்று உணர்த்த வேண்டும். வீர வுணர்ச்சியுடன் கலந்த உணவு மைந்தனின் இரத்தமாகி அவனை வீரனாக்கும். வேறு குடும்பச் சச்சரவுகளும் தீய பேச்சுகளும் குழந்தைகளைச் சுற்றிக் கூடாது. வீரமும் உணவுஞ் சீறுடனூட்டு.

5. தாய்சொல்லு மம்மொழியே, தன்மக்கள் சொல்லுவதால்,
தாய்நன்று சொல்லல் தலை.

தாய்... சொல்லுவதால் = தாயார் பேசும் அந்த மொழிகளையே தனது மைந்தரும் பேசுவதால் - தாய்... தலை = தாயானவள் மங்கலமான சொற்களையே பேசுதல் முதன்மையானது.

குழந்தைகள் பெரும்பாலுந் தாயிடமே வளருகின்றன. ஆதலின் தாய்மார்கள் தூய மொழிகளையே குழந்தைகளிடம் பேச வேண்டும். வயவு, சினம், பொறாமை, காமப் பேச்சுகளைத் தடுத்தல் வேண்டும். நல்ல பாட்டுகளைக் குழந்தைகள் எப்போதுங் கேட்கச் செய்வது மேலானது. செம்மொழித் தாய்க்கே யம்மொழி மைந்தன்.

## 4. மகன்

1. நாடுகுலப் பேரை நனிவளரச் செய்துயரும்
பீடுடைய மக்களே பேறு.

நாடு, குல, பேரை = தேசம், குலம் இவற்றின் புகழை - நனி, வளரச்செய்து = நன்றாகப் பெருகும்படி வீரச் செயல்களைச் செய்து - உயரும் = மேலாக விளங்கும் - பீடுடைய = பெருமையுள்ள - மக்களே = பிள்ளைகளே - பேறு = செல்வமாகும்.

மைந்தர் செயலே நாட்டின் மாண்பாகும். தன் குல தர்மத்தையும் நாட்டின் முன்னேற்றத்தையும் வளர்க்குஞ் செயலே ஒவ்வொரு மைந்தனும் செய்யவேண்டும். மனிதர் மரபு, அவனை வாழ்த்த வேண்டும். அப்படிப்பட்ட மைந்தர் ஒரு வீட்டிற்குப் பெரும் பாக்கியமாவர். கல்வி, தொழில், சுதந்திரம், வாணிபம், பொருளாதாரம், சமூகச் சீர்திருத்தம், அறவுணர்ச்சி முதலிய துறைகளில் நாட்டிற்கு ஊழியஞ் செய்யலாம். இவ்வூழியமே குலப் பெயரையும் விளக்கும். இராமன் வீரம் இரகு வம்ஸத்தையே விளங்கச் செய்தது. பேர் விளங்கப் பெற்றது பிள்ளை.

2. இல்லி னுயிர்குறியா மின்மக்க ளின்செயலே
சொல்லுமோர் நாட்டின் சுடர்.

இல்லின் = வீட்டின் - உயிர்க்குறியாம் = ஜீவனோடிருக்கும் அடையாளமான - இன் மக்களின் = இன்பமுள்ள பிள்ளைகளின் - செயலே = வீரச் செய்கைகளே - ஓர் நாட்டின் சுடர் = ஒரு தேசத்தின் கீர்த்தியொளியை - சொல்லும் = விளக்கிப் பேசும்.

ஒரு வீடு உயிரோடிருப்பதற்கு அடையாளம் மக்கட் பேறேயாகும். ஒரு நாடு புகழுற்று விளங்குவதன் அடையாளம் மக்களின் வீரச் செயல்களேயாம். சிவாஜி, குரு கோவிந்தன், ஷேக்ஸ்பியர், ஹோமர், நெப்போலியன், வள்ளுவர் முதலியோர் தங்கள் செயலால் நாட்டின் பெயரையே விளக்குவித்தனர். மனைக்குயிராவர் மாப்புகழ் மைந்தர்.

3. பெற்று வளர்த்தன்பு பேணும் பெரியோர்க்கே
யுற்றபயன் மக்க ளுயர்பு.

பெற்று, வளர்த்து, அன்புபேணும் = தங்களை ஈன்று, பேணி வளர்த்து, அன்பு பாராட்டும் - பெரியோர்க்கே = தாய் தந்தையருக்கே - மக்கள் உயர்பு = பிள்ளைகளின் புகழே - உற்ற பயன் = சரியான லாபம்.

பெற்றோர்கள் தங்கள் பிள்ளைகளை வளர்த்துப் பேரன்பு பாராட்டுகின்றனர். இவற்றிற்குக் கைம்மாறு என்ன? பிள்ளைகள் பெற்றோரின் பெயர் என்றும் விளங்கப் புகழ் பெறுவதேயாகும். ''என்ன புண்ணியஞ் செய்து இம் மைந்தரைப் பெற்றாரோ'' என்ற உலக வாழ்த்தே பெற்றோர் பரிசு. ஏசுநாதரால் மேரியின் பெயர் வணங்கப் படுகிறது. பெற்றோர் பரிசு பிள்ளையின் புகழே.

4. புகழும், முதுமையிலே போற்றும் பணிகள்
மகன்பெற்றோர்க் கீயும் மதிப்பு.

புகழும் = புகழோடு - முதுமையிலே = பெற்றோரின் வயோதி கத்தில் - போற்றும் = அவர்களை ஆதரிக்கும் - பணிகள் = கைங்கரியங் களும் - மகன் பெற்றோருக்கு ஈயும் மதிப்பு = ஒரு பிள்ளை தன் பெற்றோ ருக்குச் செய்ய வேண்டிய மரியாதைக் கடனாகும்.

தான் புகழடைந்தால் மட்டும் போதாது. தன் தாய் தந்தை யரின் வயோதிகத்தில் அவரைப் பேணி ஆதரிக்க வேண்டும். அதுதான் பெற்றோரை மதித்ததற்கு அடையாளமாகும். பெற்றோர்ப் பேணல் பெருங்கடனாகும்.

5. இளமையிற் பெற்றோர்; இயலா முதுமை,
முளைபெற்றோன் போலும் முறை.

இளமையில் = மைந்தர் பாலியமாயிருக்கையில் - பெற்றோர் = தாய் தந்தையர் பெற்றோராகி மைந்தரைப் பேணினர் - இயலா முதுமை = தள்ளாத வயோதிகத்தில் - முளை = தம் மைந்தன் - பெற்றோன் போலும் = (தாய் தந்தையருக்கு) பெற்றோர்போல விருந்து அவர் களைக் காத்தல் - முறை = நீதியாகும்.

குழந்தைகளைப் பெற்றோர் அன்புடன் பேணி வளர்த்தனர். இக்குழந்தைகள் மனிதராகி இல்லறம் நடத்தும்போது பெற்றோர்கள் தளர்ந்து கிழத்தன்மையாகின்றனர். அவர்களை மைந்தனும் மனைவி யும் அன்புடன் தாய் தந்தைபோலப் பேணி வளர்க்க வேண்டும்.

## 5. சுற்றம்

1. நல்லாற்றி னின்றெவர்க்கும் நற்றுணை செய்பவனே
யெல்லார்க்கு மேயுறவென் றெண்.

நல் ஆற்றில் = நல்ல அறவழியில்-நின்று = ஒழுகி - எவர்க்கும் = யாவருக்கும் - நல்துணை செய்பவனே = சிறந்த உதவியைச் செய்கின்றவனே - எல்லோர்க்குமே உறவென்று எண் = எல்லா உயிர்களுக்கும் சொந்தக்காரன் என்பதை நினைப்பாயாக.

நல்லற வொழுக்கமும், பரோபகாரமும் உள்ளவனே எல்லாருக்கும் உறவினன் ஆவான். வீட்டினர் மட்டும் உறவல்ல. தனது அன்பினால் உலகம் முழுவதையும் உறவாக்கிக் கொள்ள வேண்டும். புத்தர் பெருமான் எல்லாவுயிர்களுடனும் அன்புறவு கொண்டார். இவ்வுலகே வீடு; மக்களெல்லாம் சகோதரர்; பராசக்தி தாய் என்று எண்ணுக. நல்லறத் துணைவன் எல்லார்க்கும் உறவோன்.

2. பாகத்தி லல்ல; பரிந்த வுதவியினில்,
தேகத் துணைவனைநீ தேறு.

பாகத்தில் அல்ல = பொருளைப் பங்குபோடும்போது இல்லை - பரிந்த உதவியினில் = (சமயம் வந்தபோது செய்யும்) மனமிளகிய உபகாரத்திலிருந்து - தேகத்துணைவனை = சகோதரனை - நீ தேறு = நீ அறிவாயாக.

தந்தையின் பொருளை பாகபாத்தியங் கொள்ளுஞ் சகோதரனைக் காட்டிலும், தனக்குச் சமயத்தில் பரிந்து உதவுகின்றவனே உண்மையான சகோதரனாவான். பாகத் துணைவன் பகையும் ஆகிப் பிரிந்தும் போவான். பரிவுத் துணைவனே பண்புள்ள சகோதரன். உடன் பிறந்தானை உதவியி லறிக.

3. இரத்தக் கலப்பெனினும் இன்னாமை செய்தக்கால்,
அத்தகையார் யாரோ வறி.

இரத்தக் கலப்பெனினும் = இரத்தக் கலப்புள்ள பந்துக்களாயிருப்பினும் - இன்னாமை செய்தக்கால் = தனது அறவாழ்விற்குத் துன்பஞ் செய்தால் - அத்தகையார் = அப்படிப்பட்டவர் - யாரோ = (சொந்தமில்லை) வேறு யாரோ - அறி = நீயே தெரிந்துகொள்.

இரத்தக் கலப்புள்ளவனாயிருந்தாலும், தனது சத்திய வாழ்விற்கும், சமாதானத்திற்கும், உயிருக்குந் துயர்செய்பவன் பந்துவல்ல. மனிதனுமல்ல. அவனை வேறு எவ்வுறவென்றுஞ் சொல்ல முடியாது. இடர்செயு முறவோன் அடவியின் விலங்கு.

4. தூயமன நேயன் றுணையாயின் வாழ்விற்குக்
காயநலம் பெற்றாயே காண்.

வாழ்விற்கு = தனது வாழ்க்கைக்கு - தூயமனநேயன் = பரிசுத்தமான எண்ணமுள்ள சிநேகிதன் - துணையாயின் = நேசமானால் - காயநலம் = உடலெடுத்ததின் பயனை - பெற்றாயே காண் = அடைந்தாய் என்று உறுதியாக நம்பு.

அன்பு, அருள், பரோபகாரம் முதலிய எண்ணமுள்ள தூயமன நண்பன் நமது வாழ்க்கைத் துணையானால், நமது ஜென்ம வினையைச் செய்ய அவனையுந் துணையாகக் கொண்டு இருவரும் உய்யலாம். செய்ய நண்பன் உய்வழித்துணையாம்.

5. நற்குண நண்பன் நலனீயும் வன்சொலினுந்
துற்குண னின்சொற் றுயர்.

நற்குண நண்பன் = நல்ல தன்மையுள்ள நேசன் - வன்சொலினும் = கடுமையான சொற்களைப் பேசினாலும், - நலன் ஈயும் = (அவ் வன்சொற்கள்) நன்மையே செய்யும் - துற்குணன் = தீயகுணமுள்ளவனுடைய - இன்சொல் = நயமொழிகள் - துயர் = துன்பமே தரும்.

தூயநேசன் நமது குற்றங்களை வன்சொல்லுடன் கண்டித்து நம்மைத் திருத்துவான். அவ் வன்சொற்கள் நமக்குப் பெருத்த நன்மை செய்யும். தீய குணத்தவனுடைய நயவஞ்சகமுள்ள இன்சொல் நம்மைத் தீயவழிகளிற் புகுத்தித் துயர்செய்யும். நண்பர் வன்சொல்லும் நன்மையே செய்யும். துன்பர் இன்சொலுந்துயரே யாக்கும்.

**அறநூல், குடும்பவியல் முற்றிற்று.**

---------

# 10. முயற்சியியல்

ஒரு இல்லறத்தான் தன் இகபரசுகங்களுக்குப் பல துறைகளில் முயற்சி செய்தல் வேண்டும். தன் ஜீவனத்திற்கும் ஆத்மலாபத்திற்கும் என்னென்ன முயற்சி செய்தல் வேண்டுமென்பதை முயற்சியியல் காட்டுகிறது. ஈகையின் பெருமை, முயற்சியின் சிறப்பு, ஜீவனத்திற்குக் கைத்தொழில் செய்வதன் பெருமை, தொழில்கள் யாவற்றிலும் விவ சாயம், நெசவு, நூற்றல் இவற்றின் சீர்மை, யந்திரங்களின் கெடுதி முதலிய வற்றை இவ்வியல் விளக்குகிறது.

## 1. ஈகை

1. சேர்த்தென்ன செய்வாயோ; சேர்த்து மறந்தவரைப்
பார்த்தறஞ் செய்வாய் பரிந்து.

சேர்த்து, என்ன, செய்வாயோ = பொருளைத் (தேவைக்கு மேலாக) குவித்துக் குவித்து என்ன பயன் பெறப்போகிறாய் - சேர்த்து (முன்னே) பொருளைக் குவித்து - மறந்தவரை = (இவ்வுலகிலேயே விட்டு இறந்த பின்) மறந்து சென்றவரை - பார்த்து = அறிந்து - பரிந்து = கருணையுடன் - அறஞ் செய்வாய் = தர்மத்தைச் செய்வாயாக.

உலகில் பொருளைச் சேர்த்து வைத்தவரெல்லாம் தம் பின்னே ஒரு சிறிதும் கொண்டுபோக முடியாது. இறந்த பின் மறந்து விடுத்துச் செல்லுகின்றனர். இவ்வுண்மையை யறிந்த ஞானிகள் போகப் பொருள் களை மறந்து வனம் புகுந்தனர். செல்வம் அறவழியிற் செலவிட்டுச் செல்லவே ஏற்பட்டது. ஆதலின் உன் செல்வத்தைக் கொண்டு ஏழை களுக்குந் தேவையானவருக்கும் உதவி செய்வாயாக. ஈயாச் செல்வம் நோயா யழியும்.

2. வந்த விருந்தின் வகைசாதி யெண்ணாது,
தந்த ததுவே தகை.

வந்த விருந்தின் = தன் வீட்டிற்கு வந்த விருந்தாளியின் - வகை, சாதி = வகுப்பு, வர்ணவேற்றுமை - எண்ணாது = பார்க்காமல் - தந்ததுவே = கொடுத்த ஈகையே - தகை = பெருமையானது.

தன் வீட்டைத் தேடிவந்தவரை சாதி, வகுப்பு வேற்றுமை பாராட் டாமல் உபசரிப்பதே ஈகையின் அறிகுறியாகும். பசிப்பிணி அனை வருக்கும் ஒன்றுதான். வேற்றுமையின்றி ஆற்றுதல் ஈகை.

3. எவ்வழியும், எத்துணையும், ஈதல் மிகவினிதே,
செவ்விநலஞ் சேர்க்குஞ் சிறப்பு.

எவ்வழியும் = எந்த இடத்தும், எத்துணையும் = எந்த அளவேனும் - ஈதல் = கொடுத்தல் - மிக இனிதே = (இம்மை மறுமைக்கு) மிகவும் புண்ணியமாகும் - (அது) செவ்வி = திருமகள் - நலஞ் சேர்க்கும் = எல்லா நன்மைகளையுஞ் செய்யும் - சிறப்பு = மேன்மையைத் தரும்.

யாராயினும், எச்சமயமாயினும், எந்த அளவாயினும் ஈதல் நல்லதே. தன் உடல் பொருள் ஆவியால் பிறர்க்குத் திறனுள்ளவரையில் உதவுவதே ஈகையெனப்படும். நாட்டுப்பணி, தவம், அன்னதானம், கல்வி கற்பித்தல் முதலியன ஈகையாகும். தருமவானுக்குத் திருமகளருளால், புகழ், பொருள், அருட் செல்வங்கள் வந்து எய்திச் சிறப்புண்டாகும். எத்துணையேனும் ஈதல் இனிதே.

4. மிடியிருள் நீங்க, மெலிந்தோருக் கீதல்,
படியில் நலமாம் பயன்.

மெலிந்தோருக்கு = (வறுமை மடமையால்) வாடினவருக்கு - மிடி = வறுமையும் - இருள் = அறியாமையும் - நீங்க = விலக - ஈதல் = உதவுதல் - படியில் = உலகில் - நலமாம் பயன் = இன்பமுறும் பலனைத் தரும்.

பணமும், சோறும் பயத்தல் பெரிதல்ல. உலகின் பாவங்களுக்கு அடிப்படையான, வறுமையும் மடமையும் நீங்கும்படி தொழிலறிவையும், அறவுணர்ச்சியையும் கொடுத்தலே உலகில் எல்லா நலங்களும் உண்டாக்கும். குடிசைத் தொழில்களைப் பெருக்கி, சிறந்த ஆசிரமக்கல்வி யளித்தலே மிடியிருள் நீங்கும் ஈகை. நாட்டுப் பொருள்களை ஆதரித்தல், கதர் உடுத்தல், அயற்பொருள் விலக்கு, அயற்பொறி விலக்கு, நாட்டின் மானங்காத்தல் முதலியவை ஈகையின் பாற்படும். மிடியிருள் நீங்கப் படிநல மோங்கும்.

5. ஈகையுள் ளீகையா மின்கல்வி; பெற்றவனுக்
கேகுழி யெங்கு மிசை.

இன் கல்வி = (கல்வியியல் வகுத்த) இனிய வித்யாதானம் - ஈகையுள் ஈகையாம் = எல்லா தருமங்களிலும் மேலான தருமமாகும் - பெற்றவனுக்கு = அக்கல்விப் பயனை யடைந்தவனுக்கு = ஏகுழி எங்கும் = சென்ற விடமெல்லாம் - இசை = புகழுண்டாகும்.

கல்வி கொடுப்பதே சிறந்த கொடையாகும். பிரமச்சரியக் கல்வியால் நாட்டில் அறிவும், ஒழுக்கமும் ஆற்றலுஞ் செல்வமுமுள்ள வீரர் பெருகுவர். கல்வி பயிற்றுவித்தல், ஆசிரமமமைத்தல், நூல் வழங்கல், நல்ல நூலெழுதல், வெளியிடல், மாணவருக்கு அன்னமிடல் முதலியன சிறந்த தர்மமாகும். கல்வி கொடுத்தோன் கண்ணைத் திறந்தோன்.

## 2. முயற்சி

1. **தங்கு முயற்சியாற் சாராத தொன்றில்லை,**
**கங்கை கொணர்ந்தோன் கரி.**

தங்கும் முயற்சியால் = உறுதியான, உழைப்பால் - சாராதது, ஒன்று இல்லை = நம்மை வந்து அடையாத பொருள் எதுவுமில்லை - கங்கை கொணர்ந்தோன் = பகீரதன் - கரி = உதாரணம்.

பகீரதன் பெருந் தவமுயற்சியால் வானுலகினின்று கங்கையைக் கொண்டு வந்தான். இமயமலைக்கு அப்புறம் சென்று கொண்டிருந்த கங்கையை இப்புறந்திருப்பி வங்காளத்திற் பாயும்படி செய்தான் என்று ஆராயப்படுகிறது. தீவிரமான தவ முயற்சியால் ஆகாத காரியம் எதுவுமில்லை. தோல்வியை வெற்றிக்குப் படிகளாகக் கொண்டு மேன்மேலும் முயலுக. முயற்சித் திறத்தால் முடியாததில்லை.

2. **இரப்பா னிழப்பான்; இளகியே யீய**
**வுழைப்பானைச் சேரும் உயர்பு.**

இரப்பான் = (சோம்பேறியாக) யாசிப்பவன் - இழப்பான் = (மானம்) ஒழிவான் - இளகியே = மனமிளகி, இரக்கங்கொண்டு - ஈய = தரும்படி - உழைப்பானை = வேலை செய்பவனை - உயர்பு = பெருமை - சேரும் = அடையும்.

ஒரு வேலையுஞ் செய்யாமல் பிச்சை யெடுப்பவனும், தகாத கூலிக்குக் கெஞ்சுவோனும் சுயமரியாதையை யிழப்பான். தன் உழைப்பினால் திறமையைக் காட்டி ''இவன் உழைப்பிற்கு எவ்வளவு வேண்டுமெனிலும் தரலாம்'' என்று மெச்சப்படுவோன், தக்க பரிசால் மதிக்கப் படுவான். உழைப்பால் வருவது பிழைப்பும் புகழும்.

3. நம்பு; நினை முயல்; நாடொருமை; ஞானமாம்
இன்பம் பெருகும் இனிது.

நம்பு = (காரியம் கைகூடுமென்று) உறுதிகொள் - நினை = இடைவிடாமல் தியானஞ்செய் - முயல் = முயற்சிசெய் - நாடு ஒருமை = அக்காரியத்திலேயே ஒன்றுபடு - ஞானமாம் = ஞானசித்தியாகும்; - இனிது இன்பம் பெருகும் = நன்றாகப் பேரின்பம் பெருகும்.

அத்யாத்ம முயற்சி அவசியம் ஒவ்வொருவரும் செய்ய வேண்டும். வினையாற்றி விடுதலை பெற்றுக் கடவுளின்பமடைய வேண்டும். முதலில் கடவுள் நம்பிக்கையும், தியானமும், பின்பு உடலை மறந்து யோக முயற்சி செய்தலும் வேண்டும். பிறகே சத்தியப்பொருள் இது என்று அறியப்படும். அதன் மயமாகிப் பேரின்பமடையலாம். ஒன்றி முயன்றால் உயர்களிப் பெய்தும்.

4. முயற்சிக் களிப்புற்றே மூவழுக்கு மேகின்,
துயர்வினை யில்லை துணிபு.

முயற்சி = ஞானமுயற்சியின் - களிப்பு, உற்றே = ஆனந்தம் பெற்றே - மூவழுக்கும் = மன மொழி மெய் யழுக்குகளும் - ஏகின் = நீங்கினால் - துயர்வினை இல்லை துணிபு = (மாயையால் வரும்) துன்பங்கள் இல்லையென்பது நிச்சயம்.

மூவழுக்காவது மனத்திற் காமம், வாயிற்பொய், உடலிற் சோம்பல் நோய். தன்னை யறிந்தவன் உலகையும் அறிந்து பந்த விடுதலை யாவான். முத்தூய்மையுற்று சுத்தநிலை பெறுவான். மனோ வாக்குக் காயத்திலுள்ள அழுக்கு அற்றால், திரிகரணசுத்தி (முத்தூய்மை) எய்தும். சுத்தனுடன் ஒன்றில் பேரின்பமடையலாம். பிறகு துன்ப மேது? தூய்மையுங் களிப்புந்துயர்வினை போக்கும்.

5. முயல்வானைச் சேர்ந்திடுமே முன்றிருவே, சோம்பித்
துயில்வோனைத் தௌவை தொடர்ந்து.

முயல்வானை = நல்வினை முயற்சியுள்ளவனை - முன் = முன்னே - திருவே = இலக்குமிதேவி தானாகவே - சேர்ந்திடும் = அடைவாள் = சோம்பி = (தன்வினை மறந்து) வீண் போதுபோக்கி - துயில்வோனை = மாயையில், மயங்கினவனை - தௌவை = மூதேவி - தொடர்ந்து சேர்ந்திடும் = பின்பற்றிக் கூடுவாள்.

சுறுசுறுப்பாக நன்முயற்சி செய்வோனை சீதேவி யடைந்து எல்லா இன்பங்களும் அருளுவாள். சோம்பேறியை மூதேவியடைந்து எல்லாத் துன்பங்களும் தருவாள். முயற்சியில் ஆத்தாள்; அயர்ச்சியில் மூத்தாள்.

## 3. கைத்தொழில்

1. **எத்தொழிலின் கைத்தொழிலே யேற்றமாம்; அத்தொழிலை,**
**அற்றார் திறமற் றவர்.**

எத்தொழிலின் = (ஜீவனத்திற்குரிய) எல்லாத் தொழில்களைக் காட்டிலும், - கைத்தொழிலே = நமது கைகால் அவயவங்களைப் பயன் படுத்திச்செய்யுந்தொழிலே - ஏற்றமாம் = சிறந்ததாகும் - அத்தொழிலை = அக் கைத்தொழில் - அற்றார் = இல்லாதவர் - திறம் அற்றவர் = (சுதந்திர மாகப் பிழைக்கும்) சக்தியற்றவராவார்.

தன் தேவையளவு சம்பாதிக்க ஒவ்வொருவரும் கைத்தொழில் பழகுதல் வேண்டும். குடிசைக் கைத்தொழில்களால், தன் உண வுடைத் தேவைகளை ஈட்டலாம். பொறுமையும், எளிமையும், புலன் களுக்கு நல்ல பயிற்சியும், மனதிற்கு நல்ல அடக்கமும், தேகபலமும் கைத்தொழிலால் உண்டாகும். அடிமை உத்யோகத்தைவிட குடிசைத் தொழில் செய்து பிழைத்தல் மேன்மையானது. கைத்தொழில், முயற்சி மெய்த் தொழிலாகும்.

2. **நாட்டுத் திரவியமந் நாட்டாரே துய்த்திடவே**
**யீட்டும் முயற்சி யினிது.**

நாட்டுத் திரவியம் = தேசச் செல்வம் - அந் நாட்டாரே = அந்தந்த தேசமக்களே - துய்த்திடவே = அனுபவிக்கவே - ஈட்டும் முயற்சி = ஜீவ னத்திற்காகப் பொருள் தேடும் வேலை - இனிது = மேலானது.

அந்தந்த நாட்டின் செல்வம் நாட்டிலேயே சுற்றும்படியான தொழில்களைச் செய்தல் வேண்டும். நமது பொருளாதாரத்தை வெளி நாடுகளுக்குக் கொள்ளை கொடுக்குந் தொழில் நன்றன்று. அயற்பொறி கள், அயற்சாமான் வாணிபம், பருத்தி ஏற்றுமதி முதலியன நாட்டுப் பொருளை ஓட்டுந் தொழில்கள். சுதேசிச் சாமான்களைப் பெருக்கி ஆதரித்து, பரதேசப் பொருள்களைத் தீண்டாவிடின் நாட்டின் பொருள் நாட்டிலேயே சுற்றும். கதர் உற்பத்தி ஒரு உதாரணமாகும். செய்யுந் தொழிலாற் செழிக்குக நாடு.

3. **இன்மை யிருளே யிடவலமாம் பாவக்கை;**
**நன்மைத் தொழிலால் நலி.**

இன்மை = வறுமையும் - இருளே = மடமையுமே - பாவக்கை = பாபத்தின் கைகளில் - இடம், வலம் ஆம் = இடது பக்கமும் வலது

பக்கமும் ஆகும் - (இவ்விரண்டையும்) நன்மை = நாட்டிற்கு நலஞ்செய்யும் - தொழிலால் = கைத்தொழில் முயற்சியால் - நலி = போக்குவாயாக.

பாபாசுரனுக்குக் கவந்தனைப் போன்று, வறுமையும் மடமையும் வலது இடது கைகளாக அமைந்துள்ளன. அவ்விரு கைகளால் பாபாசுரன் மக்கள் நலத்தை நலிக்கிறான். ஒவ்வொருவரும் பாபமற்ற தொழில் முயற்சி செய்தால் அவன் கைகள் இற்றுவிழும். நூற்றல், நெசவு, பயிர்த் தொழில் இம்மூன்றையும் பெருக்கி, நம் நாட்டு மூலப் பொருள்களால் குடிசைத் தொழில்களை வளர்த்துப் பிழைப்புண் டாக்கினால் தேவையளவு உடை யுணவிற்கு ஒவ்வொருவரும் அடைய முடியும், வறுமை நீங்கும். அது நீங்கின், அடிமைப் புத்தியும், பொய்யுங் களவும் விலகி, ஒழுக்கமும், ஆத்ம விசாரணைக்கு அவகாசமும் ஏற் பட்டு மடமையுந் தீரும். தூய நூலாராய்ச்சிக்கு நேரங் கிடைக்கும். நாட்டிற்கேற்ற நலமுள கல்வியால், இருள்மிடி நோயை இல்லை யென் றாக்கலாம். அயற்பொருள் மறுப்பும், சுயப்பொருள் விருப்பும் பெற்று முயன்றால், வற்றும் வறுமை. இருண்மிடி யற்றார் பெருமகிழ் வுற்றார்.

4. **தன்னாடைக் கேயயலைச் சார்ந்திருக்கு மப்பேதை**
**தன்னிலெவன் கேடடைவன் சாற்று.**

தன் ஆடைக்கே = தனக்குத் தேவையான துணிக்கும் - அயலை = அன்னியனை - சார்ந்திருக்கும் = அண்டி அடிமையாயிருக்கும் - அப்பேதை தன்னில் = அந்த அறிவில்லானைக் காட்டிலும் - எவன் கேடு அடைவன் சாற்று = வேறு யார் சீரழிவன் என்பதைச் சொல்.

தினம் அரை மணி நேரம் நூற்றால் தன் ஆடையைச் சுதந்திரமா யடையலாம். நம் நாட்டுப் பஞ்சை ஏற்றுமதி செய்யாமல் இராட்டி னத்தில் ஏழைகளைக் கொண்டு நூலாக்கிக் கைத்தறிகளிற் போட்டுக் கதரணிந்தால், நாடும் உய்யும் நாமும் உய்வோம். நம் நாட்டில் நூற்று நெய்ய வேண்டிய கருவிகளிருக்கும்போது அயலாரிடம் ஆடை கொள்ளுவது வீட்டுச் சோற்றைவிட்டு விலைச் சோற்றிற்கு அலைவ தொக்கும்; அயலுடை யணிந்தவர் அம்மணத்தோரே. கதருடுத்தினால் நாட்டின் பொருள் நாட்டிலிருக்கும். ஏழைகள் பிழைப்பர். ஆண்மை பிறக்கும், அவமானம் நீங்கும். பெருமைப் பூணாம் அருமைக் கதரே.

5. **தன்மட்டில் தன்குடிலிற் றான்செய்யுங் கைத்தொழிலால்,**
**தன்னாடு வாழுந் தழைத்து.**

தன் மட்டில் = தன் தேவையளவு - தன்குடிலில் = தன் சிறுமனையில் - தான் செய்யும் = தன் சொந்தக் கைகளாற் செய்யும் - கைத்தொழிலால் = குடிசைக் கைத்தொழிலாலே - தன் நாடு = தன் தேசமெல்லாம் - தழைத்து வாழும் = செல்வமுற்று வாழும்.

குடிசைக் கைத்தொழில்களால் அவரவர் உணவுடைக்குத் தேவையளவு சம்பாதித்தால், வறுமையும் சோம்பலும் அயல்நாட்டுக் கொள்ளையும் நீங்கும். நமது செல்வம் நம் நாட்டினருக்கே பயன்படும். போட்டியின்றி அனைவருக்கும் வேலை கிடைக்கும். அயலாருக்கு அடிமையாகாது சுதந்திரமாகப் பிழைக்கலாம். அடிமை வேலைகள் நீங்கும். நாட்டின் மூலப் பொருள்கள் நாட்டிலேயே செய்பொருள்களாக மாறும். தொழிலும், பொருளும், உணவும், உடையும், சுயமரியாதையும், ஆண்மையும், செல்வமும், களிப்பும் ஓங்கும். அரிசி தீட்டல், நூற்றல், நெசவு, பஞ்சடித்தல், பாய் பின்னல், கூடை முடைதல், சாயம் போடல் முதலியன குடிசைத் தொழிலுக்கு உதாரணம். மிடியைத் தீர்ப்பது குடிற்றொழிலாகும்.

## 4. உழவு

1. ஒருபயி ராக்கி யுணவீவான் பாரிற்
பெருமக னென்றவனைப் பேசு.

ஒரு பயிர் ஆக்கி = ஒரு பயிரை விளைவித்து - உணவு ஈவான் = ஆகாரத்திற்கு வழி செய்பவன் - பாரில் = உலகில் - பெருமகன் என்று = பெரியோன் என்று - அவனை, பேசு = அவனைப் புகழுவாயாக.

பயிர்த்தொழில் செய்பவன் பசிப்பிணி யொழிக்கிறான். அவனே மனிதரை உண்பிக்கிறான். அவனாலேயே மனிதர் உயிர்நிலை நிறுத்துகின்றனர். ஆதலின் அவனே சிறந்த புண்ணியன். பயிர்த்தொழில் உலகிற் குயிர்த் தொழிலாகும்.

2. பயிர்செய்வான் வாழ்க்கையே பாங்குமற் றெல்லாம்,
அயல்சார்ந்த வாழ்வே யறி.

பயிர், செய்வான், வாழ்க்கையே = விவசாயியின் ஜீவனமே - பாங்கு = நேர்மையானது - மற்றெல்லாம் = ஏனையவெல்லாம் - அயல் சார்ந்த வாழ்வே அறி = பிறரை அண்டிப் பிழைக்கும் வாழ்வென்பதை யுணர்வாயாக.

பயிர்த் தொழிலே சுதந்திரமானது. இவ்வுலகெல்லாம் ஏர் முனை வணங்கும். பயிர்த் தொழிலாளி பாரை ஊட்டுகிறான். இயற்கையுடன் பழகுகிறான். நோயற்று, எளிமையுங் களிப்புமுற்று வாழுகிறான். உணவுடைத் தேவையிருக்குமட்டும் விவசாயத் தொழில் அழியாது.

3. தானுழு துண்பான் றனிவாழ்வே மண்ணுலகில்,
ஊனிலதாம் வாழ்வா யுறும்.

தான் உழுது உண்பான் = தன்னுணவைத் தானே பயிர் செய்து புசிப்பவனின் - தனி வாழ்வே = சுயேச்சையான வாழ்க்கையே - மண் ணுலகில் = (பயிர் விளையும்) மண்ணாலான வுலகில் - ஊன் இலதாம் வாழ்வாய் = குற்றமற்ற ஜீவனமாக - உறும் = பொருந்தும்.

அடிமைத்தனம், பிறரை யாசித்தல், மானத்தை விற்றுக் கஞ்சிக்கு விற்றல் முதலிய குற்றமின்றி சுயேச்சையாக விவசாயி வாழ லாம். விவசாயத் தொழிலால் கூட்டுறவுடன் வசிக்கலாம். உழுதுண் பானே பழுதில் லாதான்.

4. ஏரின் றொழிலின்றேல், ஏதூரஃ தின்றேலிப்
பாருலக மேதோ பரந்து.

ஏரின், தொழில் = பயிர்த்தொழில் - இன்றேல் = இல்லா விடின் - ஏது = ஊர்கள் ஜீவிப்பதேது? - அஃது இன்றேல் = ஊர் பிழைக்கா விடின் - இப்பாருலகம் ஏதோ பரந்து = இந்த வுலகம் எப்படி (உயிர் களால்) பரவி இருக்கும்.

பயிர்த்தொழில் இல்லாவிடின் பசி வருந்தி ஊரிலுள்ள உயிர்கள் மடியும். ஊர்களின்றி உலகமு மில்லையாகும். ஒவ்வொரு ஊரிலும் அதற்கேற்ற பயிர்கள் விளைக்கப்பட வேண்டும். கலப்பை முனையிற் காசினிக் குயிராம்.

5. கலப்பை இராட்டினமுங் கைக்கணியா யெய்தின்,
நிலவறுமை நீக்குமே னின்று.

கலப்பை, இராட்டினமும் = (உழுதுண்ண) கலப்பையும், (நூற்றுடுத்த) இராட்டினமும் - கைக்கு அணியாய் எய்தின் = மாந்தர் கையில் அழகாக அமைந்தால் (மாந்தர் உழுது, நூற்றால்) - மேல் நின்று = வாழ்விற்கு மேலான துணையாயிருந்து - நில வறுமை நீக்கும் = உலகின் தரித்திரத்தை (அவை) யொழிக்கும்.

கலப்பையால் உழுது, இராட்டையால் நூற்றுப் பிழைக்கத் தொடங்கினால், உலகில் வறுமையே இராது. உணவுடைப் பஞ்ச மிராது. தன் மதிப்பும், தன் முயற்சியும் ஓங்கும். கைக்கணி யென்பவை கலப்பையு மிராட்டும்.

# 5. பொறிகள்

1. **ஆற்றலைப் போக்கி யடிமைப் படுத்திடுமே,**
**போற்றுதல் போலப் பொறி.**

பொறி = (பல பேர் செய்வதைத் தானே செய்யும்) யந்திரம் - போற்றுதல் போல = நம்மைக் காப்பாற்றுவது போலத் தோன்றி - ஆற்றலைப் போக்கி = மனிதனின் உழைப்பு வலிமையைச் சிதைத்து - அடிமைப்படுத்திடுமே = நம்மை அடிமையாக்கும்.

யந்திரங்கள் பல பேர் செய்வதைத் தானே செய்வதால் பலர் வேலையின்றிச் சோம்பலாகின்றனர். கைத்தொழில் அனைவருக்கும் சமமாகத் தேவையளவு கொடுக்கும். யந்திரம் பணக்கார முதலாளியைப் பணக்காரனாக்கும். பல்வகைப் பிணி செய்யும். மினுக்கிய அரிசி பிணிக்கிடமாகும். பொறியாலெய்தும் வறுமையும் பிணியும்.

2. **ஏரோசை நெஞ்ச மிராட்டினத்தி னின்னோசை,**
**பாரினோங் காரவிசை பார்.**

ஏரோசை = கலப்பையின் கடவோசை - நெஞ்சம் = உலகிற்கு நெஞ்சத் துடிப்பைப் போன்றது - இராட்டினத்தின் இன் ஓசை = இராட்டினஞ் சுற்றுவதால் விளையும் இன்பமான நாதம் - பாரின் ஓங்கார இசை = உலகில் ஓங்கார நாதமாகும் - பார் = பார்த்து அறிவாயாக.

மனிதனுக்கு நெஞ்சத் துடிப்பும் சிதாகாசத்தில் ஓங்கார நாதமும் உயிருக்கு அடையாளம். அனைவரிடமும் ஓங்காரநாதம் உள்ளது. யோகிகளே அதனைக் கேட்பர். உலகிற்குக் கலப்பையொலி நெஞ்சத் துடிப்பு; இராட்டையொலி ஓங்காரம். யந்திரத்தின் படபட ஓசை நாட்டின் நலத்தைத் தகர்க்கும் சத்தமாகும். கலப்பை யிராட்டும் நிலத்துயி ராகும்.

3. **கலப்பை யிராட்டினமுங் கண்ணிலத்தி னோர்க்கே,**
**நலமார் உயிர்நிலையே நாடு.**

கண்ணிலத்தினோர்க்கே = இடமகன்ற உலகோருக்கே - கலப்பை, இராட்டினமும் - கலப்பையும், சக்கிரமும் - நலம் ஆர் = மங்களம் பொங்கும் - உயிர்நிலையே = ஜீவாதாரமேயாகும் - நாடு = (அக்கருவிகளை) விரும்பிக் கொள்.

உணவுடைக்கு உதவி, கலப்பையும் இராட்டினமும் உலகின் உயிர்களைக் காக்கின்றன. இவை மனிதனுக்கு இன்றியமையாதவை. கண்ணெனப் படுவது கலப்பையு மிராட்டும்.

4. பொறியா லொருவன் பொருளெய்தும்; ஏழை
வறுமை யுறுவான் மதி.

பொறியால் = (அயல்நாட்டு) யந்திரத்தால் - ஒருவன் = ஒரு முதலாளி - பொருள் எய்தும் = பணத்தை அடைவான் - ஏழை = (உழைப்பாளியான) எளியவன் - வறுமை யுறுவான் = ஏழ்மை யடைவான் - மதி = எண்ணிப் பார்ப்பாயாக.

பல ஏழைகளுக்குப் பிழைப்பை யொழிப்பதன்னியில், வேலை செய்யாத முதலாளிக்கு யந்திரம் பணந்தருகிறது. ஒருவனிடமே தேவைக்கு மேற் பணங் குவிவதால் பலர் ஏழையாகின்றனர். யந்திரத்தில் வேலை செய்யும் கூலிகளுக்கும், கூலி போதுமானதில்லை. நோயும் வாட்டுகிறது. பொரு ளாளிக்கே யுதவிடும் பொறியே.

5. அயற்பொறி தேயத்தின் ஆக்கத்தை யெல்லாந்
துயில்தந்து கொள்ளுந் துணிந்து.

அயற்பொறி = அன்னிய நாட்டின் யந்திரங்கள் - தேயத்தின் = நமது நாட்டின் - ஆக்கத்தை எல்லாம் = செல்வ முன்னேற்ற மனைத்தையும் - துணிந்து = வேண்டுமென்றே - துயில் தந்து = நம்மைச் சோம்பேறியாகத் தூங்கவைத்து - கொள்ளும் = கொள்ளைகொள்ளும்.

அயல்நாட்டினின்று வரவழைக்கும் யந்திரம் நாட்டின் செல்வத்தைக் கொள்ளையடிக்கிறது. அயலை எதிர்பார்த்துப் பிழைக்கச் செய்கிறது. தன்னுதவியும் மனித சக்தியும் உழைக்கும் ஆற்றலும் அதனால் அழிகிறது. சுகம்போலத் தோன்றி அது துன்பமாக முடிகிறது. குடிசைத் தொழில்களை அழிக்கிறது. நாட்டைத் தொழிற் சோம்பேறி யாக்குகிறது. அயற்பொறி யாகுங் கயற்கண் வேசை.

அறநூல், முயற்சியியல் முற்றிற்று.

--------

# 11. பிணியறுவியல்

பிணியற்றுத் தூயவாழ்வு வாழவேண்டியது அனைவர் கடனு மாகும். உலகில் உடல் நோய், மனநோய், வறுமை நோய், மடமை நோய் முதலிய நோய்களின் தன்மையும் அவற்றின் மருந்தும், தூயவாழ்வின் பாங்கும் இவ்வியல் கூறும்.

## 1. பிணி

1. பசியும், நசையறு பட்டாலிப் பூவே,
வசையறுந் தோங்கிடும் வான்.

பசியும் = ஏழைகளின் பசிப்பிணியும் - நசை = (பணக்காரர் தேவைக்கு மேலே சேர்க்கும்) பேராசையும் - அறுபட்டால் = நீங்கி னால் - இப்பூவே = இந்த உலகே - வசையறுந்து = குற்றமற்று - ஓங்கிடும் = மேலாக விளங்கும் - வான் = விண்ணுலகாகும்.

ஏழைகளுக்குப் பசிப்பிணியும், செல்வரின் பேராசையும் ஒழிந் தால் இந்த வுலகம் வறுமை நீங்கிக் களிப்பெய்தும். பணக்காரன் தன் செல்வத்தை ஏழைகளுக்குப் பகுத்தனுபவித்தல் வேண்டும். பிறருக் குதவவே பெற்றனஞ் செல்வம் என்று கருத வேண்டும். ஏழைகளுக்குப் பிழைப்புண்டாக்க வேண்டும். பசியோடு வறுமையும், நசையோடு மடமையும் ஒழியுமாதலின் பாபமின்றி உலகம் புண்ணியத்தாலே விண்ணென விளங்கும். ஆசையற்றால் பொறாமை நீங்கி மனத்தழுக் ககன்று வாழ்வு தூயதாம். ஆசை மிடியிலேல் அவனியும் வானே.

2. தீயமனத் தாலுந் திறம்பு செயலாலும்,
நோய்பிறக்கு மென்றே நுவல்.

தீய மனத்தாலும் = கெட்ட எண்ணங்களாலும் - திறம்பு செயலாலும் = (அறவழியினின்று வேறுபடும்) பிழையான நடத்தை யாலும் - நோய், பிறக்கும் என்றே = பிணி யுண்டாகியே தீருமென்று - நுவல் = சொல்லுவாயாக.

புலன்கள் நெறிதப்பி, மனத்தைக் கெடுத்துத் தீய நினைப்பு களை யுண்டாக்குவதால்தான் மனச் சமாதானம் கெட்டுப் புத்தி மயங்கி நோய் உண்டாகிறது. பிணிகளுக்கெல்லாம் பிறப்பிடம் மனமே. உணவு, உறக்கம், போகம், ஆசை, பொறாமை, அழுக்கு முதலியவற்றின் மிகை யால் பிணி பிறக்கிறது. மிகைபெறு முணவே பகை பெறும் பிணியாம்.

உழைப்புக்குத் தக்க உணவைப் பசித்துப் புசித்து, குடலையும் உடலையும் மனத்தையுஞ் செயலையும் சுத்தமாக வைத்துக்கொண்டால் நோய் அணுகாது. இயற்கை நெறியை விட்டுப் பிசகும்போது இயற்கையன்னை நமக்குச் செய்யும் எச்சரிக்கையே நோயெனப்படுகிறது.

3. தூயவுடை யூணுந் துணையாயின் நல்வாழ்க்கை,
நோயேன்? மருந்தேன் நுவல்.

தூய = பரிசுத்தமான - உடை, ஊணும் = ஆடையும் ஆகாரமும் - நல் வாழ்க்கை = நல்ல நினைப்புஞ் செயலுமுள்ள வாழ்வோடும் - துணையாயின் = கூடச்சேர்ந்தால் - நோய் ஏன் = ஏன் பிணிவரும் - மருந்து ஏன் = (பிணியில்லேல்) மருந்து எதற்கு - நுவல் = சொல்வாயாக.

மருந்தின் தேவையே மாசிலோர்க் கில்லை. நல்ல வாழ்வும், சுத்தமான ஆகார நியமமும், சுத்தமான ஆடையும், உடைமைப் பொருள்களும் இருந்தால் நோய் அணுகாது. மருந்தும் வேண்டாம். கடவுளன்பும், கருணை மனமும், கவலையின்மையும், காமறு சிந்தையும், பிறர்க்கென வாழ்வும், அருட்பணி யாற்றலும், நல்ல வாழ்வென்று நவிலுறப் பெறுமே. முத்தூய்மை நெறியே நல்வாழ்வாகும். ஐந்து வேளை கடவுள் வழிபாடு, காலை 3-மணிக்கு எழுதல், தேகப் பயிற்சி பிராணா யாமசாதனம், காற்றும் வெயிலும் பட வாழுதல், இரண்டு தடவை தேய்த்துக் குளித்தல், வீட்டைச் சுத்தமாக வைத்துக் கொள்ளல் முதலியன நோயணுகா வகை. ஒரு கோவணமும் கதர்த் துண்டும் போதிய ஆடையாகும். குளிர் நாட்களில் போர்த்துக்கொள்ள ஒரு ஆடை கொள்ளலாம். பல சட்டை போடல் பிணிக் கோட்டைக்குள்ளிருப்பதே யாகும். காலை 6 மணிக்கு மேலும், மாலை 6 மணிக்குள்ளும் வெற்றேப்பங்கண்டு பசியெடுத்து ஒரு ஏப்பம் வருமட்டும் மிதமாக நன்கு மென்று உண்ண வேண்டும். மலச்சிக்கலுக்கு இடந்தரக்கூடாது. மட்டிலா வுணவே மலச்சிக்க லாகும். நோய் வந்தால் தண்ணீர் குடித்துப் பட்டினியிருத்தல் வேண்டும். மருந்தே வேண்டாம். இயற்கையான பசி வருமட்டும் பட்டினியிருத்தல் வேண்டும். மாதம் இருநாள் பட்டினியிருத்தல் வேண்டும். இத்தகைய தூய வாழ்வில் நோயணுகாது.

4. உண்ணா விரதம் உடலின் பிணிபோக்கித்
திண்கருத்து மீயுந் திறம்.

உண்ணா விரதம் = உபவாஸம் - உடலின் பிணிபோக்கி = தேகத்தின் நோயைத் தீர்த்து - திண் கருத்தும் = உறுதியான மனத்தையும் - ஈயும் திறம் = தரும் சக்தியேயாகும்.

பசி யழைத்தால்தான் புசித்தல் முறையாகும். மலம் வைத்து உண்ணுவதே மந்தமும் பிணியுமாகும். மலச்சிக்கல், அஜீரணம், வயிற்று நோய், மனக்கலக்கம், காய்ச்சல் முதலிய எந்த நோயுற்றாலும் பட்டினி யிருத்தல் வேண்டும். குடலுக்கு நமது திணிப்பினால் மிதமிஞ்சி வேலை கொடுத்தால் அது தளர்ந்து வேலை நிறுத்தஞ் செய்கிறது. அப்போது பட்டினியிருந்து அதற்கு ஓய்வு கொடுத்தால், முன்னே பாக்கியிருந்த வேலையைச் செய்து புதிய வேலையைச் செய்யத் தயாராகிறது. பட்டினி நமது உடம்பையும் மூளையையும் சுத்தம் செய்து சகிப்புத் தன்மையைப் பெருக்கி மனதை உறுதியாக்குகிறது. மாதம் இரண்டு நாள் அனைவரும் பட்டினி யிருக்கலாம். தவத்தினரும் பிரமச்சாரிகளும் உணவைக் குறைத்து அடிக்கடி உண்ணாவிரதமிருத்தல் வேண்டும். நோய் வந்தபோது, அடிக்கடி தண்ணீர் குடித்து நல்ல பசியும், விடுதலை யுணர்ச்சியும் வரும்வரை உண்ணாவிரதமிருத்தல் வேண்டும். அப்போது தினந்தோறும் வஸ்தி (எனிமா) வைத்துக்கொண்டால் உடலின் அழுக்கு கள் கழிந்துவிடும். பட்டினியாலே கெட்டது விலகும்.

5. **வாழ்வுழைப்புக் கூலிசிறு மக்கள் வருந்தாதே**
**ஏழ்மைபோம் நாளே யினிது.**

வாழ்வுழைப்பு = உலகம் உயிர்வாழும் வேலை செய்தும் - கூலி சிறு மக்கள் = சிறிதளவு கூலியையே பெறுந் தொழிலாளர் - வருந் தாதே = (வறுமையால்) துன்பப்படாமல் - ஏழ்மைபோம் நாளே = வறுமை நீங்கும் காலமே - இனிது = நல்ல காலம்.

உலகில் உழைத்தும் பசியாற உண்ணமுடியாது வருந்துந் தொழிலாளரின் வறுமைப்பிணி யொழிய வேண்டும். தொழிலாளரின் உழைப்பினால்தான் உலகம் உணவுடைத் தேவைக ளடைந்து பிழைக் கிறது. ஆனால் அவர்கள் ஜீவனத்திற்குக் காணாத கூலிகள் பெறுகிறார் கள். முதலாளிகள் குவிக்கிறார்கள். கூலிகள் உழைத்துத் தவிக்கிறார் கள். உழைப்பாளிகள் என்று களிப்புடன் வாழுகின்றார்களோ அன்றே உலகிலுள்ள வறுமை நோய் அகலும். உழைப்பவர் களிக்கின் றழைத்திடுமுலகே.

## 2. பணம்

1. **பணத்தா லுலகு படுதுயரைப் பார்மின்!**
**குணத்தோரும் வீழுங் குழி**

பணத்தால் = காசினால் - உலகு, படு, துயரை = உலகோர் படுந் துன்பத்தை - பார்மின் = பாருங்கள் - (அப்பணமே) - குணத்தோரும், வீழும் குழி = நற்குணமுள்ளவர்களும் நெறி பிசகி விழும் பள்ளமாகும்.

உலகில் பணம் பஞ்சமா பாதகத்திற்கும் காரணமாயிருக் கிறது. அதன் மாயையால் நன்னெறி யுள்ளவரும் அசுத்தமாகின்றனர். பணத்தாசை என்பது பெரிய துயரக் குழி. அதில் வழுக்கி விழாதவர் மிகவும் உத்தமரே. ஆசை, பொறாமை, கொலை, களவு, கடன், அச்சம், கற்பழிவு, லஞ்சம், பொய் முதலிய தீய குணங்களுக்குப் பணமே முதலாயுள்ளது. பணப்படு குழியிற் குணத்தரும் வீழ்வர்.

2. அடிமை, கொலைபாவம், ஆசைமிடி யெல்லாம்
படர்பணத் தா லாகும் பவம்.

அடிமை...எல்லாம் = அடிமைத்தனம், கொலை, பாவம், காமம், வறுமை முதலிய தீமைகள் யாவும் - படர் பணத்தால் = பகை யான பணத்தால் - பவம் ஆகும் = உற்பவமாகும்.

பணம் சிலரைச் செல்வராக்கிப் பலரை ஏழையாக்கி, வறுமைக் குக் காரணமாயிருக்கிறது. பொய், திருட்டு, கொலை முதலியன அதைத் தொடருகின்றன. பணச் செருக்கில் பாவ புண்ணியங்கூடத் தோன்றாமற் போகிறது! எத்தனை கற்பழிவு! எத்தனை பிணிகள், வஞ்சம், லஞ்சம், பொய்கோள், இடம்பம், பேராசை, சோம்பல், கூத்தி, கொடுமை முதலிய பாவங்கள் பணத்தாசையால் வருகின்றன! பணத்தை நகை செய்து பெண்கள் அணிந்து நாட்டின் பொருளை வாழா வீணாக்குவது செல்வியைச் சிறையடைப்பது போலும். பரமஹம்ஸர், ஞானதேவர் முதலியோர் பொன்னை மண்ணோடு நினைத்தனர். பாவ மெல்லாம் பணத்திடை பிறக்கும்.

3. பண்டமாற் றுந்தன் பயிராகிப் பொன்குறையின்,
மண்ணில் மகிழுமாம் மா.

பண்டமாற்றும் = சாமானுக்குச் சாமான் மாற்றிக் கொள் வதும் - தன் பயிராகி = தான் விளைவித்த பயிரேயாகி - பொன் குறை யின் = பொன் மதிப்புக் குறைந்தால் - மா = சீதேவி - மண்ணில் மகிழு மாம் = பூமியில் மகிழ்ந்திருப்பாள்.

ஒவ்வொருவரும் அவரவருக்கு முடிந்த விவசாயஞ் செய்து பயிரைப் பெருக்க வேண்டும். அப்பயிர்களைக் கொடுத்தே தமக்கு வேண்டிய வேறு பொருள்களுக்கு மாற்றிக்கொள்ள வேண்டும். அப்போது பயிர்களுக்கு மதிப்பு ஏற்படும். தானியத்திரு நாட்டில் விளங்குவாள். பயிர்த் தொழிலாளிகள் மதிப்புறுவர். உலகில் உணவு அதிகமாகும். பஞ்சம் நீங்கும். வீண் செலவிற்கு இடமிருக்காது. உணவு பணமாக மாறுந் தீது

ஒழியும். பொன்னின் தீமை நோக்கியே அதைப் பூமிதேவி ஆழ மான சுரங்கங்களில் புதைத்தாள். பண்டம் பெருகிப் பயிர் பெருகி, உழைப்புப் பெருகி, உணவு பெருகி, உயிர் பெருகி, உள்ளம் பெருக வேண்டுமாயின், நாணயத்தை யொழித்தல் வேண்டும். பயிர் நலம் வேண்டின், பயிரால் வாழுக.

4. விளைபயிர்செய் ஏழை வெருளவே தூங்கிக்
களிபணத்தன் றீததனைக் காண்.

விளைபயிர் = பூமியினின்று உண்டாகும் பயிரை - செய் = செய் நேர்த்தி செய்து உண்டாக்கும் - ஏழை = எளிய உழைப்பாளி - வெருளவே = வறுமை யடிமையால் கலங்கவே - தூங்கி = போகத்தில் சோம்பி - களி பணத்தன் = களிக்கின்ற பணக்காரனின் - றீததனைக் காண் = தீமைகளைப் பார்ப்பாயாக.

தன்னலமுள்ள பணத்தன் தானும் போகச் சோம்பலில் அழிந்து, பிறரையும் கெடுக்கிறான். அவனுடைய செல்வத்தைப் பேணிப் பெருக்குபவன் ஏழை. அவனே பயிர்களை விளைவித்து அளக்கிறான். வறுமையால் வருந்துகிறான். சிறு கூலிக்குப் பேரூழியஞ் செய்கிறான். விருந்து, களியாட்டங்களில் பணத்தன் காலத்தைக் கொலை செய்து, பலர் அனுபவிக்க வேண்டியதை ஒருவனாகவே குவிக்கிறான். உழைப்பவன் வருந்தக் களிப்பவன் பணத்தன்.

5. நாணயமா மப்பெரிய நற்குணமுங் கொல்லி,
நாணயந் தீருவதெந் நாள்.

நாணயமாம் = நாணயம் என்று சொல்லப்படும் - அப்பெரிய = அந்தப் பெருத்த - நற்குணமுங் கொல்லி = நல்ல குணத்தையும் வீழ்த்தும் கொலையாளி - நாணயந் தீருவது எந்நாள் = உலகோர் மதிப்பினின்று நீங்குவது எந்த நாளோ!

உலகம் நாணயம் நீக்கி நற்பயிர் பேணுவது எந்நாளோ! நாணயம் நற்குணத்தவரையுங் கெடுப்பதால் அதற்கு நற்குணங்கொல்லி எனப் பட்டது. அதற்கு மதிப்பற்று உழைப்பிற்கும் பயிருக்கும் மதிப்போங்கு நாளே உலகின் வறுமையும், போகச் சோம்பலும், அடிமைத்தனமும் ஒழியும். பொன், மண்; பயிர், உயிர்; பண்டமாற்றால் வாழ்ந்தால் பணத் தேவையில்லை. வெளியூருகளுக்குப் போக, உண்டிற் சீட்டு களை உபயோகிக்கலாம். நாணயமென்பது நற்குணங்கொல்லி.

## 3. இடம்பம்

1. தேவைக்கு மேலாகச் சேர்த்தல் திருட்டேயாம்;
பூவிலும் ஏழ்மை புகும்.

தேவைக்கு மேலாக = (இடம்பமற்று வாழ) இன்றியமையாத பொருளுக்கு அதிகம் - சேர்த்தல் = குவித்தல் - திருட்டேயாம் = (பிறர் அனுபவிக்க வேண்டியதை) திருடுவதே யாகும் - (அதனால்) - பூவிலும் = உலகிலும் - ஏழ்மை புகும் = வறுமை வந்து சேரும்.

ஒவ்வொருவனுக்குந் தேவையளவு வேண்டியதை பூமிதேவி விளைவிக்கிறாள். சேர்த்து வைப்பதற்காகப் பொருள் ஏற்பட்டதல்ல. ஒருவன் தன்னலத்துடன் தன் தேவைக்கு மேல் சேர்க்கச் சேர்க்கப் பிறர் அனுபவிக்க வேண்டியதைத் தன் வீட்டிற் குவித்துப் பூட்டுகிறான். அதனால் பலர் ஏழையாகின்றனர். எளிய வாழ்விற்குப் போதுமான வீடு, நிலம், ஆடை, உழைப்பை மட்டும் வைத்துக்கொண்டு மீதியைப் பல ஏழைகளுக்குப் பிழைப்புண்டாகும்படி உபயோகிப்பதே செல்வத்தின் பயனாகும். தேவை யளவே யாவையுந் துய்க்க.

2. இடம்பந் தொலைந்தெங்கு மின்பத் தொழிலோச்சித்
துன்ப மிடியைத் தொலை.

எங்கும் = உலகெங்கும் - இடம்பந் தொலைந்து = வீண் ஆடம்பரத்தை நீக்கி - இன்பத்தொழில் = எல்லாருக்கும் இன்பஞ் செய்யக்கூடிய (விவசாயம், குடிசைத்தொழில்) தொழில் முயற்சிகளை - ஓச்சி = பெருக்கி - துன்பமிடியை = துயர் செய்யும் வறுமையை - தொலை = போக்குவாயாக.

வறுமை நீங்குவதற்கு இடம்பந் தொலைந்து எளிய வாழ்வு பெருகவேண்டும். தொழில் முயற்சி பெருகி அவரவர் உழைத்து உண்ண வேண்டும். பிறர் உழைப்பால் உண்பது நீங்க வேண்டும். எளிமையுந் தொழிலுங் களிப்பிற்கெழிலாம்.

3. விவகார மற்றே விரும்புதமர் நீதி
நவையின்றி யீதல் நலம்.

விவகாரம் = விசாரணைமன்ற விவாதங்கள் - அற்றே = ஒழிந்தே - விரும்பு தமர் = நீதியை விரும்பும் அவரவர் கிராமத்தார்

(பஞ்சாயத்தார்) - நீதி = நடு நிலையை - நவையின்றி = (லஞ்சம், அறியாமை முதலிய) குற்றமின்றி - ஈதல் நலம் = கொடுத்தல் மேன்மை யாகும்.

வழக்கு மன்றம் (கோர்ட்டு) செல்வதால் வீண் செலவும், அலைவும், தொல்லையுஞ் சள்ளையுமுண்டாகிறது. அற்பப் பயனே அரிதாக ஏற்படுகிறது. பொய்யும் வீண்வாதமும் கடனும் பொருட் சிதைவும் ஏற்படுகிறது. பணமில்லாதவர் அங்கு எட்டிப்பார்க்க முடியாது. கிராமப் பஞ்சாயத்தே வழக்குத் தீர்த்துக்கொள்ள நலமானது. விவா தமே உண்டாகாது, எளிமையும், இன்பும், ஒற்றுமையுமுற்று தேனீக்கள் போன்று கிராம சமுதாயத்தார் ஒரு தாய் மைந்தராய்ச் சேர்ந்து வாழ்ந் தால் விவகாரத்திற்கு இடமேயில்லை. வழக்கு நீத்தே செழிப்புடன் வாழு.

4. வீணணி யாடை, விருந்து, மணச்செலவுங்
காணாமை யின்கருவி காண்.

வீண் அணி = பயனற்ற ஆபரணங்கள் - ஆடை = வீண் உடுப்பு கள் - விருந்து = இடம்பமான சாப்பாடு - மணச் செலவும் = விவாகச் செலவுகள் முதலியவெல்லாம் - காணாமையின் = வறுமையின் - கருவி காண் = ஆயுதங்கள் என்பதை அறிக.

சாதாரண வாழ்விற்கு அதிகமாகச் செய்யும் வீண்மையே இடம்பம். இயற்கை அழகைச் செயற்கைப் பூண்களால் விலங்கு செய்தல், பல தொழில் முயற்சிக்காகும் பொருளைத் துருப்பிடிக்க வைப்பதாகும். இடம்பமான உடைகள் செருக்கும், செலவும், அழுக் கும் பிணியுமாகும். விருந்துகளால் நோய் பிறக்கிறது. பலர் பசிவருந்த நேருகிறது. விவாகம், சாவு முதலிய சடங்குகளுக்குச் செய்யும் வீண் செலவுகளால் கடன் ஏறுகிறது. இவற்றை நீக்கி ஆடம்பரமின்றி மனிதன் வாழ்ந்தால் வறுமையிருக்கக் காரணமேயில்லை. தேவைக்கு மேலே உடுப்பது சுமையே. அளவுக்கு மிஞ்சியுண்பது பிணியே. வீண்மைச் செலவு மிடியின் கருவி.

5. கட்கஞ்சாத் தீயிலைகள் காப்பி யிடம்பமிலேல்,
இப்புவியி லேதுமிடி யே.

கள், கஞ்சா = கட்குடியும் கஞ்சாப் புகைத்தலும் - தீயிலைகள் = புகையிலையுந் தேயிலையும் - காப்பி = காப்பிக் குடியும் - இடம்பம் இலேல் = வீண் ஆடம்பரமும் இல்லாவிட்டால் - இப்புவியில் = இவ்வுலகத்தில் - மிடியே ஏது = தரித்திரம் என்ற பேச்சே ஏது.

கட்குடியால் ஏழைகள் கூலியைப் பறிகொடுத்து மதிமயங்கி, சச்சரவிட்டு, குற்றங்கள் செய்து, தண்டனையடைந்து வறுமை தவிக்கின்றனர். தென்னஞ் சாற்றைக் கள்ளாக்காமல் வெல்லமாக்குவதாலும், தென்னையைக் கள்ளுக் குத்தகைக்கு விடாமலிருப்பதனாலும் கள்ளை ஒழிக்கலாம். பிராந்தி, விஸ்கி முதலிய விலைபெற்ற கள்ளைப் பணத்தர் ஒழித்தல் வேண்டும். அபின், கஞ்ஜா இவற்றை விளைவித்தலே பாவம். நல்ல பயிர் விளையக்கூடிய இடங்களில் தேயிலை, புகையிலை, காப்பி விளைவிக்கப்பட்டு, தீமை பெருகுகின்றது. இவற்றால் பல நோய்களும் பணச்செலவும் ஏற்படுவது அறிந்ததே. இவை கொடிய லாகிரிப் பொருள்கள். மனித சக்தியைத் தளர்த்தி வெளிப்போக்குகின்றன. புகையிலை, வாய், மூக்கு, பல், காற்றுப்பை முதலியவற்றின் வழியாக ஏறி, உடல் நலங் குறைக்கிறது. இடம்பமும், கடனும், அகந்தையும், வீண்மையும் பெருக்கி நம்மை மயக்குகிறது. இவற்றை ஒழித்தால் வறுமையும் ஒழியும். குடியும் புகையும் உடல் நலங் கெடுக்கும்.

## 4. உழைப்பும், பயனும்

1.. உழைப்புப் பயனும் உழைப்போர்க்கே யாயின்
அழியும் வறுமையெலா மன்று.

உழைப்புப் பயனும் = வேலையின் பலன் - உழைப்போர்க்கே ஆயின் = வேலை செய்வோருக்கே வருமானால் - வறுமையெலாம், அன்று, அழியும் = வறுமை நோய் அன்றே தீர்ந்துவிடும்.

உழைப்பவன் வந்த பலனைத் தான் அடைவதென்றிருந்தால், முதலாளியின் பங்கின்றி அனைவருந் துய்ப்பர். ஏழைகள் போதியது அடைவர். ஒரு குடியானவன் தான் விளைத்ததை ''நிலச் சொந்தக்காரன்'' என்ற உழையாதவனுக்குக் கொடுத்து அவன் தரும் சிறு கூலியை எதிர்பார்த்தே பிழைப்பதனால் தான் உழைப்பவர் வறுமை வாய்ப் படுகின்றனர். தன் இடம்பச் செலவுக்குப் பல மடங்குக்கு மேலே முதலாளி சேர்த்து வைத்துக்கொண்டே மீதியைக் கூலியாகத் தருகிறான். உழைத்தவரே உண்பதெனும் நீதி பிறந்தால் ஒருவரும் பிறர் உழைப்பில் பிழைக்கும் முதலாளியாயிருத்தல் முடியாது. பூப்பயன் பொதுவாகும். உழைத்தோர் துய்த்தால் செழிக்கும் உலகே.

2. விளைவிப்பான், வாங்குவோன், வேறொருவ னின்றேல்
உழைப்பான் முயற்சியெலா மூங்கு.

விளைவிப்பான் = உழைத்துப் பயிர்செய்பவன் - வாங்குவோன் = அதை விலை கொடுத்துப் பெறுவோன் தவிர - வேறொருவன்

இன்றேல் = முதலாளி என்ற வேறொரு நடு மனிதன் இல்லா விட்டால் - உழைப்பான் = பாடுபடுபவனுடைய - முயற்சியெலாம் = உழைப்புகளெல்லாம் - ஊங்கு = மேன்மையுறும்.

விளைத்தவன், தான் விளைத்ததை நேராக விற்று ஊதியம் பெற்றால் தன் உழைப்பின் பலன் முழுதும்பெற்று இன்னும் ஊக்க முடன் வேலை செய்து மேன்மையடைவான். உழையாதுண்ணு வோருக்கு அளந்து அவர்களிடம் கூலிபெற வேண்டியிருப்பது ஏழை களின் துயருக்குக் காரணமாகிறது. முதலாளி தனக்கு இஷ்டமான விலைக்கு விற்பதால் பொருள் விலை அதிகமாகிப் பலர் வருந்துகின் றனர். விளைத்தோன் விற்றலே உழைப்பிற் குயர்வு.

3. புவியின் பலனைப் பொதுவாகத் துய்க்கின்,
புவிவறுமை யேது? புகல்.

புவியின் பலனை = நிலத்தின் விளைவை - பொதுவாக = தேவைக்கேற்றபடி, சமமாக - துய்க்கின் = அனுபவித்தால் - புவி வறுமை = (பலருக்கு உழைக்க) நிலங்கிடைக்காத தன்மை - ஏது புகல் = எப்படி யுண்டாகும் சொல்வாயாக.

பூமி பொதுவுடைமை யாதல் வேண்டும். அவரவர் சாதாரண வாழ்விற்கேற்ற மனை கட்டிக்கொள்ளவும், உழுதுண்ணவும் நிலத்தை அனுபவிக்க எல்லோருக்கும் சமபாத்தியமிருத்தல் வேண்டும். உழுதுண்ண யாருக்கும் உரிமையிருக்க வேண்டும். பேராசையுடன் ஒருவரும் மிதமிஞ்சிச் சேர்க்காவிடின், பூமியில் எல்லாருக்கும் பிழைப் புண்டாகும். போதிய நிலம் கிடைக்கும். பூமி தரித்திரமே யிராது. பொது நலங் கருதிற் பூப்பயன் பொதுவே.

4. புகையிலை கஞ்சாபோற் பொல்லாதன வாக்கேல்;
பகைமதுவூன் பாரேலிப் பார்.

புகையிலை, கஞ்சாபோல் = புகையிலை கஞ்சா போன்ற - பொல்லாதன = தீய பொருள்களை - ஆக்கேல் = விளைக்காதே - பகை = நலவாழ்விற்கு விரோதியான - மது = கள்ளையும், ஊன் = புலாலையும் - இப்பார் = இவ்வுலகில் - பாரேல் = கண்ணாற் கூடப் பார்க்காதே.

உழைப்பாளி நற்பயிரையே விளைவித்து நல்ல வாணிபமே செய்தல் வேண்டும். புகையிலை, கஞ்சா, அபின், தேயிலை, காப்பி, டீ போன்ற எல்லாப் பயிர் விளைத்தலும், கள், புலால் முதலியவற்றை

உண்ணலும் விற்றலும் தயார் செய்தலும் தீது. இவற்றால் மனித சக்தி வீணாகிறது. பாவம் பெருகுகின்றது. பொல்லது விளைக்கின் நல்லது குறையும்.

5. உழைத்து விளைத்துண்ண வுவந்தா லுலகஞ்
செழிப்பு செழிப்பே செயும்.

உழைத்து விளைத்துண்ண உவந்தால் = அவரவர் உழைத்தே விளைந்ததை யனுபவிக்க மகிழ்ந்தால் - உலகம் = பூமி - செழிப்பு செழிப்பே செயும் = நிச்சயமாக, செழிப்பாகத் தழைத்தோங்கும்.

பூமி செழிப்பாகத்தான் இருக்கிறது. அதன் செழிப்பால் மக்கள் செழிக்க முடியவில்லை. ஏனெனில் ஒருவன் உழைத்தால் பயன் வேறொரு முதலாளிக்குப் போகிறது. தாம்தாம் உழைத்தே உண்பது என்று வந்துவிட்டால் ஒவ்வொருவரும் பூமியை மதித்துத் திருத்தி யுண்ணுவர். தன்னுழைப் புண்ண, மண்செழித் தோங்கும்.

## 5. பழுதறு வாழ்வு

1. நூற்றுத் தறிநெய்தல், நூலறிதல், ஏருழவும்
ஆற்றலுல கிற்கிவையே யாம்.

நூற்று = இராட்டினத்தில் பஞ்சுநூற்று - தறிநெய்தல் = கைத்தறி யால் நெசவு செய்தல் - நூல் அறிதல் = (வாழ்வை சுத்தப்படுத்தும்) நூலாராய்ச்சி செய்தல் - ஏர் உழவும் = விவசாயமும் - உலகிற்கே, இவை, ஆற்றல், ஆம் = பூமிக்கு இவை சக்திகளாகும்.

வறுமை தீர உடையுணவு பெருக, நூற்றல், நெசவு, விவசாயம் இம்மூன்றும் வழிகளாகும். மடமையைப் போக்க நல்ல நூல்களைப் பயின்று அவற்றின் வழியில் சுத்தமாவதே வழியாகும். இந்நான்கு தொழில்களும் உலகை இன்புறுத்தும் சக்தியாகும்.

2. செய்யுங் கிணறுஞ் சிறுகுடிலுங் கால்நடையுங்
கையு முழக்களிப்பு காண்.

செய்யும் = (உழுதுண்ண) நிலமும் - கிணறும் = அதற்கு நீர் பாய்ச்சக் கிணறும் - சிறு குடிலும் = வசிப்பதற்கு அடக்கமான குடிசை யும் - கால்நடையும் = உழுவதற்கு மாடுகளும் கொண்டு - கையும் உழ = கைகளும் உழுது விவசாயஞ் செய்யவே - களிப்பு காண் = மகிழ்வை அடைவாயாக.

விவசாய வாழ்க்கையே களிப்புள்ளது. அதற்கு ஒரு நிலமும் கிணறும் மாடுகளுங்கொண்டு உழுதுண்டால் சுதந்திரமான மகிழ்ச்சியுறும். அந்நிலத்திலேயே தான் வசிப்பதற்கு ஒரு சிறு வீடுங் கட்டிக்கொண்டு இயற்கை வாழ்வு வாழலாம். பயிரொடு பழகித் துயரற வாழு.

3. நெல்முதலா மூண்பயிர்கள் நீணிலத்தி லோங்கிடவே
நல்கிடும் பேறினையே நாடு.

நெல் முதலாம் ஊண் பயிர்கள் = நெல்லைப் போன்ற உணவுப் பயிர்கள் - நீள்நிலத்தில் = விரிந்த பூமியில் - ஓங்கிடவே நல்கிடும் = மிகுதியாக விளைந்து கொடுக்கும் - பேறினையே = செல்வத்தையே - நாடு = விரும்பு.

நெல், வாழை, தென்னை, கம்பு, வரகு, சோளம், தினை போன்ற உணவுப் பயிர்களை மிகுதியாக வளர்க்க வேண்டும். உலகத்தில் பெரும்பான்மையும் இப்பயிர்களை விளைவித்தல் மக்கள் வறுமை நீங்கித் தூயவாழ்விற்கு ஆதாரமாகும். தானியங்களே ஒருவனுக்குப் பெரிய செல்வம்.

4. உடையுணவிற் கான, வுலகமிகச் செய்யின்,
மிடியேது மென்று மிலை.

உடையுணவிற்கு ஆன = ஆடைக்கும் ஆகாரத்திற்கும் ஆகிய பயிர்களையே - உலகம் மிகச் செய்யின் = உலகோர் மிகுதியாக விளைவித்தால் - மிடி ஏதும், என்றும் இலை = தரித்திரம் என்பது எள்ளளவும் என்றும் இருக்காது.

பருத்தி, சணல் முதலிய உடைக்குதவும் பயிர்களும் முன் சொன்ன உணவுப் பயிர்களுமே மிகுதியாக விளைவித்தால் உலகில் உடையுணவுப் பஞ்சம் நீங்கி அனைவருக்கும் ஆத்ம விசாரணைக்கு மனமும் நேரமுங் கிடைக்கும். உணவுடை பெருக்க மணமுறு முலகே.

5. உழுதூணே, நூற்றாடை, செய்குடிலே யுள்ளான்,
பழுதற்று வாழ்பவனே பார்.

உழுதூணே = கையால் உழுது விளைத்த உணவும் - நூற்றாடை = தான் நூற்ற ஆடையும் - செய்குடிலே = தான் கட்டிய குடிலும் -

உள்ளான் = கொண்டவன் = பழுதற்று = (அடிமைத்தனம் என்னும்) பிழையின்றி - வாழ்பவனே பார் = உலகில் வாழ்வோனாவான் என்பதைக் காண்பாயாக.

ஒருவன் சுதந்திரமாக, பாபமற்று வாழவேண்டுமாயின், உணவும், உடையும், வீடும் வேண்டும். உணவை உழுதுண்டு, ஆடையை நூற்றுடுத்தி, வீட்டை ஓலையாலும் மூங்கிலாலும் தானே கட்டிக்கொண்டு வாழுவோன் சாந்தமாகவும் சுதந்திரமாகவும் வாழலாம். ஒருவருக்கும் அவனால் துன்பம் ஏற்படாது. பிறர்கை நோக்கான் அறநெறி மிக்கான்.

அறநூல், பிணியறுவியல் முற்றிற்று.

-------

# 12. அரசியல்

மனிதன் அறவாழ்வு வாழுதற்கு நாட்டாட்சி நலமுடனிருத்தல் வேண்டும். குடிகளுக்குத் தக்க ஆட்சி முறையை இவ்வியல் வற்புறுத்துகிறது. உலகம் உலகோர் உடைமை. ஆனால் மொழி, பழக்கவழக்கம், நடையுடை, மனப்பான்மை, இயற்கை யமைப்புகளை யொட்டி உலகோர் பல சமுதாயங்களாக (Nations) வகுத்துக் கொண்டு வசிக்கின்றனர். ஒவ்வொரு சமுதாயத்திற்கும் வசிக்க ''நாடு'' ஏற்பட்டுள்ளது. அந்த நாட்டை சுதேசிகள் தங்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகளைக் கொண்டு நிர்வகித்தலே ''அரசு'' அல்லது ஆட்சிமுறையாகும். கல்வி, செல்வம், நீதி, காப்பு முதலியவற்றை நாட்டிற்கேற்ப வகுத்தாளலே நாட்டரசு, சுயாட்சி, குடியரசு, ஜனவாட்சி எனப்படும். தேசத்தின் ஆட்சி கிராமத்தில் தொடங்குகிறது. கிராமப் பஞ்சாயத்து முதல், பாராள் மன்றமட்டும் ஜனப்பிரதிநிதிகளே நாட்டை நிர்வகித்தல் முறை. பொது ஜனங்களின் ஒத்த அபிப்பிராயத்திற்கு ''குடிமனம்'' ''ஜனநாயக முழக்கம்'' ''மக்கள் தீர்ப்பு'' என்று பெயர். இதையொட்டியே அரசு நடத்தல் முறையாகும். பாராள் மன்றமே 'குடித்தலைமை'' வகிக்கும். அது ஒரு தக்கோனைத் தன் தலைவனாகக் கொள்ளலாம். அவனுக்குக் ''குடித்தலைவன்'' என்று பெயர். ஆயுதப்படையின்றி சாந்த முறையில், கொடுங்கோல் நீக்கி, குடிக்கோலோச்சி அரசு செய்யும் வகையை இவ்வியல் விரிக்கும்.

## 1. தலைமை

1. பாருலக மெங்கெங்கும் பாரோர் உரிமையலால்,
ஓரோர் உரிமையோ வோர்.

எங்கெங்கும் = எந்நாட்டிலும் - பாருலகம் = கண்ணிலம் - பாரோர் = அந்த நிலத்தில் இருப்பவரின் - உரிமை அலால் = சொந்தமல்லாது - ஓரோர் உரிமையோ ஓர் = தனிப்பட்ட ஒருவரின் ஏகபோகமாகுமா? எண்ணிப்பார்.

உலகம் உலகோர் உடைமையாகும். அது ஒருவருக்குந் தனி யுரிமையல்ல. ஜனநாயக வாக்கே உலகை ஆளுகிறது.

2. குடித்தலைவன் ஓர்குடியே; கோதறுநற் றொண்டைக்
குடியொத்தே செய்வான் குறி.

குடித்தலைவன் = குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவன் - ஓர் குடியே = தானும் ஒரு பிரஜையே யாவான் - (அவன்) கோதறு, நல், தொண்டை = குற்றமற்ற நாட்டின் பணியை - குடியொத்தே செய்வான் குறி = குடிகள் வகுத்த நீதியின்படியே ஒத்துச் செய்வான் என்பதை யறிவாயாக.

குடித்தலைவனும் ஜனங்களில் ஒருவனே. ஜனநாயக முழக் கத்தைப் பணிந்து, நாட்டின் தொண்டை அவன் செய்வது கடமை. தனிவாழ்வில் குடித்தலைவன் இடம்பமற்று எளிமைக்கு உதாரண மாக வாழவேண்டும். குடிகளி லொருவனே குடித்தலை யாகும்.

3. குடிகளின் சேவகரே கோக்களெனக் கொள்ளின்,
படியினி லேதே பகை.

கோக்கள் = தலைவர் - குடிகளின் சேவகரே எனக் கொள்ளின் = பொது ஜனங்களின் ஊழியரே தாம் எனுங் கொள்கையோடிருந்தால் - படியினில் = உலகில் - பகை ஏதே = விரோதம், ஏது.

நாட்டுத் தலைவர் குடிகளின் பணியாளர்; மக்கள் நலத்திற்குப் பொறுப்பாளர். மன்னுயிர்களை மதித்து அரசு செலுத்தினால் மன் னுயிர்களும் தலைவனை அன்புடன் மதிக்கும். பிறகு உள்நாட்டுச் சண்டையின்றி ஒற்றுமை யேற்படும். குறைகளை வெளிப்படையாக முறையிட்டுத் தீர்த்துக் கொள்ளலாம். மன்னுயிர்ப் பணியே மன்னவன் பணியாம்.

4. குடியாற் குடிநன்மை கொற்றரசு போற்றின்,
மிடிபிணி யேதே விளம்பு.

குடியால் = குடிகளின், உதவியால் - குடி நன்மை = குடிகளின் நலத்தை - கொற்றரசு = வெற்றியுள்ள அரசன் - போற்றின் = காத்தால் - மிடி, பிணி ஏதே, விளம்பு = வறுமை மடமைப் பிணிகள் எப்படி யுண்டாகும் சொல்.

ஜனநாயக முழக்கப்படி ஜனங்கள் நலத்திற்காக, உழைக்கும் அரசில் அறிவு, தொழில், உரிமை, ஆற்றல், வளம் முதலியன வளரும். மடமையும் வறுமையும் விலகும். நன்மை போற்றி நாடர சாளுக.

5. குடிகளே தேர்ந்திதமாய்க் கொண்டவனே கொற்றன்,
நடுநிலைசேர் நாட்டத்தி னான்.

நடுநிலை சேர் = நீதியுள்ள, பக்கவாதமற்ற - நாட்டத்தினான் = பார்வையுள்ளவனான - கொற்றன் = தலைவன் - குடிகளே தேர்ந்து = குடிகளே சம்மதித்து நியமித்து - இதமாய்க் கொண்டவன் = அரசநீதிக்குச் சகாயமாக நடத்த ஏற்றுக்கொள்ளப்பட்டவன்.

தலைவன் தன்னலம் விட்டு மன்னுயிர் பேண வேண்டும். குடிகளாலேயே அறத்தைக் காக்கத் தேர்ந்தெடுக்கப்பட்டதை எண்ணி நடுநிலையுடன் நடத்தல் வேண்டும். அத்தகையோனையே மன்னுயிர் மதிக்கும். குடிகளைப் பேணும் நடுநிலைத் தலைவன்.

## 2. அமைதியி னாறு

1. பார்தழுவும் நல்வழியிற் பண்பினர சாண்டிடலே
சீர்பெற்று வாழுந் திறம்.

பார்தழுவும் = ஜனங்கள் ஏற்றுக்கொள்ளக்கூடிய - நல்வழியில் = நீதிமுறையில் - பண்பின் = குணத்துடனே - அரசாண்டிடலே = ஆளுவதே - சீர்பெற்று வாழும் = (தலைவன்) புகழுடன் வாழும் - திறம் = வகையாகும்.

குடிகள் மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளும் வகையில் நீதி செலுத்துவதே தலைவனுக்குப் புகழாகும். பாரைத் தழுவிச் சீரைப் பெருக்கு.

2. அடக்குவதி லில்லை; அளித்தலே சீர்மை,
கொடுக்கும் அமைதியெதிர் கொண்டு.

அடக்குவதில் = (சட்டம், சேனை, சிறை) முதலியவற்றால் ஜனங்களை ஒடுக்குவதில் - இல்லை = பெருமையில்லை - சீர்மை அளித்தலே = அவர்கள் கேட்கும் சீர்திருத்தத்தைத் தருதலே - அமைதி = சாந்தத்தை - எதிர்கொண்டு கொடுக்கும் = முன்னே வந்து அளிக்கும்.

குடிகளின் முறைகளை அடக்குமுறைகளால் அச்சமுறுத்தி ஒடுக்குவதால் பெரிய கிளர்ச்சியுண்டாகும். அவர்கள் கேட்கும் சீர்திருத்தத்தைத் தந்தால்தான் அரசு அமைதியாக நடக்கும். அரசர் குடிகளை யொடுக்கப் பார்த்தால் குடிகள் புரட்சிசெய்து அவனை எதிர்த்து வீழ்த்துவர். அடக்கு முறையாற் குடிப்பகை யோங்கும்.

3. அச்சத்தை முற்றும்விட் டன்புமதம் பூணரசிற்
கெச்சமயத் தாரே யிகல்.

அச்சத்தை = (ஆயுதம், சேனை, அடக்குமுறைகளால்) பயமுறுத்துதலை - முற்றும்விட்டு = முழுதும் நீக்கி - அன்புமதம் பூண் அரசிற்கு = அன்பினால் ஆளுவதே கொள்கையாயுள்ள அரசனுக்கு - எச்சமயத்தாரே = எந்தக் கொள்கையுடையவரே - இகல் = பகையாவார்.

பயமுறுத்தி ஆளமுயலும் அரசன் குடிகளின் உட்பகைக்கு இரையாவான். அன்பு எல்லாச் சமயத்தினரும் விரும்பத்தக்கது. அவர்கள் நலத்தை அன்புடன் பேணி, சமரசமாக அனைவரையும் போற்றினால் எல்லாரும் அரசனை நேசிப்பர். அன்புட னாண்டால் அனைவரு முறவு.

4. பரிசனமுஞ் சட்டம், பகையென் பயக்கும்?
உரிமை தருநெறியே யூங்கு.

பரிசனமும் = ஏவலாளரும் - சட்டம் = (கடுமையான) விதியும் - பகை = (குடிகளிடம்) பகை காட்டலும் - என் பயக்கும் = என்ன நலத்தைத் தரும்? - உரிமை = சுதந்திரத்தை - தரும் நெறியே = கொடுக்கும் வழியே - ஊங்கு = மேலானது.

சுதந்திர தாகமுள்ளவரைத் தன் ஏவலாளரைக் கொண்டு அடக்குமுறையால் ஒடுக்கிப் பகைத்தால் இரகசியக் கிளர்ச்சியும் புரட்சியும் மிகும். உரிமையைத் தந்து ஜனங்களை மகிழ்வித்தலே சிறந்த நெறியாகும். பகை என்பதற்கு, குடிகளுக்குள்ளேயே உட்பகையெழுப்பி

ஒற்றுமை குலைத்துப் பிரித்து ஆளுந் தந்திரம் என்றுங் கொள்ளலாம். உரிமைக் கிளர்ச்சிக்குரிமையே மருந்து.

5. சத்தியமே வன்மையெனத் தங்குங் குடியரசே,
எத்திசையு மெய்து மிசை.

சத்தியமே வன்மையென = உண்மையே பலம் என்று - தங்கும் = நிலைபெற்ற - குடியரசு = ஜன ஆட்சி - எத்திசையும் இசை, எய்தும் = எங்கும் புகழ்பெறும்.

ஜனநாயக முழக்கத்திற்கு முரணின்றி நடப்பதே ராஜீய சத்தியம். அந்த சத்யராஜ்யம் மக்கள் நலத்தையே நாடும். மக்களும் அன்புடன் அதன் துணையாவர். நாட்டில் சாந்தம் நிலவும். நீதியும் புகழுடன் விளங்கும். ஒற்றுமையும், அன்பும், நம்பிக்கையும் ஏற்பட்டு நாடு சீர்பெறும். பகைவரும் அந்நாட்டை அணுகார். பொய்யா தொழுகின் நொய்யா தரசு.

## 3. கொடுங்கோல்

1. நாட்டின்முன் னேற்றத்தை நாடாத வேந்துடைய
நாட்டினுங் காடே நலம்.

நாட்டின் முன்னேற்றத்தை = தேசத்தின் அபிவிருத்தியை - நாடாத = மதிக்காத - வேந்துடைய நாட்டினும் = மன்னனைக் கொண்ட நாட்டை விட - காடே நலம் = வனவாசமே மேலானது.

குடிகளின் மகிழ்வே நீதியரசின் குறிப்பு. கல்வி, தொழில், ஒழுக்கம் முதலியவற்றில் ஜனங்கள் முன்னேற்றமடைவதே அரசுக்குப் பெருமையாகும். அப்படியின்றி தான் போகத்தில் மூழ்கிக் குடிகளின் நலத்தைக் கருதாமலிருக்கும் அரசனது நாட்டில் துன்பமே விளையும். இருளும் வறுமையும், முரணும் பகையும் பெருகும். ஜனங்களின் புத்திமதியையும் அவ்வரசன் கேளான். அவ்வரசினும் சுதந்திரமான காடே மேலானது. அநீதியரசினும் அரணியம் நன்று.

2. வாய்மூடிக் கைகட்டி, வஞ்சமுட னாளரசை,
நோய்பலவே வாட்டும் நுழைந்து.

வாய்மூடி = (அடக்குமுறையால்) மக்களின் பேச்சைத் தடுத்து - கைகட்டி = (சுதந்திர முயற்சிகள் செய்யவொண்ணாமல்) கைகளையும்

பந்தப்படுத்தி - வஞ்சமுடன் ஆள் அரசை = வஞ்சகமாக ஆளும் மன்னனை - நுழைந்து = ஆட்சியிற் புகுந்து - நோய் பலவே வாட்டும் = பல தீமைகள் வருத்தும்.

கூட்டங்கூடிப் பேசுதல், மேடைப்பேச்சு, பத்திரிக்கைக் கிளர்ச்சி முதலியவற்றிற்கு வாய்ப்பூட்டுப் போடுவதும், ஆயுதங்கள் எடுக்காதபடிக்கும், தங்கள் குடிசைத் தொழில்களைப் பயிலாதபடியும், கைப்பூட்டுப் போட்டும், வீரமாக எதிர்த்தவரை விலங்கு மாட்டிச் சிறையிட்டும், நாட்டின் பொருள்களைத் தன்னயத்துடன் செல விட்டும், தொழில் நலித்தும், தாய்மொழி கெடுத்தும், பிறநாட்டுச் சாமான்களுக்கே அடிமைப்பட விடுத்தும், சேனைகாட்டி அச்சுறுத்தி வஞ்சகமாக ஆளும் மன்னன் குடிப்பகைக்கே உள்ளாவான். சூழ்ச்சி களாலும் புரட்சிகளாலும் சண்டை சச்சரவுகளாலும் நாட்டமைதி கெடும். மன்னன் மனம் பயமுங் கவலையுமுறும். பல மனநோய்களுக்கு அவன் உள்ளாவான். வஞ்சக மன்னன் நெஞ்செலாம் புண்ணே.

3. கள்ளுண் விழைவாற் கனகங் கவரரசன்,
நள்ளிரவிற் கள்வனாம்; நாடு.

கள் உண் விழைவால் = தன் குடிகள் மதுபானஞ் செய்யுந் தீய ஆசையைச் சாக்கிட்டு - கனகம் கவர் அரசன் = பணத்தைக் கொள்ளை கொள்ளும் மன்னன் - நள்ளிரவில், கள்வனாம், நாடு = நடுநிசியில் வரும் கள்வனுக்குச் சமானமென்று நினை.

கள்ளினால் வறுமையும், மதிமயக்கமும், வியபசாரமும், கொலை யும், பல பிழைகளும் பெருகும். தன்னரசில் கள்ளே இல்லாமற் செய்து மக்களைத் தூய்மைப்படுத்துவது அரசன் கடமை. கள்ளின் மூலம் பொருளீட்டும் அரசன் கொள்ளைக்காரனுக்குச் சமானமாகும். நடுநிசி யில் பாதை தப்பி இழுத்துச் சென்று திருடன் பொருள் பறிப்பது போன்று, மனவிருளால் மூடுண்ட ஏழைகளை நன்னெறி யுய்க்காமல் கட்கடைக்குப் பாதை காட்டி அங்கு அவர்கள் பொருள்களை யுறுஞ்சவிடுவது எத் தன்மைத்து! கள்ளை யொழித்தல் காவலன் கடமை.

4. அடக்கு முறையாலே யாண்டசெய வேந்தன்,
இடமகல் பூவி லிலை.

அடக்குமுறையாலே = (சட்டத்தாலும், சேனையாலும், குடிகளை) ஒடுக்குவதனாலே - ஆண்ட = அரசாண்ட - செயவேந்தன் = வெற்றி மன்னன் - இடமகல் பூவில் இலை = விரிந்த வுலகில் இருந்ததில்லை.

அடக்குமுறைகளாலே மக்களின் சுதந்திரத்தை யொடுக்கி யாளுதல் பலாத்கார ஆட்சியாகும். அந்தப்படி ஆண்டு வெற்றியுடன் நீண்ட நாள் இருந்த மன்னர் உலகிலெங்குமில்லை; அடக்குமுறைகளும், கொடுங்கோலும் தாண்டவமாடுவதே அரசின் முடிவு காலமாகும். அத்தகைய கொடுங்கோலனை மக்கள் ஆவேசத்துடனே எதிர்ப்பர். சுதந் திரப் போர் புரியும் குடிகள் என்றுந் தோற்றதில்லை. அவரை எதிர்க்கும் மன்னர் என்றும் வென்றதில்லை. ஆங்கிலநாட்டு சார்லெஸ் மன்ன னும், பிரெஞ்சு நாட்டு லூயியும், ரஷிய நாட்டு ஜார் மன்னனும் உதாரண மாவர். உலகம் கோனாட்சி வெறுத்துக் குடியாட்சி போற்றுகிறது. மன்னனை யொடுக்கிடும் மன்னுயிர்ப் பகையே.

5. குடிகளோ டொவ்வாத கொற்றவன் நாட்டில்,
முடியாதே யோங்கும் முரண்.

குடிகளோடு ஒவ்வாத = ஜனங்களுடன் மனமொப்பி நடக்காத - கொற்றவன் நாட்டில் = மன்னனுடைய தேசத்தில் - முரண் = பகை - முடியாதே ஓங்கும் = ஓய்வின்றி வளரும்.

ஜனநாயக முழக்கத்திற்கு இணங்காமல் தன்னிச்சைப்படி ஜனங்களை ஒடுக்கியாளும் அரசில் குடிகளுக்கும் மன்னவனுக்கும் உட்பகை யுண்டாகிப் போர் விளையும். மன்னன் அடக்குவான். குடிகள் இன்னும் அடங்காத ஆவேசமுற்று விடுதலை அடைவார்கள். குடியொ டெதிர்த்தால் முடியொடு வீழும்.

## 4. அரசின் கடமை

1. பஞ்சமிருள், நோய்மிடியைப் பல்லாற்றிற் போக்கிடுமச்
செஞ்செயலின் மன்னே திறம்.

பஞ்சம் = (வரட்சியால் ஏற்படும்) கருப்பு - இருள் = மடமை - நோய் = பிணி - மிடியை = (சோம்பலால் ஏற்பட்ட) வறுமையையும் - பல்லாற்றில் = பல வழிகளில் - போக்கிடும் = நீக்கிடும் - அச்செஞ்செயலின் மன்னே = அந்த நீதிச் செய்கையுடைய மன்னவனே - திறம் = ஆட்சித் திறமுடையவன்.

மழையின்றிப் பஞ்சம் வந்த காலத்தில் மன்னவன் ஜனங்க ளுக்குப் பிறவிடங்களினின்று நீர்ப்பாசனங்களும் கிணறுகளும் வெட்டி உதவவேண்டும். பிழைப்புண்டாக்க வேண்டும். இருள் நீங்குவதற்கு நல்ல குருகுலக் கல்வியையும், அறிவைப் புகட்டும் சங்கங்களையும், வாசக

சாலைகளையும் ஏற்படுத்த வேண்டும். நோயையகற்ற இயற்கை நெறியில் ஜனங்களை, வீடு வீடாகச் சென்று பழக்க வேண்டும். சுகாதாரத்தைக் கவனித்தல் வேண்டும், வறுமை நீங்குவதற்கு தொழிற் கல்வியைப் பரப்பிக் குடிசைத் தொழில்களை விருத்தி செய்ய வேண்டும். நாட்டிற்கு வேண்டியதை நாட்டிலேயே செய்வித்து நாட்டுச் செல்வம் நாட்டிலேயே சுற்றச் செய்தல் வேண்டும். கல்வியும் தொழிலறிவுங் கற்கக் குடிகளை வற்புறுத்த வேண்டும். காற்றும், வெயிலும் படும்படி விசாலமான இடங்களில் ஜனங்கள் வசிக்க ஏற்பாடு செய்தல் வேண்டும். கிராமங் களைச் சீர்படுத்த வேண்டும். மூலப்பொருள்களை நாட்டிலேயே குடிசைத் தொழில் முன்னேற்றத்திற்குப் பயன்படுத்த வேண்டும். இப்படிப் பல வழிகளால் மக்களின் நலங்கருதியாளும் அரசே அரசு. நிறை தருமாட்சியே குறையற வோங்கும்.

2. **ஆராய்ந்து, போற்றி யனைவோருந் தேர்ந்தெடுத்த,**
**பாரா ளவர்தோட் படி.**

ஆராய்ந்து போற்றி = தகுதி நோக்கியறிந்து, ஆதரித்து - அனைவோரும் = பொது ஜனங்களெல்லாரும் - தேர்ந்தெடுத்த = தெரிந்து நியமித்த - பாராளவர் = பாராள் மன்றத்தவர் - தோள் = புயத்திலே, பொறுப்பிலேயே - படி = உலகினாட்சி யுள்ளது.

குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்ட தேசப் பிரதிநிதிச்சபையே பாராள் மன்றம், நாட்டிற்கேற்ற சட்ட திட்டங்களை அதுவே செய்யும். நாட்டின் முன்னேற்றம் அதன் பொறுப்பிலேயே யுள்ளது. அரசன் அதன் விதிகளையே மதித்து நடத்தல் கடன். தலைவனை ஆக்கவும் நீக்கவும் அதற்கு உரிமையுண்டு. பாராள் மன்றஞ் சீரா யாளும்.

3. **நீதிசுகங் கல்வி நிறைவாழ்வின் றேவையெலா**
**மீத லெளிதா யினது.**

நீதி = தருமநியாயம் - சுகம் = சுகாதாரம் - கல்வி = அறிவு - நிறை வாழ்வின் தேவை எலாம் = (குடிகள்) குறையற்று வாழ, இன்றியமை யாதவற்றை யெல்லாம் - எளிதாய் ஈதல் இனிது = இலவசமாக, எல் லாரும் எளிதாகப் பெறும்படி தருதல் மேலானது.

நீதியைப் பஞ்சாயத்தார் மூலம் செலவின்றி தரவேண்டும். சுகாதாரத்திற்காக வரிப்பணத்தைப் போதியமட்டுஞ் செலவிட்டு இயற்கை வாழ்வையும் ஜல வைத்தியத்தையும் போதிக்க வேண்டும். சுகாதாரத் திற்கு ஏற்றபடி ஊர்களை சுத்தப்படுத்த வேண்டும். கட்டாயக் கல்வியை

தேசத்திற்குப் பயன்படுமாறு கற்பிக்க வேண்டும். வாழ்வின் தேவையான போதிய மனை, தண்ணீர், உணவுப் பொருள்கள் மீது வரியேற்றாது இனாமாகத் தரவேண்டும். வாழ்வின் தேவையை வழங்குக வெளிதாய்.

4. அன்புசெய் தன்பை யடையாத மன்னவனோ
துன்பினா லாளுந் துணிந்து.

அன்பு செய்து... மன்னவனோ = குடிகளின் அன்பு பெருகும் படியாக ஆண்டு அவர்கள் அன்பைப் பெறாத அரசனோ - துன்பினால் = கொடுங்கோலால் துயர் விளைத்து - துணிந்து = அச்சமின்றி - ஆளும் = குடிகளை ஆள முடியும்?

உண்மையாகவே நாட்டின் நலத்தைக் கணித்து அன்பாக மக்கள் முறைகளைக் கேட்டுக் குறைதீர்த்து ஆளும் அரசனைக் குடிகள் அன்புடன் பணிவார்கள். இந்த அன்பை அறியாத மன்னவன் அச்சத்தாலும் அடக்குமுறையாலும் அச்சுறுத்திக் குடிப்பகை கொண்டு வீழ்வான். அன்பினால் ஆண்டால் குடிகளை நம்பிச் சாந்தமாயிருக்கலாம். துன்பினால் ஆளுவோன் பலாத்காரத்தை நிறைவேற்ற எத்தனை அடக்குமுறைகள், இரகசிய தூதர், சந்தேகம், கவலை, அச்சம், சூட்சி முதலியவற்றைக் கொண்டு குடிப்பகை பெருகச் செய்கிறான்! அன்புள வரசிற் கென்படை வேண்டும்?

5. உலகளவு செல்வமெலா முற்றென்ன, மெய்யாம்
பலவழியீ யாக்கால், பரிந்து.

மெய்யாம் = உண்மையான - பல வழி = (நாட்டிற்குப் பயன் பெறும்) பல நல்ல வழியில் - பரிந்து = (மக்கள் நலத்தை) விரும்பி - ஈயாக்கால் = உதவாவிடின் - உலகளவு செல்வமெலாம் உற்றென்ன - உலகமெலாம் செல்வமடைந்தும் என்ன பயன்.

நாட்டின் செல்வத்தை கல்வி, தொழில் முதலிய பல நல் வகைகளில் மக்கள் முன்னேறும்படி செலவிடுவதே ஆட்சிக்கழகு. தன்னயத்திற்கும், போருக்கும், சேனைக்கும் மிதமிஞ்சிச் செலவிட்டு அறிவுதொழில் ஒழுக்க முன்னேற்றங் கருதாத ஆட்சி, கொடுங்கோலாட்சியாகும். பல்லறஞ் செய்தலே செல்வப் பயனாம்.

## 5. படை

1. படையாலே யென்னாகும் பாரோரே கூடின்,
இடையன்பு சூழா விடம்.

இடை = அரசனுக்குங் குடிகளுக்கும் நடுவே - அன்பு சூழா விடம் = அன்பு சுற்றி யிருக்காதபோது - பாரோரே கூடின் = குடிகளெல்லாம் ஒற்றுமையுடன் அரசனுக்கு எதிரிடையாகச் சேர்ந்தால் - படையாலே என்னாகும் = அரசனுடைய சேனையால் என்ன செய்ய முடியும்.

அன்பே அரசனுக்குப் படை. அன்பில்லாதவன் படையைப் பலப்படுத்திக் குடிகளை யடக்க முயலுகிறான். குடிகள் முழுதும் ஒற்றுமையுடன் அவனுடைய அநீதியை எதிர்த்தால் தன் சிறுபடையைக் கொண்டு அரசன் ஒன்றுஞ் செய்ய முடியாது. குடிகள் திரண்டால் கொற்றவனேது?

2. இன்னொரு நாட்டை யிகல்கொள்ளின், நாளையதை,
வென்றொரிகல் கொள்ளும் வியப்பு.

இன்னொரு நாட்டை = பிறர் நாட்டை - இகல்கொள்ளின் = பகைவன் போரில் வென்றால் - நாளை அதை = மறுநாளே அதை மீண்டும் - ஒரு இகல் = வேறொரு பகைவன் - வென்று கொள்ளும் = படையெடுத்து வெல்லுவான் - வியப்பு = (இப்படி அரசாங்கம் மாறுவது உலகில்) ஆச்சரியம்.

படையால் வெல்லப்பட்டது பகைவனுக்கு இரையாகும். படை கொண்டு இன்று ஒரு மன்னன் நாட்டைக் கவர்ந்தால் அவனினும் வலியன் நாளை வந்து அந்நாட்டைத் தாக்கித் தன்னதாக்குவான். இவனையும் இன்னொருவன் வெல்லக் காத்திருப்பான். இப்படியாக மிருக பல வெற்றி நிலையற்றது. பலாத்காரத்தால் வந்தது பலாத்காரத்தால் பறித்துக் கொள்ளப்படும். மிருகபலம் நிலையற்றது. அவ்வாறே அதன் வெற்றியும். பாரத தேசம் இப்படி எத்தனை மன்னரைக் கண்டுவிட்டது! போரால் வந்தது, போராற் பிரியும்.

3. பொறையுறுதி யொற்றுமையும் பூண்டோர்முன் சேனை
நிறையரசன் வீழ்வான் நினை.

பொறை = பொறுமையும் - உறுதி, ஒற்றுமையும் = மனவுறுதியும் ஒற்றுமையும் - பூண்டோர் முன் = கொண்டவர் எதிரே - சேனை

நிறையரசன் = சேனா பலம் மிகுந்த மன்னன் - வீழ்வான் = தோற்பான் - நினை = எண்ணு.

சேனையினால் மட்டும் அரசன் அடக்கியாள முடியாது. மன வுறுதியும், பொறுமையும், ஒற்றுமையுமுள்ள குடிகள் சேர்ந்து, ஆயுத மில்லாமலே எதிர்த்தாலும் அரசன் தோல்வியே யடைவான். இடர் களைப் பொறுத்துக் கொள்கையை உறுதியாகக் கடைப்பிடித்துக் கிளர்ச்சி செய்தால் குடிகளே வெல்லுவர். ஒன்றிய வுறுதி வென்றிடும் படையை.

4. வெடிமருந் தேசெய் விலங்கோரிப் பாரில்,
அடைவார் கொலையே யறி.

வெடி மருந்தே செய் = (மிருக பலத்தால் வெல்ல) வெடிமருந்து களையே தொழிலாகச் செய்யும் - விலங்கோர் = மிருகத்தன்மையுள் ளவர் (இரக்கமற்றவர்) - இப்பாரில் = இந்த உலகில் - கொலையே அடைவார் அறி - (வேறு மிருக பலத்தோரிடம் போர் புரிந்து) கொல்லுண் டிறப்பர் என்பதை யறிவாயாக.

வெடிமருந்துகளையும் ஆட்கொல்லி ஆயுதங்களையும் பேராசை யுடன் செய்யும் சமுதாயத்தார் மிருகத் தன்மையுள்ள இரக்கமற்றவர். நாடு கவருவதும் மெலியோரை நலிப்பதும் அவர் நோக்கம். போரே அவர் வாழ்வு. ஊரொடுங் கொல்லுதல் போரெனப்படுவது. தன் னினும் வலிய சேனையின் கையில் இத்தகையார் கொலையுண்டு மாய்தல் நிச்சயம். கொலையே முயல்வோர் கொலையால் மூய்வர்.

5. ஆயுதச் சேனை யரசு பயத்தாலே,
தேயத்தி லேசெய்யுந் தீது.

பயத்தாலே = (குடிகளிடமுள்ள) அச்சத்தாலேயே - ஆயுதச் சேனை அரசு = கொலைக் கருவிகள் நிறைந்த படையுள்ள மன்னன் - தேயத்திலே தீது செய்யும் = (மக்களையடக்க) உலகில் பல தீமைகளைச் செய்வான்.

நீதியரசன் குடிகளிடம் அஞ்ச வேண்டியதில்லை. படையும் அவனுக்குத் தேவையில்லை. அயலவர் படையெடுத்தாலும் நாடு முழுவதுமே படை சேர்ந்து அரசனுக்குத் துணைசெய்யும். ஒரு கொடுங் கோலன், குடிகள் பகைக்கு அஞ்சி அவர்கள் உரிமைகளைப் பறிக்க மிருகபலக் கருவிகளைத் துணைக் கொள்ளுகிறான். குடிகளைப் பல

அடக்குமுறைகளால் சேனை காட்டி ஒடுக்குகிறான். இவையெல் லாம் அவனுக்கே முடிவு காலத்தைத் தந்துவிடுகின்றன. பிற நாட்டை வெல்லவும், உரிமையைப் பிடுங்கி அடக்குமுறையை வற்புறுத்தவும் சேனை சேர்ப்பது அநீதியானது. நாட்டின் தற்காப்பிற்காகச் சேனை வேண்டியதுதான். சேனை க்ஷத்திரிய பலம் போன்றது. கல்வியுடனே வாலிபருக்குச் சிறந்த தேகப்பயிற்சியும் யுத்தப்பயிற்சி மீந்து தேசக் காப்பிற்குத் தயாராக்கினால் கிராமந்தோறும் வீரர் பெருகுவர். இவர்கள் கிராமங்களையும் சீர்ப்படுத்திச் சமயம் வந்தபோது தேசக் காப்பிற்கும் முன்வருவர். இத்தகையோரே நாட்டின் சேனை. சமாதானக் காலத்திலும் அடையப்போட்டு ஊனுங் கள்ளும் ஊட்டி வகிக்கும் சேனை பொருளாதார நிலைக்குப் பொருந்தாது. சேனைச் சேவகர் இயல்பாக கிராமக் காவல் வரி வசூலித்தல் முதலிய வேலைகளைப் பார்த்து, நாட்டின் காப்பிற்காகவே முன்வருதல் நலம். ஆண்மை பெருக்கிற் சேனை யெதற்கு?

**அறநூல், அரசியல் முற்றிற்று.**

-------

# 13. குடியியல்

குடிகள் திறமையுடன் ''குடியரசு'' செய்வகையை இவ்வியல் விரிக்கும். அரசியலும் குடியியலும் பல அருத்த சாத்திர நுட்பங்களுள் ளன. அவை விரிந்த ஆராய்ப்பாலேயே அறியற்பாலன. அவற்றிற்கு மிகச் சிற்றுரையே தொகுத்தோம். குடிகளின் வாக்குப்படி அரசு நடக் கிறது. வாக்காளர் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கும் வகை, சட்டங்கள் செய்யும் நெறி, வரிவிதிக்கும் முறை, பிரதிநிதிகளின் பொறுப்பு, அநீதி யைச் சாந்தமாக வொடுக்க வழி, குடியாட்சிமுறை முதலியவற்றை இவ்வியல் வகுக்கிறது.

## 1. தேர்தல்

1. தேர்ந்தோர் மனதின் றிறமே யரசதனால்,
தேர்தலிற் றன்மை தெரி.

தேர்ந்தோர் = (பொதுஜன வாக்குகளால்) தெரிந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகள் - மனதின் திறமே = நோக்கத்தின்படியே - அரசு = அரசாட்சி அமையும் - அதனால் = ஆதலால் - தேர்தலில் = பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்கையில் - தன்மை = அவர்கள் குணங்களை - தெரி = அறிவாயாக.

பொதுமக்களே தங்கள் வாக்குகளைக் கொடுத்து ஜனப் பிரதிநிதிகளைச் சிபாரிசு செய்து சட்டசபைகளுக்கு அனுப்புகின்றனர். அப்பிரதிநிதிகளே நாட்டாட்சி வகிப்பர். அவர்கள் தன்மைக்குத் தக்க படியே ஆட்சியின் சீரும் இருக்கும். ஆதலின் உண்மையானவர் களையே ஆராய்ந்து தேர்ந்து வாக்கீந்து பிரதிநிதிகளாக நியமிப்பது ஜனங்களின் கடமையாகும். திறமை நோக்கித் தேருக மன்றை.

2. குடிகள் மனந்தனதாய்க் கொண்டோரின் கையில்,
இடமகல் பூவி னிருப்பு.

குடிகள்... கையில் = குடிகளின் விருப்பே தமதெண்ணமாகக் கொண்டவரிடமே - இடமகல் பூவின் இருப்பு = விரிந்த நாட்டின் நிர்வாகமும் இருப்பதாகும்.

குடிகள் விருப்பத்தையும் நிலையையும் நன்கறிந்து அவர்கள் நல்லெண்ணத்தை நிறைவேற்றலே தமது நினைப்பாகப் பிரதிநிதிகள் கொள்ள வேண்டும். நம்பிக்கையுள்ளவர்களையே ஜனங்கள் விரும்புவர். மக்கள் மனமே மன்றோர் மனமாம்.

3. சனந்தேர்ந்து போற்றிடுமச் சாந்தர் குழுவே,
மனமுவந்த பாராளும் மன்று.

சனம் தேர்ந்து போற்றிடும் = ஜனங்கள் தேர்ந்தெடுத்து ஆத ரிக்கும் - அச்சாந்தர் குழுவே = அந்தப் பொறுமையுள்ளவர் சபையே - மனம் உவந்த = மக்களின் நலப்பொறுப்பையேற்க மனங்களிக்கும் - பாராளுமன்று = தேசத்தை ஆட்சி செய்யும் சபை.

ஜனப் பிரதிநிதிச் சபையில் தலைமையானது பாராள்மன்றம். சாந்தமும், பொறுப்பும், ஊக்கமும், மனக்களிப்பும், நம்பிக்கையும், மக்களின் சம்மதமும் உள்ளவர்களையே பாராளவைக்குத் தேர்ந் தெடுக்கப்படும். பாரேற் றவரே பாராள் மன்றோர்.

4. தேர்தற் குறிப்பிற் சிறந்தோரைத் தேர்ந்தெழுதல்,
ஆர்புவியோ ரின்கடனென் றாய்.

தேர்தல், குறிப்பில் = வாக்குச்சீட்டில் - சிறந்தோரை = திறமை மிக்கவரை - தேர்ந்து எழுதல் = நியமித்துக் குறித்தல் - ஆர் புவியோர் = அறிவு விளங்கும் உலகத்தவரின் = இன் கடன் என்று ஆய் = இனிய கடமை என்று எண்ணு.

தேர்தல் சீட்டில் தக்கவர் பெயரைக் குறிப்பிடுதல் ஒவ்வொருவருடைய கடமையுமாகும். ஒருவராவது தேர்தலைப் பற்றி அசட்டையா யிருத்தலாகாது. தேர்தலினற்றே தேசமுமாகும். அதனால் ஒவ்வொருவரும் திறமை சிறந்தவரைத் தேர்ந்தெழுத வேண்டும்.

5. அறநினைவோ டாற்றல், அறிவழகு, நன்மை
சிறந்தோரைத் தேர்தல் திறம்.

அறநினைவோடு = தர்ம சிந்தனையுடன் - ஆற்றல் = நிர்வாக சக்தி - அறிவழகு = விரிந்த அறிவின் பொலிவு - நன்மை = பொது நலவுணர்ச்சி - சிறந்தோரை = மிகுந்த பெரியோரை - தேர்தல் திறம் = பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்தல் நல்லது.

பிரதிநிதிகளை, செல்வம், உருவம், பிரசங்கம், விளம்பரம், ஆடம்பரம் இவைகளால் மயங்கித் தேர்தல் கூடாது. நல்ல அறநூல் ஆராய்ச்சியும், அறநினைவும், நிர்வாக சக்தியும், அறிவும், குடிகளின் ஊழியத்தில் ஊக்கமும், நன்னினைவுமுள்ள பெரியோர்களையே தேர்ந்தெடுத்தல் வேண்டும். அறச்சிறப் பாளர் அவைக்கழ காவர்.

## 2. வரி, சட்டம்

1. மனங்குடி மக்கள் மகிழ்விதிக டம்மைத்
தனையெண்ணா தாக்கிடலே சால்பு.

மனம் = மனச்சாட்சியும் - குடிமக்கள் = வாக்காளரான குடிகளும் - மகிழ் விதிகள் தம்மை = களிப்புடன் ஏற்றுக்கொள்ளும் சட்டங்களையே - தனையெண்ணாது = தன்னயத்தையே கருதாமல் - ஆக்கிடலே சால்பு = செய்தலே மேன்மையானது.

பிரதிநிதிகள் தங்கள் மனச்சாட்சிக்கும் குடிகளின் நலத்திற்கும் சம்மதமான சட்டங்களையே தன்னலம் விடுத்துச் செய்தல் வேண்டும். மக்களும் மனமும் மகிழுற விதிசெய்.

2. தேவைக்கு மேலாகச் சேர்பொருளுக் கேவரியாம்;
ஏழைக்கு மல்ல விது.

தேவைக்கு மேலாக = வாழ்வின் தேவைகளுக்கு அதிகமாக - சேர்பொருளுக்கே வரியாம் = சேர்த்து வைக்கப்படும் பொருளுக்கே வரிவிதித்தல் நீதியாகும் - இது = இவ்வரி - ஏழைக்கும் அல்ல = ஏழைக்குக் கூட விதிப்பதல்ல.

தனது சாதாரண வாழ்விற்கு மட்டும் வைத்திருப்போருக்கு வரி கூடாது. தேவைக்கு மேலாகச் சேர்த்து வைப்போருக்கே வரி போடுவதாகும். ஒரு மனிதனுக்கு எவ்வளவு மனை, நிலம், பொருள் வேண்டுமெனக் கணித்து, அதற்கு மேல் வைத்துக்கொண்டிருப்பவருக்கே வரிபோட வேண்டும். தேவைக்குங் குறைவாயிருப்பவருக்கு அரசாங்கம் கொடுத்துதவ வேண்டும். அந்தந்த ஊர்களுக்கு வேண்டிய கல்வி, சுகாதாரச் செலவுகளை ஸ்தல ஸ்தாபனங்களே செய்கின்றன. நாட்டைச்சுதேசிகளே ஆளுவதால் ஆட்சிச்செலவு மீதியாகும். குடியரசில், எளியவருக்கும் இல்லை வரியே.

3. **கல்வி தொழிற்சுகமுங் காப்பு கொளுஞ்செலவிற்**
**கெல்லையினீ தல்வரியென் றெண்.**

கல்வி... செலவிற்கு = கல்வி, தொழில், சுகாதாரம், நாட்டைப் பகைவரிடமிருந்து காக்கும் செலவுகளுக்கு - எல்லையின் ஈதல் = ஒரு அளவுடன் கொடுத்தல் - வரி என்று எண் = வரியெனப்படும் என்பதை எண்ணுவாயாக.

ஒவ்வொரு கிராமத்திலும் கல்வி, தொழில், சுகாதாரம், காவல் இவற்றிற்கு எவ்வளவு செலவாகும் என்பதையறிந்து அச் செலவை ஜனங்கள் தமக்குத் தக்கபடி ஈவு வைத்துக் கொடுத்தலே வரியாம். பள்ளிக்கூடம், தொழிற்சாலை, விவசாயம், நூற்றல், வாசக சாலை, அறச்சாலை, அச்சுச்சாலை, இயற்கை வைத்தியசாலை, ஊர்க் காவல், தொண்டர் படை முதலியவற்றிற்கே வரிப்பணம் முக்கிய மாகச் செலவழிக்கப்பட வேண்டும்.

4. **உழைப்போர் நலமெய்த வுற்றிடுமவ் வாட்சி,**
**தழைக்குந் தருமத்திற் றான்.**

உழைப்போர் = தொழிலாளிகள், பொதுஜன ஊழியர் - நலம் எய்த = நன்மையடைய - உற்றிடும், அவ்வாட்சி = பொருந்தும் அந்தக் குடியாட்சி - தான் தருமத்தில் தழைக்கும் = அதுவாகவே தன் தருமச் செயலாலேயே தழைத்தோங்கும்.

விவசாயம், கைத்தொழில், கல்வி, சுகாதாரம் முதலிய துறைகளில் உழைப்போருக்குப் போதியமட்டும் ஆதரவளிக்கும் ஆட்சியே அறத்தின்படியமைந்ததாகும். அறந் தழைத்தால் ஆட்சி தழைக்கும்.

5. ஏழைக்கே நீதி யினிதருளா மன்றுகளிற்
பாழடையேல், பஞ்சாயம் பார்.

ஏழைக்கே = பணமில்லாதவருக்கே - நீதி இனிது அருளா = அன்புடன் ஆதரித்து நீதி செய்யாத - மன்றுகளில் = வழக்கு மன்றுகளில் புகுந்து - பாழடையேல் = வீணாகாதே - பஞ்சாயம் பார் = பஞ்சாயத் தீர்ப்பையே நாடு.

பெரிய வழக்குமன்றுகளும், செலவும் நீதியிலாகாவிற்கு வேண்டாம். நல்ல கிராமப் பஞ்சாயத்தே போதுமானது. ஒவ்வொரு கிராமத்திலும் பஞ்சாயத்து சபையிருந்து நீதி தரல் வேண்டும். நீதி இனாமாகத் தருதல் வேண்டும். பஞ்சா யத்தே பண்புறு மன்றம்.

## 3. பொறுப்பு

1. தானமுயர் செல்லச் சனசேவை யின்பொறுப்பே
மாணப் பெருகும் மதி.

தானம் = பிரதிநிதிப் பதவி - உயர் செல்ல = மேலே போகப் போக - சன சேவையின் பொறுப்பே = மக்களுக்குப் பணி செய்வதின் பாரமே - மாண = மிகவும் - பெருகும் = அதிகமாகும் - மதி = அறிவாயாக

உத்தியோகங்களும் பிரதிநிதி ஸ்தானங்களும் ஓங்க ஓங்க, தங்கள் கடமைப் பொறுப்பும் அதிகமாகும். திறனையும், பொறுப்பை யும் எண்ணியே பதவிகள் வழங்கப்படும். உயர உயர உழைப்பும் உயரும்.

2. தன்னறிவுந் தன்மதிப்புந் தாய்மொழியுந் தாழாத,
தன்னயமில் லாட்சிமுறை சால்பு.

தன்னறிவும் = ஆத்மஞானமும் - தன் மதிப்பும் = சுயமரியாதை யும் - தாய்மொழியும் = அவரவருக்குச் சொந்தமான மொழியும் - தாழாத = குறையாத - தன்னயமில் = சுயநலத்தைப் பாராட்டாத - ஆட்சி முறை = அரசாங்கம் - சால்பு = மேன்மையானது.

மக்களுக்குக் கடவுளுணர்ச்சியும், சுயமரியாதையும், மொழி வளர்ச்சியும் பெருகும்படி ஆட்சிமுறை வகுக்க வேண்டும். அறவோர் களைக் கொண்டு எங்கும் அறநூல்களைப் பரப்பிக் கடவுளின் சட்ட மான அறத்தைப் போற்றி அவனையடையும் உணர்ச்சியை ஏற்படுத்த

வேண்டும். அத்யாத்ம முயற்சி செய்வதற்கு வனங்களிலும் மலைகளிலும், மடங்கள் கட்டப்பட வேண்டும். அறவோர்களை ஆதரிக்க வேண்டும். சமதர்மத்தைப் பரப்பி அனைவரும் தூய்மையும் சுதந்திரமும் சமரச உணர்ச்சியுமுற்று, சுயமரியாதையுடன் வாழச் செய்தல் வேண்டும். தாய்மொழிச் சங்கங்களும் பள்ளிக்கூடங்களும், வெளியீட்டு மன்றங்களும் ஏற்படுத்தி, மொழிப் புலவரையும் அவர்கள் நூல்களையும் ஆதரித்தல் வேண்டும். தாய்மொழியிலேயே எல்லா அரசாங்க நடவடிக்கைகளும் நடத்த வேண்டும். சுயநலம் பாராட்டாத அரசச் சேவகர்கள் இத்துறைகளில் நாடு முன்னேறத்தக்க துணை செய்தல் வேண்டும். தாய்மொழி மதிக்கத் தன்னறி வுயரும்.

3. **பஞ்சம் மடமையும் பாரை வருத்திடினோ,**
**செம்மையிலை யாட்சிமுறை, தேர்.**

பஞ்சம், மடமையும் = வறுமையும் மடமையும் - பாரை வருத்திடினோ = நாட்டைத் துன்பஞ் செய்தால் - ஆட்சிமுறை செம்மையிலை தேர் = அரசாங்கம் (குடிகளின் நலத்தைக் கருதி) செம்மையாக நடக்கவில்லை என்பதை அறிவாயாக.

வறுமையும் மடமையுந் தீராதமட்டும் ஆட்சிமுறை நன்னெறியில் நடக்கவில்லை என்பது தெளிவு. இவ்விரண்டு பிணிகளையுந் தீர்க்க அரசாங்கம் பிழைப்பையும் அறிவையுந் தரவேண்டும். குடிகளைப் பார்த்துக் கோலை மதி.

4. **நேயமன மில்லா நெறியில் லதிகாரங்**
**காசினியி லஃதே கடு.**

நேயமனம் இல்லா = குடிகளிடம் உள்ளன்பில்லாத - நெறியில் = தர்மமில்லாத - அதிகாரம் = ஆட்சி-அஃதே = அதுவே - காசினியில் = நாட்டில் - கடு = நஞ்சாகும்.

சுயமரியாதையைக் குறைக்கும்படி அதிகாரஞ் செலுத்தி, நெறியில்லாமலும் அன்பில்லாமலும் நடந்தால் அதுவே குடிகளின் பகையாகிய விஷத்தை அரசிற்கு ஊட்டும். குடிப்பகையால் நாடெல்லாங் கெடும். அன்பும், அறமுமே யமைதி பயக்கும்.

5. **பெரியோரும் ஒத்துழையாப் பீடின்மை தன்னை**
**யறிந்தவரைப் போற்றலறி வாம்.**

பெரியோரும் = அறிவிலுந் தவத்திலுஞ் சிறந்த மேலோர்களும் - ஒத்துழையா = அரசாங்கத்திற்குத் துணையாயிராமல் ஒதுங்கி

நிற்கும் - பீடின்மை தன்னை = பெருமையற்ற தன்மையின் காரணத்தை - அறிந்து = தெரிந்து - அவரைப் போற்றல் = அவர்களைப் பேணி நடத்தல் - அறிவாம் = ஆளுவோரின் புத்திசாலித்தனத்தைக் காட்டும்.

ஒரு நாட்டிற்குப் பெரியோரே அறிவாவர். ஆளுவோரின் பிழையால் அவர்கள் ஒத்துழையாதிருப்பின், அவர்கள் மனம் வருந்தும்படியான குற்றத்தை ஆட்சிமுறையினின்று நீக்கி அவர்களை மீண்டும் பேணி மதித்து நடத்தலே அரசிற்கு நலம். பெரியோர்ப் பேணல் பெருமையைக் காட்டும்.

## 4. தீமை வெல்லல்

1. தேயத்தின் நோயைத்தன் நோயெனவே தீர்த்திடலே,
தேயத்தார் செய்கடனே தேர்.

தேயத்தின் நோயை = நாட்டிற்குற்ற அடிமை நோயை - தன் நோய் எனவே தீர்த்திடலே = தனக்குற்ற பிணிபோல வருந்தி அதைப் போக்குவதே - தேயத்தார் செய் கடனே தேர் = தேசமக்கள் செய்ய வேண்டிய கடமையாகும் என்பதை யறிவாயாக.

நம்முடலுக்கு வந்த நோயைத் தீர்க்க எப்படி எண்ணுகிறோமோ அதுபோலவே நமது நாட்டிற்குற்ற அடிமை நோயையுந் தீர்ப்பது நமது கடமையாகும். உடற்பிணியெனவே புவிப்பிணி போக்கு.

2. வரியுடனே சேனை, மனவுறவீ யாக்கால்,
அரசினது நோயகலு மாம்.

வரியுடனே, சேனை, மனவுறவு, ஈயாக்கால் = வரியும், படைக்கு ஆட்களும், மனத்தால் ஒத்துழைப்பையும் தராவிடின் - அரசினது நோய் அகலுமாம் = அரசாங்கத்தைப் பிடித்த கொடுங்கோல் நோய் நீங்கிவிடும்.

வரிப்பணமும், படையும், ஜனங்களின் ஒத்துழைப்புமே அரசாங்கத்தைத் தாங்குந் தூண்கள். இவையில்லாவிடின் அரசாங்கம் விழுந்துவிடும். ஒற்றுமையும் மனவுறுதியும் பூண்டு வரி நிறுத்தம் செய்தால் அரசாங்கம் பணமின்றி தவிக்கும். சேனைகளினின்று அனைவரும் நீங்கினால் படைவலியும் போய்விடும். உத்யோகம், சட்டசபை அங்கம், வழக்குமன்றம், அரசாங்கப் பள்ளிக்கூடம், அரசாங்கச் சாமான்கள் முதலியவற்றை விலகி நின்றால் அரசாட்சி எந்திரம் ஒருநாட் கூட

நடைபெறாது. இதுதான் ஒத்துழையாமை என்பது. ஆதர வில்லேல், அரசுட னில்லை.

3. கூறுவதைக் கேட்கினுமே கோதுடனே யாகுமெனிற்
கூறுவரோ யாருமே கோள்.

கூறுவதை = கோட் சொல்லுவதை - கேட்கினுமே = கேட்டாலே - கோது உடனே ஆகும் எனில் = உடனே (மனங்கலங்கி) பல குற்றங்கள் விளையும் என்றால் - யாருமே கோள் கூறுவரோ = யாராயினும் கோட் சொல்லுவார்களா?

குடிகளுக்குள்ளேயே சில கோட்சொல்லிக் குண்டுணிகள் அரசாங்கத்தின் பக்கம் சேர்ந்திருத்தல் தீது. இரகசிய தூதர்கள் குடிகளைப் பற்றி அரசாங்கத்திற்கு, விரோதப்பான்மையிற் கோட்சொல்லி தேசத் துரோகம் செய்தல் கூடாது. இப்படிக் கோட்சொல்லுவதால் குடிகளுக்குப் பல இன்னல்கள் ஏற்படும். கோட்சொல்வதைக் கேட்பதே தீதெனில் யாரே உத்தியோக முத்திரையுடன் கோட்சொல்லுவர். கோட் சொல்வோரே குடிநலமாய்ப்பர்.

4. கனகன்சேய் போன்ற கருத்துறுதி யோடே,
வினைத்தீமை தன்னைநீ வெல்.

கனகன்சேய் போன்ற = இரணியன் மகனான பிரஹலாதனைப் போன்ற - கருத்து உறுதியோடு = மனத்திண்மையோடு - வினைத்தீமை தன்னை = அரசாட்சி வினையிலுள்ள குற்றத்தை - நீ வெல் = நீ வெல்லுவாயாக.

பக்தி, உறுதி, பொறுமையைக் கொண்டே பிரஹலாதன் தனது கொள்கையை நிறைவேற்றித் தந்தையின் பசுபலத்தை வென்றான். ஒரு அரசாட்சித் தீமையை வெல்வதற்கும் இந்த ஆன்ம சக்தித் திறமே மேலானது. கனகன் சேய்போற் கடும்பகை வெல்லு.

5. உண்மை, பொறுமை யுறுவலிமை, நன்மனதால்,
இன்னலாஞ் சட்டம் எதிர்.

உண்மை, பொறுமை உறும் வலிமை = சத்யமும், சாந்தமுங் கொண்ட பலத்தாலும் - நன்மனத்தால் = (பகைவன் திருந்தவேண்டு மென்ற) நல்ல எண்ணத்தாலும் - இன்னலாம் சட்டம் எதிர் = (சுதந்திரத்திற்கு) துயரிழைக்கும் சட்டங்களை எதிர்ப்பாயாக.

சட்டமறுப்பினால் ஒரு அரசாங்கத்தை வணக்கலாம். அதற்கு சத்யசாந்த சக்தியும் பகையாத நன்மனமுஞ் சேர வேண்டும். முதலில் தீய சட்டத்தின் தீமைகளை அரசாங்கத்திற்குத் தெரியப்படுத்திச் சட்ட சபைகளிற் கிளர்ச்சி செய்ய வேண்டும். பயனில்லாவிடின் நாட்டிற் கிளர்ச்சி செய்ய வேண்டும். மீதும் அச்சட்டத்தை மீறி அதனால் வரும் இன்னல்களைப் பொறுத்துத் தியாகஞ் செய்தல் வேண்டும். நாடு முழுதும் இவ்வழியில் ஒத்துழைத்தால் எத்தகைத் திருத்தமும் எளிதில் எய்தும். சட்ட மறுப்பாற் பட்டிடுந் தீமை.

## 5. ஆட்சிமுறை

1. அதிகாரம் மட்டா யதிகஞ் சுயேச்சை
விதிசிலவா மாட்சி விரும்பு.

அதிகாரம் = அமுல் செலுத்துதல் - மட்டாய் = அளவாகவும் - சுயேச்சை = சுதந்திரம் - அதிகம் = மிகுதியாகவும் - விதி சிலவாம் = சட்டதிட்டங்கள் (எல்லாரும் அறியும்படி) சுருக்கமாகவுமுள்ள - ஆட்சி விரும்பு = அரசாட்சியை விரும்புவாயாக.

ஒரு ஆட்சிமுறையை அனைவரும் மதித்து நடக்க வேண்டுமாயின் அது மக்களின் சுயமரியாதையைப் பேணி அதிகாரத்தை மட்டாகவும் தங்கள் தங்கள் கொள்கையைக் கடைபிடிக்க சுதந்திரம் மிகவும் தரவேண்டும். சட்டதிட்டங்கள் எல்லார் மனத்திலும் பதியும்படி சுருக்கமாயிருத்தல் வேண்டும். இதுதான் மக்களை மதித்து ஆளும்முறை. ஆட்சியைக் குறைத்தே அன்பினைப் பெருக்கு.

2. சிற்றூரிற் றேயந் தெரியுந் திறத்துடனே
வற்றாம லோங்கிடவே வாழ்.

சிற்றூரில் = கிராமத்தில் - தேயம் தெரியும் திறத்துடனே = தேசத்தின் ஆட்சிமுறை விளங்கும் மேன்மையுடன் - வற்றாமல் = குறையாமல் - ஓங்கிடவே = வளரும்படி - வாழ் = (ஆட்சி செய்து) வாழுவாயாக.

கிராமத்தின் பெருக்கமே தேசம். கிராமமே தேசத்தின் உயிர். நாட்டாட்சி எப்படியோ அப்படியே கிராம ஆட்சியுமிருத்தல் வேண்டும். தேசீய ஸ்தாபனங்களெல்லாம் கிராமத்திலும் இருத்தல் வேண்டும். கிராம சுயாட்சியே தேசச் சுயாட்சியின் வித்து. கல்வி, தொழில், சுகாதாரம், ஐக்கிய நாணயம், விவசாயம், நீதி, காவல், அறவுணர்ச்சி

முதலியவற்றிற்காக நாட்டில் எப்படி இலாகாக்கள் இருக்கின்றனவோ அப்படியே கிராமத்திலும் பொறுப்பாளர் ஒவ்வொன்றிற்கும் இருத்தல் வேண்டும். அப்போது கிராமம் பூரணசுயாட்சியோடு விளங்கும். சிற்றா ரெற்றோ, அற்றே நாடு.

3. பஞ்சாய மேமுதலாய்ப் பாராள் அவைவரையில்
ஐந்தைந்தாய்த் தேர்தல் அழகு.

பஞ்சாயமே முதலாய் = கிராமப் பஞ்சாயத்து சபையில் தொடங்கி - பாராள் அவை வரையில் = பாராளுமன்றம் மட்டும் - ஐந்தைந்தாய்த் தேர்தல் = ஒவ்வொரு சபைக்கும் ஐந்தைந்து பிரதிநிதித் தலைவராகத் தேர்ந்தனுப்பல் - அழகு = (ஆட்சிமுறைக்கு) ஒழுங்கானது.

கல்வி, தொழில், சுகாதாரம், அறவுணர்ச்சி, காப்பு இவற்றிற்கு ஐந்து நிர்வாகிகள் வேண்டும். ஒரு கிராமத்திலுள்ளவர் கூடி கிராமத் திற்காக இந்த ஐவரைத் தேர்ந்தெடுப்பர். இவர் கிராமப் பிரதிநிதியான ஐவர் (கிராமத்தைவர்). இப்படியே ஒரு தாலுகாவிலுள்ள கிராமத் தைவர் சேர்ந்து அத்தாலுகாவிற்காக ஐவரைத் தேர்ந்தெடுப்பர். தாலுகா வின் ஐவர் ஜில்லாவின் ஐவரைத் தேர்ந்தெடுப்பர். ஜில்லாவினைவர் மாகாணத்தவரைத் தேர்ந்தெடுப்பர். மாகாணத்தைவர்கள் பாராளுமன்ற மாவர். அவர்களுள் தேர்ந்தெடுக்கப்பட்ட ஐவர் அமைச்சராவர். அவர் களுள் ஒருவர் பாராள்மன்றத்தின் நியமிப்பால் குடித்தலைவராவர். இப்படித் தேர்தலுக்கே, ஐந்தன் ஒழுங்கு என்று பெயர். இதனால் கிராமம் முதல் நாடு மட்டும் தொடர்புண்டாகிறது. ஒவ்வொருவரின் வாக்குரிமையும் பாராட்டப்படுகிறது. கிராமம் சிறிய தேசமாகிறது.

4. வறுமை தவிர்தொழிலும், வாய்மை பெருக,
மடமைக்கீ ஞான மருந்து.

வாய்மை பெருக = குடிகளுக்கு சத்திய வுணர்ச்சியோங்கு வதற்கு - வறுமை தவிர்தொழிலும் = வறுமை நீங்கும்படியான தொழிற் பயிற்சியும் - மடமைக்கு ஞான மருந்து = மடமை நீங்குவதற்கு அறி வாகிய மருந்தும் - ஈ = தருவாயாக.

வறுமை, மடமை நீங்குவதற்குத் தொழிலும், கல்வியும் பெருக்குதல் ஆட்சிமுறையில் தலைமையாயிருக்க வேண்டும். அப்போது தான் மக்கள் உண்மையாகவும், இன்பமாகவும் வாழமுடியும். இருள் மிடி நீங்கின் இலங்கிடு முண்மை.

5. தாழ்மை, சீர் தன்னுதவித் தன்மையொடு சத்தியமும்,
வாழ்குடிகட் கோங்க, வழங்கு.

தாழ்மை = எளிய வாழ்வும் - சீர் = புகழும் - தன்னுதவித் தன்மை யொடு = தன்தேவைகளைத் தன் முயற்சியால் சுதந்திர மாகப் பெற்றுக் கொள்ளுந் திறத்துடனே - சத்தியமும் = உண்மை யும் - வாழ்குடிகட்கு = நீடுழி வாழும் மன்னுயிருக்கு - ஓங்க = பெருகவே - வழங்கு = (ஆட்சி) செலுத்து.

குடிகள் குறையற்று நீடுழி வாழவேண்டுமாயின், இடம்ப மின்றி எளிய வாழ்வு வாழவேண்டும். நற்செயல்களால் புகழுற வேண் டும். தன்முயற்சியுடன் பிறருக்கு அடிமைப்படாது, தேவைகளைத் தூயவழியில் பெறவேண்டும். பொய்யாது வாழவேண்டும். உண்மை யுணர்ச்சியுடன் இத்தகைக் குடிகள் ஓங்கத்தக்க ஆட்சிமுறை வகுத்தல் அரசின் கடமை. தாழ்மையென்பது, கடவுள் வணக்கம், இடம்ப மின்மை, அடக்கம், செருக்கின்மை முதலியவற்றையுங் குறிக்கும். வாய்மை வளர வாழிய மக்கள்!

அறநூல், குடிமியல் முற்றிற்று.

------

# 14. சாந்தவியல்

முன்னியல் வகுத்தபடி சுதந்திரம் நாட்டி, நாட்டின் மிடிப் பிணியகற்றி, அடிமை நோய் தீர்த்து, வாழும்போது உலகில் அறிவும், அன்பும், களிப்புமோங்கிச் சாந்தம் நிலவும். சாந்த வாழ்வே அமர வாழ்வு. கடவுளோடு வாழுதல் அதுவே. அத்தகைய சாந்த யுகத்தின் பான்மையையும் அதை அணுகுவிக்கும் வகையையும் இவ்வியல் கூறுகிறது.

## 1. சாந்தம்

1. என்றுங் களிப்பெய்தி, யென்வரினுஞ் சோர்வின்றி,
நின்றநிலை சாந்தம் நினை.

என்றும் = எக்காலமும் - களிப்பெய்தி = ஆனந்தமடைந்து - என்வரினும் = எதுவந்தாலும் - சோர்வின்றி = மனந்தளராமல் - நின்ற நிலை = இருக்கும் அமைதியான நிலைமையே - சாந்தம் நினை = சாந்த நிலை என்று எண்ணுவாயாக.

வேண்டுதல் வேண்டாமை யில்லாத நிலையே சாந்த நிலை. அந்நிலையில் எப்போதும் களிப்பும், உறுதியும் இருக்கும். சோர்வும் கலக்கமும் நீங்கும்; தன்மய மாகுஞ் சாந்த நிலையில்.

2. நினைப்புசெயல் தூயதுவாய், நெஞ்சமரு ளூன்றி
யனைத்துயிரு மின்புறவே யாற்று.

நினைப்பு = எண்ணமும் - செயல் = வினையும் - தூயதுவாய் = சுத்தமாகி - நெஞ்சம் = மனது - அருள் ஊன்றி = கருணையில் உறுதியாகி - அனைத்துயிரும் = எல்லாவுயிர்களும் - இன்புறவே ஆற்று = (இருள் நீங்கி) பேரின்பமடையும்படி (ஞானோபதேசங்களை) செய்.

மேற்படி சாந்த நிலையடைய முதலில் மனதும், செயலும் பரிசுத்தமாயிருத்தல் வேண்டும். மனத்தில் அழுக்கின்றி உள்ளொளி மயமாகவேண்டும். நினைப்பு உள்ளே யிலகும் கடவுளிடமே யிருத்தல் வேண்டும். நெஞ்சில் அனைத்துயிரிடமும் அளவற்ற கருணை கொள்ள வேண்டும். தான் அடைந்த தூயவாழ்வை மன்னுயிரும் அடையும்படி, ஞானோபதேசஞ் செய்ய வேண்டும். அதைத் தவிர வேறொன்றும் வாய் பேசக்கூடாது. இதுவே சாந்த நிலைதரும். முற்றிய தூய்மை முழுமனச் சாந்தம்.

3. உறவுந் துணையும், ஒளியாமுன் னான்மா;
பிரிந்தவையாய்ப் பொன்றும் பிற.

உறவும் = இவ்வுலகில் உனக்குச் சொந்தமானதும் - துணையும் = இறந்தபின் துணையாய் வருவதும் - ஒளியாம் = உனக்குள்ளே சோதியாயிருக்கும் - உன் ஆன்மா = உன் ஆத்மாவேயாகும் - பிற = புலன்களால் பார்க்கும் பிற எல்லாப் பொருள்களும் - பிரிந்து = தங்கள் பஞ்சபூதச் சேர்க்கை பிரிந்து - அவையாய் = தாமாகவே - பொன்றும் = அழிந்துவிடும்.

ஆன்மாவே நமக்குத் தனியுறவு. இவ்வுடல் போயினும் இருப்பது ஆன்மா. அதுவே உள்ளொளியான கடவுள்மயம். புலப் பொருள்கள் பஞ்சபூதச் சேர்க்கையே ஆகும். அவை நிலையற்றுப் பிரிந்து பூதங்களுள் மறையும். ஆன்மாவே நிலையென்று அறிதலே ஆத்ம ஞானம். அதையறிந்து அதிலேயே வாழுவதே சாந்தம். அதுமய மாகித் ததும்புக களிப்பே.

4. கருத்தி லொளிவைத்துக் கன்னூலிற் றேடேல்;
எரியத்தீ தேடல் இது.

கருத்தில் = நெஞ்சில் - ஒளிவைத்து = கடவுட் சோதியை வைத்துக்கொண்டு - கல் நூலில் = உருவச் சிலையிலும், புத்தகங்களி லும் - தேடேல் = தேடித் திரியாதீர் - எரிய = வீட்டில் விளக்கெரியும் போது - தீதேடல் இது = நெருப்பிற்காக ஊரெங்கும் பார்த்தலைவதற்கு இது ஒப்பாகும்.

கடவுட்டன்மையைக் கூறும் அதிகாரத்தில் ''உருவைத் தொழுது'' என்பது உலகோருக்கும் மாணாக்கருக்குமாம். சாந்தமடைந் தவர் கடவுளைத் தன்னுள்ளும் உலகெங்கும் காண்பர். தன்மயமா யிருக்கும் பொருளை விக்கிரகத்திலும் புத்தகங்களிலும் அவர்கள் தேடியலைய வேண்டுவதில்லை. வீட்டில் விளக்கை வைத்துக்கொண்டு, அண்டை வீட்டில் நெருப்புப் பிச்சை வாங்கப் போவதையொக்கும் அது. படிப்பற்று, பற்றற்று, எங்கும் கடவுள் காணும் நிலையே சாந்த நிலை. தன்னுளே தானாய்த் தன்மயமாகி, உள்ளொளி யொன்றி யொளிருவர் சாந்தர்.

5. தனிமைத் தவநலமுஞ் சான்றாண்மைத் தொண்டும்,
இனிய வுயிர்த்துணையென் றெண்.

தனிமை = ஆன்மமயமே யொன்றான - தவ நலமும் = தவஞ் செய்யும் மேன்மையும் - சான்றாண்மை = ஞானத்தை வளர்க்கும் - தொண்டும் = கைங்கரியமும் - இனிய = பேரின்பமான - உயிர்த்துணை யென்று = (ஜீவன் பரமாத்மாவுடன் சேரும்) துணை செய்யுமென்று - எண் = எண்ணுவாயாக.

ஜீவன் பரமாத்மாவுடன் ஈரறக் கலத்தலே பூரண சாந்தமாகும். அதற்குத் தனிமையாயிருந்து, தியானஞ் செய்து, புலனை மனத்தி லடைத்து, உடலை மறந்து தவஞ்செய்து, தான் ஆன்மா என்றறிந்து, அவ்வறிவைப் பெருக்கி, உறுதிப்படுத்தக் கூடிய சமாதி சாதகஞ் செய்து இந்த சாதகத்தைத் துணைக்கொண்டு ஜீவனை சுத்தப்படுத்தி, பரமாத்மா வுடன் லயித்திருக்க வேண்டும். அதுவே சுத்த ஆனந்த சாந்த நிலை. தனித் தவமொன்றே யுயிர்த் துணையென்றும்.

## 2. வறுமை நீக்கல்

1. சொற்போரும், விற்போரும் பொற்போருஞ் சோருமே,
நெற்போரோன் றில்லா நெறி.

சொற்போரும் = தர்க்கமும் - விற்போரும் = யுத்தமும் - பொற் போரும் = பொன்னுக்காக யுத்தம் செய்வதும் - நெல் போர் ஒன்று இல்லா, நெறி = உண்ணுவதற்கு நெற்குவியல் இல்லாவிட்டால் - சோருமே = தளர்வதே யாகும்.

பூமி சாந்தமடைவதற்கு வறுமைப்பிணி நீங்க வேண்டும். உண்ண வுணவில்லாவிடில் தர்க்கமும், யுத்தமும், பொன்னாசைப் போரும் சோர்ந்துவிடும். ஜீவராசிகள் சோற்றுத் துருத்திகளாயுள்ளன. தர்க்கம், யுத்தம் பொன்னாசைப் போர் எல்லாம் சோற்றிற்காகவே செய்யப்படுகின்றன. சோறு குறைந்தால் இந்த மூன்றும் குறைந்து விடும். தர்க்கம், அகங்காரப் போர், பேராசை இம்மூன்றையும் அடக்கு வதற்கு உணவைக் குறைக்கவேண்டுமென்பது உட்கருத்து. போனகங் குறையிற் போரகங் குறையும்.

2. சிறுமை, மடமையுஞ் செய்தொழிலிற் சோம்பல்,
வறுமை வளர்க்கும் மகர்.

சிறுமை = அற்பத்தனமும் - மடமையும் = அறியாமையும் - செய்தொழிலில் சோம்பல் = கைத்தொழில் தெரியாத சோம்பேறித் தனமும் - வறுமை = தரித்திரம் - வளர்க்கும் மகர் = பேணும் மைந்தராவர்.

அற்பத்தனமும், மடமையும், கைத்தொழில் கல்லாமையும், சோம்பலுமே வறுமையின் சந்ததிகள். இவர்களால்தான் மனித சமூகம் வறுமை தவிக்கிறது. (உட்பொருள்) மண், பொன் என்ற சிறு பொருள் மதித்துப் பரம்பொருளை மறக்கும் சிறுமையும், தன்னறிவற்ற மடமை யும், இவற்றால் செய்யுங் காரியத்தின் போகச் சோம்பலும், ஞான மார்க்கத்தில் மனிதனைப் போகவிடாமல் வாழ்வை வீணாக்குகின் றன. சிறுமை யற்றால் வெறுமை யில்லை.

3. மண்ணைத் திருத்தியுணா மண்ணில் மயங்குபவர்
என்னபய னீவார் இவர்.

மண்ணை = நிலத்தை - திருத்தி உணா = பண்படுத்திப் பயிரிட்டு உண்ணாது - மண்ணில் = உலகில் - மயங்குபவர் = ஏங்கி நிற்பவர் -

என்ன பயனீவார் இவர் = இவர்கள் என்ன நலத்தை உலகிற்குச் செய்யப்போகின்றனர்.

மண்ணை யுழுதுண்ணாது வறுமையால் மயங்குபவர் பெரிய காரியங்களைச் சாதிக்க எப்படி முடியும். (உட்பொருள்) : - ஆன்மாவின் நிலைக்களமான இவ்வுடலை (க்ஷேத்ரம்) சுத்தவழியில் திருத்தி இன்ப முண்ணாமல் மண்ணோடு மண்ணாகும் உலகப் பொருளில் மயங்கி யிருப்போர், ஜென்மமெடுத்ததற்கு என்ன பயனையடையப் போகி றார்கள். ஏங்கி நிற்போர் தூங்கிச் சாவர்.

4. ஆயிரம்பேர் தங்கு மிடத்தை யடைத்தொருவன்
நீயதுசெய் துண்ணுவதைத் தீர்.

ஆயிரம் பேர் தங்கும் இடத்தை = ஆயிரம் மனிதர் வசிக்கக் கூடிய ஒரு மனையை - ஒருவன் அடைத்து = பணக்காரனான ஒருவனே வளைத்துக்கொண்டு - தீயதுசெய்து உண்ணுவதை = உலகில் தீமை யைச் செய்து ஒருவனாகவே உண்ணுவதை - தீர் = தீர்ப்பாயாக.

ஆயிரம் ஏழைகளிருக்கக்கூடிய மனையில் ஒரு பணக்காரன் இடம்ப வாழ்வு வாழ்வதனால் பிறருக்கு இடமில்லாமற் போகிறது. தன் மாளிகையில் அவன் செய்யும் தீமைகள் பல (உட்பொருள்) ஆயிரங் கதிருள்ள சோதி அல்லது ஆயிர நாமனான கடவுள் இருக்குமிடத்தை அடைத்துக்கொண்டு மாயை என்னும் ஒருவன் உடலிற் புகுந்து தீமை கள் பல செய்கிறான். அத்தீமையைத் தீர்க்கத் தவம்புரிதல் வேண்டும். மாயச் செல்வம் நோய் பலர்க் காக்கும்.

5. ஆடை யுணவுநல் லாற்றா னடைந்தக்கால்,
ஏழை யுலகி லிலை.

ஆடை, உணவு = உடையுணவை - நல் ஆற்றால் = தூய வழி யில் - அடைந்தக்கால் = பெற்றால் - உலகில் ஏழை இலை = உலகில் யாரும் வறிஞனாயிருக்க மாட்டான்.

உடையுணவுகளை யோக்கியமான தொழிலால் அனைவரு மடைந்தால் உலகில் அனைவரும் ஏழ்மையற்று வாழலாம். உடை யுணவிற்காக ஒரு ஆத்மஞானி யாசித்தல் கூடாது. தன் தேவையள வுக்கு அடைய அவன் ஏதாயினும் ஒரு தூய தொழில் செய்யலாம். அப்போது அவன் பேதைபோலிராமல் சுதந்திரமாயிருப்பான். ஆடை யுணவிற் கோடி யலையேல்.

## 3. அடிமை யாகாமை

1. அடிமைப் புலைஞன் அணுகாமை வேண்டும்;
மடமையிருள் போக்க மனம்.

அடிமைப் புலைஞன் = அடிமைத்தனம் என்னுங் கொலை காரன் - அணுகாமை வேண்டும் = நம்மை நெருங்காதிருக்க வேண்டும் - மடமையிருள்போக்க = அறியாமை யென்னும் இருட்டை நீக்க - மனம் = மனமுயற்சி வேண்டும்.

திருக்குலத்தாரைத் தீண்டாதார், சண்டாளர், புலைஞர் என் றுரைப்பது பாபமானது. அடிமைத்தனமே நமது ஆன்ம சுதந்திரத்தைக் கொலைசெய்யும் புலைஞன். அவன் நம்மை நெருங்கிவராமல், மடமை என்னும் இருளைப் போக்கி மனவொளியேற்ற வேண்டும். உலக மாயை நம்மை அடிமைப்படுத்தாது மனத்தூய்மையுடன் மடமையை யகற்ற வேண்டும்.

2. பத்தா றுடனைந்திற் பற்றில்லாப் பண்பினோர்,
புத்தேளி ராவர் புவி.

பத்து = (காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மச்சரம், ஈர்ஷை, இடம்பம், தர்ப்பம், அசூயை ஆக) பத்து தீமைகள் - ஆறு = (உப்பு, உரப்பு, புளிப்பு, துவர்ப்பு, இனிப்பு, கசப்பு ஆகிய) அறுசுவைகள் - ஐந்தில் = பஞ்சேந்திரியங்கள் - (இவற்றில்) - பற்றில்லா = பந்தப்படாத - பண்பினோர் = பெருமையுள்ளவர்கள் - புவி = பூமியில் - புத்தேளிர் ஆவர் = தேவர்களாக விளங்குவார்கள்.

அறுசுவையடக்கினால் ஐம்பொறியடங்கும். ஐம்பொறி யடங்கின் நெஞ்சக மடங்கும். மனமடங்கினால் மாயை யடங்கும். மாயை விலகின் பாசம் மழுங்கும். பாசம் மழுங்கிற் பத்து மடங்கும். பத்து மடங்கிற் சுத்த நிலையாம். சுத்த நிலையே சாந்தநிலை. சாந்தர் கடவுட்டன்மை யடைந்து அமரராவர். அவர்களே பூசுரர். பூசுர ரென்போர் மாசறு தூயர்.

3. தமக்காக வாழுமாஞ் சாலம்; மனிதர்
பிறர்க்காக வாழ்வர் பெரிது.

சாலம் = மிருகக் கூட்டங்கள் - தமக்காக வாழுமாம் = தன் னலத்துடன் உண்டுறங்கிப் பெற்றுப்பேணி வாழுவதாகும் - மனிதர்,

பிறர்க்காக வாழ்வர் = மக்கள் (பெரும்பாலும்) பிறர்க்கெனவே வாழுவர்.

மிருகக் கூட்டங்கள் தம்மைக் கருதியே உண்டு உறங்கி பெற்று வளர்த்துப் பகுத்தறிவின்றி வாழுகின்றன. மனிதன் பிறர் நலத்தைக் கருதி வாழுபவன். தான் உண்பதும் பிறர் ஊழியஞ் செய்யத் திறன் பெறுவதற்கே. மிருகங்கள் சாதாரண அறிவுள்ளன. மனிதன் தன்னறி வுள்ளவன். சாந்தமடைந்த தேவர் அத்யாத்ம அறிவுள்ளவர். சாதாரண அறிவால், தான் பார்க்கும் பொருள்களில் தனக்கு வேண்டியதை மட்டும் மிருகங்கள் அறிகின்றன. மனிதன் தன்னறிவால் பார்ப்பனவும் அறிந்து, உலகினின்றுதான் வேறுபட்டவனாக அறிகிறான். பல எண்ணங்கள் எண்ணுகிறான். அவற்றை மொழிகிறான். இன்ப துன்பங் களை யறிந்து பிறருக்கு உதவுகிறான். தன்னுள்ளிருக்கும் கடவுளை உலகெலாங் காண்பவன் அத்யாத்ம அறிவோன் அல்லது உள்ளறி வோன். அவனே தீர்க்கதரிசி. மனிதன் பகுத்தறிவுடன் பரோபகாரஞ் செய்யவே பிறந்தவன். பிறர்க்கென வாழப்பிறந்தவர் மக்கள்.

4. பலமும் படையுமே பாங்குறுவ தென்னில்,
விலங்கே யடையுமாம் வெற்றி.

பலமும் படையுமே = பசுபலமும், சேனையுமே - பாங்குறுவ தென்னில் = மேலான பலமென்று கருதப்பட்டால் - விலங்கே வெற்றி அடையுமாம் = மிருகங்களே மனிதனைக் காட்டிலும் (தொகையிலும் தேகபலத்திலும்) வெற்றி கொள்ளும்.

எண்ணிக்கையும், தேகபலத்தையும் பார்த்தால் காட்டு மிருகங் களே பலவாகவும் மனிதனைவிடப் பலமாகவும் இருக்கும். ஆனால் மனிதன் மிருகங்களை அடக்குவது தனது புத்தியாலேதான். தேகபலம் மனித பலமன்று. அறிவே மனிதசக்தி. மனிதன் தன்னறிவுள்ளவன். பிறர்க்கென வாழுபவன். அறிவுடை மக்களுக் கறிவே யாற்றல்.

5. அன்பறம், நன்றியிவை செய்திடுநல் லாற்றலிலேல்,
என்னென்ப தாளை யினி.

அன்பு, அறம், நன்றி = ஆருயிர்களுக்கு அன்பையும், தன் னறத்தையும், கடவுளுக்கு விசுவாசத்தையும் - செய்திடும் நல் ஆற்றல் இலேல் = செய்கின்ற நல்ல வல்லமை யில்லாவிடில் - ஆளை = மனிதனை - இனி என்னென்பது = எவ்வகைப் பிராணியென்று இனிக் கூறுவது.

மனிதனுக்குக் கடமைகள் உள்ளன. எவ்வுயிர்களிடமும் அன்பாயிருத்தல், தன் ஆன்மலாபத்திற்குரிய தர்மத்தைச் செய்தல், கடவுளிடம் நன்றி பாராட்டல் என்பன. இவற்றைச் செய்ய மனிதனுடைய மேலான ஆன்ம சக்தியை வளர்க்க வேண்டும். விலங்கு போன்று உண்டுறங்கிக் குட்டிப்போட்டு திரிந்து, பிறரிடம் அன்பின்றி, இன்னல் செய்து, அறமறியாது, கடவுளை நினையாது அலைபவன் மனிதனல்ல. உயர்ந்த சக்தியை மனிதன் வளர்த்துப் பிற வுயிர்களுக்கும், தனது அத்யாத்ம வளர்ச்சிக்கும், கடவுட் பணிக்குமாக வாழவேண்டும். அவனே சாந்தமடைய முடியும். நன்றியும் அறமும் அன்போ டுயர்க.

## 4. உயர்கவிப்பு

1. எத்துணை யெத்துணை, இவ்வுலகின் றொண்டுசெய,
அத்துணை யத்துணை மாண்பு.

எத்துணை, எத்துணை = எவ்வளவுக் கெவ்வளவு - இவ் வுலகின் = இப்புவியின் - தொண்டுசெய = பணியைச் செய்வாயோ - அத்துணை அத்துணை = அவ்வளவுக்கவ்வளவு - மாண்பு = பெருமை.

சாந்தமுந் தவமுந் தனக்கேயல்ல. தானடைந்த ஆனந்தத்தை வருந்தும் மாந்தரும் அடைய அருட்பணிபுரிவதே தவப்பயனாகும். எவ்வளவுக்கெவ்வளவு உலக சாந்தத்திற்காக அருட்பணி புரிகிறாயோ அவ்வளவுக்கவ்வளவு மனித வாழ்வைப் பெற்றதன் பெருமையை யடைவாய். சாந்தங் கண்டு சாந்தம் பரப்பு.

2. நல்லோருக் கூறும் நலஞ்செய்யும்; அல்லோர்க்குச்
செல்வமுஞ் சேர்க்குந் துயர்.

நல்லோருக்கு = நலமே நாடிப் புரிவோருக்கு - ஊறும் = இடர் களும் - நலஞ்செய்யும் = மேன்மையாகவே முடியும் - அல்லோர்க்கு = நன்மையில்லாதவருக்கு - செல்வமும் துயர் சேர்க்கும் = செல்வமும் (காமக் குரோதாதி) துன்பமே செய்யும்.

நல்லவருக்கு அருட்பணியே செல்வம். இவ்வருட்பணி உலகிற் கெல்லாம் பயன்படும். இதனிடையே வரும் இடையூறுகளெல்லாம் முடிவில் அருட்பணியாளனைச் சிறந்த வீரனாக்கிப் புகழுறுத்தும். அவ்விடர்கள் இவனை விளம்பரப்படுத்தும். தீயன் செல்வனாயிருப் பினும் தீய வழியிலேயே தன் செல்வத்தையும் ஆயுளையும் செல வழித்து, தனக்கும், உலகிற்கும் இன்னல் செய்கிறான். விழுமியோர்க் கிடரும் வெற்றிப்படியாம்.

3. தெய்வ வொளிதனையே தேடு; பிறவெல்லாம்,
பொய்யாகும் நீர்க்குமிழி போல்.

தெய்வ ஒளிதனையே தேடு = உள்ளேயிருக்கும் ஆத்ம ஜோதியை சாதனத்தால் தேடியடைவாயாக - பிறவெல்லாம் = அதைத் தவிர மற்றவையெல்லாம் - நீர்க்குமிழிபோல் = நீரில் தோன்றி மறையும் குமிழியைப்போல் - பொய்யாகும் = நிலைக்காது மறைந்து போகும்.

மனிதன் அத்யாத்ம அறிவையடைந்து ஆத்மஜோதியாக வேண்டும். அதுவே தெய்வவொளி. அதன் ஆனந்தத் தன்மையைக் கண்டோனே காண்பான். அதைத் தன்னுட் கண்டவன் உலகெல்லாங் கடவுள் கண்டு தன்னை யண்டின பேருக்கெல்லாங் கடவுளறிவு ததும்ப, தெய்வீக மனிதனாவான். தெய்வவொளி தவிர புறப்புலப் பொருள் களெல்லாம் நீர்க்குமிழிபோலத் தோன்றி மறைவனவே. உள்ளொளி தன்னில் ஊன்றுகவென்றும்.

4. கற்பமும் மூச்சு முடற்குக் கருமநலம்
எப்போதும் ஆவிக்கே யின்பு.

கற்பமும் = (காய சுத்தியாவதற்கு) கல்பசாதகஞ் செய் தலும் - மூச்சும் = மூச்சடக்குவதும் - உடற்கு = இவ்வுடலை நமது பணிக்கு உறுதிசெய்யவேதான் - கருமநலம் = அருட்பணியினால் வரும் புண் ணியம் - எப்போதும் = என்றும் - ஆவிக்கே இன்பு = உயிருக்கே பேரின் பந்தரும்.

காயகற்பமுண்பதும், யோகமும், உடலை வலுப்படுத்தி நமது பணிக்குத் தயாராக்கும். இத்தோடு நின்றால் பயனில்லை. நமது யோக சக்தியைக் கொண்டு அருட்பணி புரிதல் வேண்டும். உடல் பொருள் ஆவி மூன்றையுங் கோயிலுலகப் பணிக்குக் கொடுத்து, அதிலேயே கரைய வேண்டும். அப்புண்ணியமே நமது உயிருக்குத் துணையும் இன்பமு மாகும். கற்பம் ஹடயோகத்திற்கும், மூச்சு ராஜயோகத்திற்கும் குறிப்பாம். கரும நலமே, பெருங்களிப் பாகும்.

5. பிறர்க்காக வாழ்வே யிறவாமை; பீடாம்
அறவழி யாற்றல் அறிவு.

பிறர்க்காக வாழ்வே = பிறர்க்கு அருட்பணிசெய்து வாழ்வதே - இறவாமை = உலகத்தின் உள்ளத்தில் என்றும் இறவாது வசிப்ப தாகும் - பீடாம் = உயர்ந்த - அறவழி = அறநூலிலிருக்கும் நெறிப்படி - ஆற்றல் = ஒழுகுதல் - அறிவு = சிறந்த ஞானப்பயனாகும்.

பிறர்க்கென வாழ்பவன் மறக்கப்படான். உலகின் உள்ளத்தில் இறவாமலிருப்பான். அறவழியில் நடப்பவன் கடவுளின் கட்டளை நெறியில் நடப்பவனாவான். அறவழி நின்றே யமரவாழ் வெய்து.

## 5. தன்னை ஈசனுக் கீதல்

1. **சுடர்காற் கடல்புவியைத் தோற்றிநமை யாளுங்**
**கடவுட்கீந் துன்னைக் களி.**

சுடர் = சூரியனையும் - கால் = காற்றையும் - கடல்புவி = கடலையும் பூமியையும் - தோற்றி = உண்டாக்கி - நமை ஆளும் = நம்மையெல்லாம் ஆட்கொள்ளும் - கடவுட்கு = கடவுளுக்கு - உன்னை ஈந்து களி = உன்னையே உரிமையாக்கிப் பேரின்பமெய்து.

நம்மைக் கடவுளுக்கு ஆத்ம ஸமர்ப்பணஞ் செய்வதே சிறந்த சாந்த நிலைக்கு வழி. கடவுளின் சர்வ சக்தியால் உண்டான இயற்கையில்லாவிடின் உலகமில்லை, உயிர்களில்லை. சூரியன், சந்திரன், கடல், பூமி, காற்று முதலியவெல்லாம் படைத்துக் கருணையுடன் அளித்து நம்மைக் காக்குங் கடவுளுக்கே நமது உடல் பொருளாவியெல்லாந் தருவோம். கடவு ளன்பிற் கரைதி மனமே!

2. **பைப்பணமும் போன்ற பரும வுடலுயிரை,**
**மெய்க்கடவுள் மெய்த்தொண்டிற் பெய்.**

பைப்பணமும் போன்ற = பணப்பைக்கும் அதிலுள்ள பணத்திற்குமுள்ள சம்மந்தம் போன்ற - பரும உடல், உயிரை = தூல தேகத்தையும், ஆவியையும் - மெய்க்கடவுள் = சத்தியப்பொருளான கடவுளின் - மெய்த்தொண்டில் = நிலையான பணிகளில் - பெய் = இடுவாயாக.

பையும் பணமும் ஒன்றுக்கொன்று சொந்தமல்ல. ஆனால் இரண்டும் ஒரு தலைவனுடையதாகும். அதுபோலவே இவ்வுடலும் ஆவியும் ஒன்றுக்கொன்று உறவல்ல. இரண்டும் கடவுளுடைமையாகும். உடலை அவன் மயமான ஆருயிர்ப் பணிக்கும், உயிரை அவன் வழிபாட்டிற்கும் தியானத்திற்கும் தருதலே அவனன்பிற் கரைவதாகும். கடவுட் பணியே மெய்ப்பணி. கடவுளே சத்தியப் பொருள்.

3. **எனதென தென்ன லிடராகும்; என்றும்;**
**அவனது வென்ன வருள்.**

எனது எனது என்னல் = நான் செய்தேன், என்னது இது என்று அகங்காரம் பேசுதல் - இடராகும் = துன்பங்களைத் தரும் - என்றும் =

எப்போதும் - அவனது என்ன = எல்லாப் பொருள்களும் அவனுடைமை என்று நினைத்தால் - அருள் = கடவுளின் அருள் எய்தும்.

என்னது, யான் என்னும் ஆணவம் நமது ஆன்ம வளர்ச்சியைக் கெடுக்கும். கடவுளை நம்பினால் கடவுளே துணையாவார். தான் என்று செய்தால் தானே அக்காரியத்தின் வெற்றி தோல்விகளுக்கு பாத்தியம். அவனுக்கு முழுதும் நம்மையீந்து அவனுடைய அருட் பலத்தைப் பெறுவோமாக. இதுவே பூர்ணமான ஆத்ம ஸமர்ப்பண மாகும். நம்மை ஆண்டவனின் கருவியாக எண்ண வேண்டும். அவன் இக்கருவியைத் தன் மனப்படிப் பயன்படுத்தும்படி அவனுக்கே நம்பித் தந்துவிட வேண்டும். அவன் கைக்கருவி ஆருயி ருடலும்.

4. அன்புண்மை யாக வமர்ந்த கடவுட்குன்
னன்புண்மை தன்னை யளி.

அன்பு, உண்மையாக அமர்ந்த கடவுட்கு = அன்பும் சத்தி யமுமே தன்மயமாக எங்கும் இருக்கும் ஆண்டவனுக்கு - உன், அன்பு, உண்மை தன்னை அளி = உனது பக்தியையும், சத்தியமான வாழ்வையுமே நிவேதனஞ் செய்வாயாக.

ஆண்டவன் அன்பு வடிவாய் அனைத்தையும் படைத்து, உண்மை வடிவாய் உயிரெலாமுள்ளான். மனச்சாட்சியினில் வாய்மையா யுள்ளான். குவலயமெல்லாங் கோயிலமர்வான். அன்புப் பணியும் சத்திய வாழ்வுமே ஆண்டவனுக்கே அளித்தற்குரியன.

5. உள்ளே யிலகி யுயர்ந்திடுமச் சோதியனை
யுள்ளவுற வீந்தே யுணர்.

உள்ளே, இலகி = எல்லா வுடலுள்ளும் ஒளிர்ந்து - உயர்ந்திடும் = எல்லாவற்றிற்கும் ஆதியும், நடுவும் அந்தமுமாக ஓங்கிடும் - அச் சோதியனை = அந்த சோதிக்கடவுளை - உள்ள உறவு ஈந்தே உணர் = மனவுறவு செய்தே, மனத்தை அவனுடன் சேர்த்தே, அறிவாயாக.

கடவுள் ஜோதி வடிவாக நமக்குள் இருக்கிறார். நமது மனத் தால் எண்ணியெண்ணி அவனோடு ஒன்றுபடுதல் வேண்டும். அவனைத் தூலவிழியால் காணமுடியாது. மனதை சுத்தப்படுத்தினால்தான் அவனை ஆனந்தமயமாக அறியலாம். சுத்தத்தால் அவனை உணர்ந்து களிப்பதே முடிவான இன்பநிலை. உள்ளுற வீந்தே யுயர்பொரு ளொன்று.

**அறநூல், சாந்தவியல் முற்றிற்று.**

---------

# 15. சாதனவியல்

முடிவாக, மனித வாழ்க்கை சுத்த நிலையில் பூரணத்வ மடைந்து அமர வாழ்வெய்துவதற்கு உரிய பக்திநெறி, நீதி தர்மம், ஞானம், வழிபாடு முதலிய சாதனங்கள் விவரிக்கப்பட்டுப் பராசக்தி யின் வாழ்த்தொலியோடு அறநூல் முடிகிறது.

## 1. பக்தி

1. கடவு ளொருவர்; களித்துமனத் தெல்லா
விடத்திலு முள்ளவரென் றெண்.

கடவுள் ஒருவர் = (எல்லாவற்றிற்கும் பொதுத் தந்தை யான) ஆண்டவன் ஒருவன் - மனத்தில் களித்து = மனத்தில் ஆனந்தங் கொண்டு - எல்லாவிடத்திலும் உள்ளவர் என்று = உள்ளும் புறமுமான எல்லா இடங்களிலும் உள்ளார் என்று - எண் = துதிசெய்.

கடவுள் ஒருவர். அவர் மனம் ஆனந்தமயமானது. அந்த ஆனந் தத்தால் அனைத்தையும் ஆட்கொண்டு எங்கெங்குமுள்ளார். அவரை நம்பிக்கையுடன் தொழு.

2. அன்பிற்செய் தொண்டென்று மற்ப மெனினுமே,
யின்பமா யேற்கு மிறை.

அன்பில் செய் தொண்டு = பக்தியினால் செய்யப்பட்ட ஏதாயினும் அருட்பணி - அற்பம் எனினுமே = சிறிதளவாயினும் - என்றும் = எக்காலும் - இறை = கடவுள் - இன்பமாய் ஏற்கும் = களிப் புடன் ஏற்றுக்கொள்வார்.

பக்தியினால் செய்யப்பட்ட காரியம் உலகம் பொருட் படுத்தக் கூடாதளவு சிறிதேனும், கடவுள் அதை மதித்து இன்பமாக ஏற்பார். ஆதலின் நம்மாலான அருட்பணியைச் செய்வோம். உலகப் புகழை எதிர்பார்க்க வேண்டாம். இரகசியமாக நன்மை செய்தாலும் கடவுள் அறிந்து ஏற்பார். தொண்டின் அன்பிற்கே மதிப்பு. அன்பி னளவே அவனருள் எய்தும்.

3. பசிக்குத் தொழிலும் பரத்திலே நெஞ்சாய்,
இசைபெற்று வாழ்வீர் இனிது.

பசிக்குத் தொழிலும் = பசிப்பிணி நீக்க ஒரு யோக்கியமான தொழிலோடு - பரத்திலே = கடவுளிடத்திலே - நெஞ்சாய் = மனதை ஊன்றி - இசைபெற்று = புகழுற்று - இனிது வாழ்வீர் = இன்பமாக வாழ்வீராக.

அற்பவிஷயமான உணவிற்குக் கடவுளை வரங்கேட்க வேண்டாம். உழுதுண்ண நிலத்தையும், விளைவையும் உழைக்க அவயவங்களையும் ஆண்டவன் ஈந்துள்ளான். நம் முயற்சியால் ஒரு தொழில் செய்து பிழைத்து மனதைக் கடவுளிடம் வைக்க வேண்டும். தேகம் லௌகீகமாக உழைத்தாலும் மனம் கடவுளிடத்தில் தான் இருத்தல் வேண்டும். உலகில் புகழ்பெற்று இன்பமுடன் வாழலாம். இசையாவது தன் பிறப்புவினையை முடிக்கும் புகழ். அவ்வினையைக் கடவுட் கருத்துடன் செய்தால் புகழொடு முடியும். அப்போது அவ்வினை நலத்தால் உலகின் உள்ளத்தில் நீடுவாழலாம்.

4. உணவு முயக்கிவற்றி னூங்குணர் தொண்டன்,
மணமின்றி வாழ மதிப்பு.

உணவு முயக்கு இவற்றின் = ஊண், புணர்ச்சி இவ்விரண்டை விட - ஊங்கு உணர் = மேலாக எண்ணும் - தொண்டன் = அருட் பணியாளன் - மணமின்றி வாழ = விவாகமில்லாமல் = வாழ்ந்தால் - மதிப்பு = பெருமையாகும்.

உணவிற்கும் காமப் புணர்ச்சிக்குமே உலகில் நாம் வர வில்லை. நமக்குக் கடவுள் கொடுத்த கட்டளை வினையாற்றவே வந்தோம் என்னும் உணர்ச்சியுள்ளவன் தன் முழு ஆயுளையும் அருட் பணிக்கே இடுதல் நலம். அப்போது குடும்பத்தை அவன் பேண நேர மிருக்காது. குடும்பக் கவலையிருப்பின் அருட்பணி முற்றுறாது. ஆதலின் அப்படிப்பட்டவர் பிரமச்சாரியாக வாயினும் துறவியாகவா யினுமே இருத்தல் நலம். அறப்பணிக்கழகு துறப்புள தொண்டன். கடவுட் பணிக்காக எதையும் நன்றியுட னளிக்கலாம்.

5. பொன்றா வொளியுன்னுட் பொலியும் வகையெண்ணி,
என்றுமிட ரஞ்சா திரு.

பொன்றா ஒளி = அழிவற்ற சோதிக் கடவுள் - உன்னுள் = உனது மனத்தில் - பொலியும் வகை = ஒளிரும் தன்மையை - எண்ணி = நினைத்து

- என்றும் = எப்போதும் - இடர் அஞ்சாது இரு = உனது அருட்பணியின் வழியில் வரும் துயர்களைக் கண்டு பயப்படாமல் இரு.

நமக்குள் சோதிவடிவாக என்றுமுள்ள ஆண்டவனுள்ளான். அவன் ஏவலான வினை செய்யும்போது வரும் இடர்களை அவன் மேலே பாரம்போட்டுப் பொறுமையுடன் செய்தல் வேண்டும். ஊனுடல் போயினும் ஒளியுடல் நிலையே.

## 2. நீதி

1. ஓமி னுயரொலியும், உண்மையி னன்மதமுங்
காமி னிழிவில்லை காண்.

ஓமின் உயர் ஒலியும் = ஓங்காரத்தைக் காட்டிலும் சிறந்த நாதமும் - உண்மையின் நன்மதமும் = சத்தியத்தைக் காட்டிலும் நன்மையான சமயமும் - காமின் = காமத்தைக் காட்டிலும் - இழிவு இல்லை காண் = கீழான செயலும் இல்லை என்பதை அறி

வேதங்களெல்லாம் ஓங்காரத்தில் அடங்கியுள்ளன. அது எங்கும் நிறைந்தது. யோக நலத்தால் அதை நம்முட் கேட்கலாம். அதைக் கேட்டு அதில் லயித்தவருக்கு அதுவே பேரின்பம். கவிகளெல்லாம் ஓமொலியினின்றே பிறக்கின்றன. அவ்வொலியை எப்போதும் சொல்லிக் கொண்டிருத்தல் நலம். உண்மையே எல்லா மதங்களின் உயிராகும். திரிகரணங்களால் பொய்யாது சத்தியவாழ்வு வாழ்தலே சுத்தமடைவதாகும். மனச்சாட்சியின்படி உண்மையாக ஒவ்வொருவரும் நடந்தால் வெவ்வேறு மதங்களின் முத்திரையும் சச்சரவுமின்றி உலகம் சாந்தமாகும். காமச்செயலே உலகில் தன்னலமான இழிசெயல். நிஷ்காம்யச் செயலே உயர்செயல். மனத்தில் காமறுத்து உண்மையாய் நடந்து ஓமொலி போன்று எங்கும் பரவிய கடவுளை வழிபடலே உயர்ந்த நீதியாகும்.

2. வசைகோபம், வஞ்சம், வழக்கு விடுத்தே,
நசையற்று வாழு நயந்து.

வசை = குற்றம் - கோபம் = சினம், - வஞ்சம் = மோசம் - வழக்கு = தர்க்கம் - விடுத்தே = நீக்கியே நயந்து பரிவுடன், அன்புடன் - நசையற்று = பேராசையின்றி - வாழு = வாழ்வாயாக.

மனத்தழுக்கின்றி, கோபம், வஞ்சம், வாதம், பேராசை இவற்றை விடுத்து, அனைவரிடமும் அன்புபேணி, முத்தூய்மையுற்று

வாழவேண்டும். ஒவ்வொருவரும் இப்படி வாழ்ந்தால் மனிதவாழ்வு பயன்பட்டு உலகில் சாந்தம் நிலவும்.

3. சுற்றும்பேய் நெஞ்சைச் சுருக்கிச் சுகவழியே,
பற்றற்று நிற்கப் பயில்.

சுற்றும் = உலகமாயையில் திரியும் - பேய் நெஞ்சை = பேய் போன்று முரட்டுத்தனமான மனதை - சுருக்கி = (பொறிகளின் வழியே வெளிவிடாமல்) அடக்கி - சுக வழியே = பேரின்ப வழியில் - பற்றற்று நிற்க = போகப் பொருள்களில் அபிமானமற்றிருக்க - பயில் = பழகுவாயாக.

மனம், புலன்களின் வழியாகத் தப்பி, உலகமாயையில் திரிந்து நமது சக்தியைச் சிதறடிக்கிறது. புலன்கள் வழிச் செல்லாது, மனதை நிறுத்தி, சித்த விருத்தியை யொடுக்கி, பேரின்ப வழியில் திருப்பி, புறப்பொருள்களில் பற்றொழித்து, சுத்த ஆனந்த சுகநிலை யடையச் சாதனஞ் செய்ய வேண்டும். நீண்டகால தத்துவ முயற்சியாலேதான் இந்நிலை யெய்தும். சுற்று நெஞ்சைச் சுகவழி திருப்பு.

4. ஈசனுக் கேற்ற வினியபடைப் பிற்குதவுந்
தாசஞ்செய் வஃதே தவம்.

ஈசனுக்கு ஏற்ற = ஆண்டவன் சட்டத்திற்குச் சம்மதமாகவும் - இனிய படைப்பிற்கு = அவன் ஆனந்தத்திற் படைத்த ஜீவராசிகளுக்கு - உதவும் = நற்கதியடையப் பயன்படும் - தாசஞ் செய்வஃதே = அருட் தொண்டு புரிவதே - தவம் = தவமாகும்.

அறநூற் கூறும் ஏதாயினும் ஒருண்மையைப் பிடித்தொழு கினால் அதுவே கடவுளையடைய வழிகாட்டுந் தவமுமாகும். கட வுளுக்குச் சம்மதமான தர்மநெறியில் தாசஞ் செய்து ஆன்மகோடிகளை சுத்த நெறியில் திருப்புவதே தவம். படைப்பின முய்யும் பணியெலாந் தவமே.

5. அன்பரு ளின்சொல், அஹிம்ஸையோ டொப்புரவாம்,
உன்னத வெண்ண முறு.

அன்பு, அருள், இன்சொல் அஹிம்ஸையோடு = அன்பு, கருணை, இனியசொல், தீங்கில்லாமை முதலிய குணங்களுடன் - ஒப்புரவாம் = பிறருக்கு உதவியான - உன்னத எண்ணம் உறு = சிறந்த நினைப்பை அடைவாயாக.

எண்ணமுயர இன்பமுயரும். அன்பும் அருளுங் கொண்டு மனத்தூய்மை யடைக. இன்சொல்லால் வாக்கு சுத்தமடைக. அஹிம்ஸா தர்மத்தாலும் பரோபகாரத்தாலும் காய சுத்தமடைக. இத்தகைய குணங்களால் சுத்த நிலையடைய எப்போதும் எண்ணுவாயாக. தூய நிலையிற் றுலங்கிட வெண்ணு.

## 3. ஞானம்

1. பிறப்பு மிறப்பும் பெருக்குங் கருமஞ்
சிறப்பிழி வீனுந் தெரி.

கருமம் = உன் வினையே - பிறப்பும் இறப்பும் பெருக்கும் = செனன மரணத்தை அதிகமாக்கும் - சிறப்பு, இழிவு ஈனும் = (அவ்வினையே) உனக்குப் புகழும், சிறுமையும் தரும்.

தன் வினையே ஒருவனுக்குப் பிறப்பீந்தது. அதைச் செய்யக் கொடுத்த காலம் முடியின், இறப்பு வருகிறது. அவ்வினையை ஒழுங் காக முடிக்காவிடின் முடிக்குமட்டும் ஜெனன மரணம் வந்துகொண் டிருக்கிறது. அதை ஒழுங்காக முடித்தால் கடவுளின் அருளைப் பெறுஞ் சிறப்புண்டாகிறது. அதை மறந்து நாம் தன்னல வாழ்வில் மூழ்கி னால் இழிவும் தீமையும் உண்டாகிறது. இதுவே கருமத்தின் மருமம். வினையறிந் தாற்றி விடுதலைச் சுகஞ்சேர்.

2. இன்னாமற் பொய்யாம லீச னொளியெண்ணி
யுன்னறத் தொண்டி லுழை.

இன்னாமல் = யாருக்குந் தீமை செய்யாமல் - பொய்யாமல் = மனச்சாட்சிக்குப் பொய்யாக நடக்காமல், - ஈசன் ஒளி எண்ணி = உன் னுள்ளிருக்குங் கடவுளொளியையே தியானஞ்செய்து - உன் அறத் தொண்டில் = ஆண்டவனால் உனக்குக் கொடுக்கப்பட்ட தர்மப் பணியில் - உழை = பாடுபடுவாயாக.

உலகில் தருமத்தை நிலைநிறுத்த ஒவ்வொருவனுக்கும் ஒரு அறவினை தரப்பட்டுள்ளது. அதை அறிந்து அஹிம்சையுணர்ச்சி யுடன் மனச்சாட்சிக்குப் பொய்யாகாமல் உண்மையாக, அஹங்கார மின்றி, உன்னுள் பொன்றா ஒளியாயிருக்கும் கடவுளை எண்ணிச் செய்வாயாக. மனக்கரி மகிழ வுனக்குறு வினைசெய்.

3. என்னென்ன வெந்துயர்க ளெய்தினு மிவ்வுலகின்,
அன்னையை யெண்ணே யகம்.

என்னென்ன வெந்துயர்கள் எய்தினும் = எத்தகைய கொடிய துன்பங்கள் வந்தாலும் - இவ்வுலகின் அன்னையை = உலகமாதாவான பராசக்தியை - அகம் எண்ணே = மனத்தில் தியானிப்பாயாக.

அருட்பணிசெய்யும் வழியில் எத்தகைத் தீமையுற்றாலும், உலகன்னையான பராசக்தியை மனத்தில் நினைப்பாயாக. அல்லது உலகன்னையின் பொறுமையைப் பார்த்து நீயும் பொறுமையோடிரு. குழந்தை போன்று உன்னை யெண்ணி, சக்தி யன்னையைப் பணிந்தால் அவள் உன்னைக் கவனமுடன் காப்பாள். சக்தி யன்னையை எத்ததியுந் தொழு.

4. மனைவிமக் கட்குமேல் மாண்பெறுதொண் டொன்றும்
உனக்கு மிருப்பதனை யுன்.

மனைவி மக்கட்குமேல் = பெண்சாதி பிள்ளைகளுக்கு நீ செய்ய வேண்டிய கடமைக்கும் மேலே - மாண்பெறு தொண்டு ஒன்றும் = மிகவும் உயர்ந்த ஒரு பணியும் - உனக்கும் இருப்பதனை உன் = எல்லா மனிதரையும் போல உனக்கும் உள்ளதை எண்ணுவாயாக.

ஒவ்வொருவனுக்கும் தன் குடும்பத்திற்குச் செய்ய வேண்டிய காமியப் பணியைத் தவிரத் தன் ஆன்மா ஈடேறச் செய்யும் அத்யாத்மப் பணியும் உள்ளது. குடும்பத்திலேயே தன்னை மறக்காமல் ஆண்டவன் குடும்பமான உலகிற்கு அருட்பணிசெய்து தனது அன்பைப் பரப்பும் பணியும், தன் பற்றை விலக்கி முக்தி சாதகஞ் செய்யும் பணியும் உள்ளன. நல்ல ஞானமடைந்து உடலின் வினை இரகசியத்தை உணர்ந்து, அதைச் செய்து முக்தியடையும் பணியே உயர்பணி. வந்த வினையை மனமறிந்தாற்று.

5. வஞ்ச மழுக்காறு, மையலெலா மற்றநிலை,
செஞ்சுடர் சேருந் தெரி.

வஞ்சம் = வஞ்சகமும் - அழுக்காறு = பொறாமை - மையல் = மயக்கம் - எலாம் = இத்தீய குணங்களெல்லாம் - அற்றநிலை = விலகிய சுத்தநிலையில் - செஞ்சுடர் சேரும் = கடவுளின் செய்ய அருட்சோதி உன்னைச்சேரும் - தெரி = அறிவாயாக.

வஞ்சம், பொறாமை, மாயைக் குணங்களற்றால், வாழ்வு சுத்தப்படும். சுத்த நிலையில் கடவுளின் அருட்பெருஞ்சோதி உன்னை வந்தடையும். அப்போதே உன்னுள்ளே தன்மயமான கடவுளை உணர்வாய்.

# 4. வழிபாடு

1. இதயம்பூ மந்திரமும் இன்சொல்லா யுன்றன்
றுதியாக வேயருளாய் தொண்டு!

இதயம்பூ = நெஞ்சே மலராகவும் - மந்திரமும் இன்சொல் லாய் = பிறருக்கு (நான் சொல்லும்) இதமொழிகளே மந்திரமாகவும் - தொண்டு = ஆருயிர்களுக்கு நான் செய்யும் பணியே - துதியாகவே அருளாய் = உன் தோத்திரமாகி அருள்புரிவாய்!

சுத்தனே! என் இதயமே உன்னைப் பூசிக்கும் புனிதமான மலர்; உனது திருவடி என்னுள்ளத்தில் என்றுமிருக்கட்டும்! என் மன மலரை உன்னடியிலிட்டேன். இதுவே யான் உனக்குச் செய்யும் அர்ச்சனை! நீ கோயிலிருக்கும் மக்கட் குலத்திற்கு நான் பேசும் இன்சொல்லே எனது மந்திரம். வாய்மன மடங்காத வுன்னை வாயாற் புகழ ஒண்ணுமோ! வாயாற் சொல்லி உன் பெயரை எச்சிலாக்க மாட்டேன்! உனது களிப்பிற்படைத்து நீ திருமேனியாகக் கொண்ட ஆருயிர்களுக்கு யான் செய்யும் அருட்பணியே உன்னை மதித்துத் துதித்ததாகுக! சுத்தனே இதுவே என் வழிபாடு! ஏற்றருள் புரிக!

2. உலகமென் வீடா யுணர்ந்தே யதற்கு
நலஞ்செயு மாற்றலே நல்கு.

உலகம் என் வீடாய் உணர்ந்தே = பூமியையே என் வீடாக அறிந்து - அதற்கு நலஞ்செயும் = அதற்கு நன்மை செய்யும் - ஆற்றலே = சக்தியே - நல்கு = தருவாயாக.

சுத்தனே! இவ்வுலகமே என் வீடு என்ற உணர்வெழுக! உலகோரெல்லாம் எனது ஒருகுல வுறவினராகுக!

போரும், இருளும், வறுமையும், அடிமைத் தனமுமின்றி அனைவரும் இன்புறும் அருட்பணி செய்து முடிக்க எனக்கு உன் சக்தியைத் தருவாயாக!

3. உண்டுறங் காதுலகி லுற்ற கருமத்தைத்
திண்கருத்தோ டாற்றத் திகழ்.

உண்டு உறங்காது = நான் உணவிலும் உறக்கத்திலும் வீணாளைக் கழியாது - உலகில் உற்ற கருமத்தை = எந்த அருள் வினையாற்ற உலகிற்கு வந்தேனோ அப்பணியை - திண் கருத்தோடு = உறுதியான மனத்துடன் - ஆற்ற - செய்துமுடிக்க - திகழ் = எப்போதும் (என் வழிகாட்டியாக) பிரகாசிப்பாயாக!

சுத்தனே! உண்பதும் உறங்குவதுமாக என் வாணாள் வீணாளாக வேண்டாம்! நீ ஒரு சிறந்த கருமத்தை எனக்குக் கொடுத்தாய்! அதற்காக உலகிற்கு வந்தேன்! மனவுறுதியுடன் அப்பணியைச் செய்து முடிக்க எனக்கு வழிகாட்டும் ஜோதியே, அமரவாழ் வெய்தும் பணியில் என்ன இடர்வரினும் பொறுத்து வெற்றிபெற நீயே என் துணை!

4. உன்றன் றிருமுகமே யுன்னிடினே யெவ்வழியுந்
தந்துதவி செய்திடுவாய் தாய்.

எவ்வழியும் உன்னிடினே = நான் எந்த மார்க்கத்தில் நின்று நினைத்தாலும் - தாய் = உயிர்களுக்குத் தாய் போன்ற சுத்தனே - உன்றன் திருமுகமே = உனது அழகிய முகமே - தந்து உதவி செய்திடுவாய் = தரிசனமாகத் தந்து என் முயற்சிகளுக்குத் துணை செய்வாயாக!

சுத்தனே! என்றாய்! உலகில் எம்மதத்தின் நெறியில் நின்று எவ்வகையாக நினைத்தாலும் உன்னுடை ஜோதி முகத்தின் தரிசனமே என் முன் இலகட்டும்!

5. மெய்யுணர் வெய்தி, யறிவோங்கி, மேதினியில்
உய்வழி யீந்தே யுயர்த்து.

மெய்.... மேதினியில் = உண்மையான கடவுளுணர்ச்சி பெற்று, அத்யாத்ம ஞானமோங்கி உலகில் - உய்வழி ஈந்தே உயர்த்து = மக்களெல்லாம் சுத்தநிலை யடைந்து பேரின்பத்தில் உஜ்ஜீவிக்கும் வழியைத் தந்து மனித வாழ்வை அமர வாழ்விற்கு உயர்த்துவாயாக.

சுத்தனே! இவ்வுலகம் பொய்வழியிற் சென்று துயரப்படுகிறது. உன்மயமான கடவுளுணர்ச்சியை அதற்குக் கொடுத்து உண்மையை அறிவி! ஆத்மஞானம் பொங்கி அனைவரும் உய்க! மனிதவாழ்வு

அமரவாழ்விற்கு உயர்க. இதையெல்லாம் செய்வதற்குக் கருவியாக என்னையே உனக்கு ஆத்ம சமர்ப்பணஞ் செய்தேன்!

## 5. வாழ்த்து!

1. நல்லவ ரோங்க! நலமோங்கிப் பூவெங்கும்,
எல்லோரும் வாழ விசை.

பூ எங்கும் = உலகெல்லாம் - நல்லவர் ஓங்க = நலத்தையே எண்ணிப் பேசிச் செய்யும் சுத்தர் பெருகுக! - நலம் ஓங்கி = மங்களம் பெருகி - எல்லோரும் வாழ = எல்லாவுயிர்களும் நீடுழி வாழ - இசை = மங்களகிதம் பாடுவாயாக.

சுத்தனே! இவ்வுலகில் மனோ வாக்குக் காய சுத்தமுள்ள நல்லவர்கள் பெருகுக; அவர்களுடைய நலப்பணியால் எங்கும் மங்களம் பொங்குக! பூமியில் எல்லா வுயிர்களும் சாந்தமாக நீடுழி வாழ இசை.

2. வறுமை யிருள்நீங்கி, வையம் வளமெய்திப்
பெருமையாய் வாழ்கப் பிறப்பு.

வறுமை = தரித்திரம் - இருள் = மடமையும் - நீங்கி = விலகி - வையம் = பூமி - வளம் எய்தி = (அறிவு, பயிர், பொருள், நீர், நிலம்) வளங்களைப் பெற்று - பிறப்பு = மானிடச் சென்மம் - பெருமையாய் வாழ்க = சிறப்புற்று வாழட்டும்!

சுத்தனே! பாவங்களுக்கெல்லாங் காரணமான, வறுமை யும், மடமையும் உலகைவிட்டு ஒழியுமாக! அருள்வளமும் டொருள் வளமுமுற்று உலகு அறிவும், தொழில் முயற்சியும், சுதந்திரமும், செல்வமும், பசுமையுமுற்று விளங்குமாக! மனிதப்பிறப்பு அருட் பணியால் பெருமை யடையுமாக!

3. போரற்றுப் பாரிற் பொறுமை விளங்கியுயிர்,
சீர்பெற்று வாழ்க, செறிந்து.

பாரில் = உலகில் - போர் அற்று = சண்டையெல்லாம் நீங்கி பொறுமை விளங்கி = சாந்தம் நிலவி - உயிர் = உயிர்க்கணங்க ளெல்லாம் - சீர்பெற்று செறிந்து வாழ்க = சிறப்புற்று ஒற்றுமையுடன் வாழுக!

சுத்தனே! உலகிலுள்ள போரெல்லாம் ஒழியட்டும்! மக்கள் மனத்தில் பொறுமை பெருகட்டும்! உலகிற் சாந்தம் நிலவுக!

எல்லாவுயிர்களும் சாதி சமயப் பேராசைச் சச்சரவின்றி உன்னருளில் ஒற்றுமையுடன் வாழட்டும்! மனிதர் சீர்பெருகி விளங்குக!

4. **உண்மை, உயிரேண், உறுதிநலத் தொண்டருடன்,**
**என்றும்பூ வாழ்க விசை.**

உண்மை = சத்தியமும் - உயிர் ஏண் = ஆத்ம பலமும் - உறுதி = வைராக்கியமுங் கொண்ட - நலத்தொண்டருடன் = நன்மையே பரப்பும் அறவோருடன் - என்றும் பூ வாழ்க இசை = என்றைக்கும் உலகு வாழும்படி மங்கலச் சொல் வழங்கு.

சுத்தனே! சத்தியமும் ஆத்மசக்தியும், தவ வுறுதியுங் கொண்ட நல்லத்தொண்டரான அறவோர் உலகெங்கும் நிறைக! உலகம் என்றும் மங்களமாய் வாழ்க!

5. **அறமும், அறவோர், அறச்செயலும் பூவில்**
**உறவுற்று வாழ்க உவந்து!**

பூவில் = உலகில் - அறமும் = தர்மமும் - அறவோர் = தர்மத்தைப் பரப்புவோரும் - அறச்செயலும் = அறவழியிற் செய்யப்படும் வினை களும் - உறவுற்று உவந்து வாழ்க = ஒன்றுபட்டு மங்களமாக வாழட்டும்!

சுத்தனே! அறநூல் எங்கும் ஒளியுடன் பரவட்டும்! அறம் வாழட்டும், அறவோர் திருக்கூட்டம் வாழட்டும்! அறச்செயல்கள் வாழட்டும்! மக்களெல்லாம் தர்மமறிந்து தர்மசங்கஞ் சேர்ந்து தர்மச் செயலுடன் ஒற்றுமைப்பட்டு ஒரு குலமாக, மங்களமாக வாழட்டும்! சுத்தன் வாழ்க! சுத்த தர்மம் வாழ்க! சுத்த தர்ம ஸங்கம் வாழ்க!

ஒளிவளருலகே! உயர்களிப் பெய்தாய்!
உள்விழி திறந்தற நூலைத்
தெளிதிநிசுத்த ஸமரஸ நிலையிற்
றிகழுதி, சுதந்திர மாக!
கலியினியில்லை! சத்திய யுகமே
கதிர்விடுங் காட்சியைக் காணாய்!
அளிதருமமுத வருட்பெருஞ் சோதி
யமரவாழ் வடைதியென் குழந்தாய்!

**சுத்தசக்தி யருளுக!**

**சுவாமி சுத்தானந்த பாரதியார் அருளிய அறநூல்**
**மூலமும், உரையும் முற்றிற்று.**

## உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சென்னை - 600 113.

## அண்மை வெளியீடுகள்

| | |
|---|---|
| தொல்காப்பியப் பொருளதிகாரம் ஆங்கில மொழிபெயர்ப்பு | 40.00 |
| சங்க இலக்கியம் கவிதையியல் நோக்கு சிந்தனைப் பின்புல மதிப்பீடு | 110.00 |
| நாடகமேடை நினைவுகள் | 160.00 |
| தமிழின் பா வடிவங்கள் | 35.00 |
| உலகத் தமிழாராய்ச்சி நிறுவன சுவடி விளக்க அட்டவணை (சித்த மருத்துவம்) | 75.00 |
| சுவடி விளக்க அட்டவணை (இலக்கியம்) | 70.00 |
| சுவடி விளக்க அட்டவணை (மெய்யியல் - நா.புறவியல்) | 70.00 |
| அரசினர் கீழ்த்திசைச்சுவடி நூலகத் தமிழ்ச் சுவடிகள் விளக்க அட்டவணை தொகுதி - I | 110.00 |
| ஆளும் தமிழ் | 28.00 |
| பொருள் புதிது | 35.00 |
| புதிய அமைச்சகம் புரிந்த பணிகள் | 10.00 |
| சின்னணைஞ்சான் கதை | 75.00 |
| தொல்காப்பியம் இலக்கியக் கோட்பாடுகள் | 110.00 |
| இயற்கை மொழியாய்வு-தமிழ் | 75.00 |
| சூடாமணி நிகண்டு: ஒரு சொல் பல்பொருள் விளக்கம் | 65.00 |
| தமிழ் நாடகமேடை முன்னோடிகள் | 40.00 |
| இராசேந்திரன் (நாடகம்) (ம.ப.) | 50.00 |
| தமிழ் வள்ளல் பாண்டித்துரையார் | 25.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி-தமிழாக்கம் - பகுதி 1 | 95.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி-தமிழாக்கம் - பகுதி 2 | 60.00 |
| பாணினியின் அஷ்டாத்தியாயி-தமிழாக்கம் - பகுதி 3 | 90.00 |
| தேவநேயப் பாவாணரின் மொழியியல் - வரலாற்றுக் கொள்கை (அ.சொ.) | 35.00 |
| தமிழ்த் தூது (ம.ப.) | 20.00 |
| யாப்பருங்கலம் (ம.ப.) | 170.00 |
| முல்லை | 25.00 |
| பரணர் | 85.00 |
| திராவிட மொழியின் மூவிடப் பெயர் (ம.ப.) | 40.00 |
| பாஸ மகாகவியின் இரட்டை நாடகங்கள் | 36.00 |
| **Persona in Tolkappiyam** | 50.00 |
| **Studies in Tamil Prosody and Poetics** | 45.00 |
| **Tamil India** | 40.00 |

**அறநூல்** 38.00